இலாஹி.

# குத்பா மஹோபந்நியாஸங்கள்.




திருத்திய மூன்றும் பதிப்பு.

PRINTED BY
ISLAMIYA PRESS, TRICHY.

1929.

குத்பா

# மஹோபந்நியாஸங்கள்

இஃது




திருத்திய மூன்றாம் பதிப்பு.


திருச்சிராப்பள்ளி,
இஸ்லாமியா பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

1929.


கலிகோ பைண்டு,  விலை ரூ 1—4—0.

கிடைக்குமிடங்கள்:—

மவ்லவி, மு. முஹம்மது யாகூப் சாயபு,
போஸ்ட் பாக்ஸ் நெ. 954,
இரங்கூன்.

நவீன கதா புக் டிப்போ,
122, மங்கமாரி வீதி,
இரங்கூன்.

பஞ்ச சக்தி அண்ட் கோ.,
28 நெ. கல்லி,
இரங்கூன்.

எம். ஏ. ஷாஹுல் ஹமீது அண்ட்
ஸன்ஸ் கம்பெனி,
ஹை ரோட், திருவல்லிக்கேணி,
மதராஸ்.

கா. தி. அபுல் ஹஸன்,
ஜெம் மர்செண்ட்,
151 நெ. 2-வது குறுக்குத்தெருவு,
கொழும்பு.

எம். பக்கீர் முஹிய்யத்தீன் அண்ட் கோ.,
34 நெ. சோலியாத் தெருவு,
சிங்கப்பூர்.

என். கே. முஹம்மது கௌஸ்,
119 நெ. ஏ. சோலியாத்தெருவு,
பினங்கு.

இஸ்லாமியா நூற்பிரசுரச் சங்கம்,
பாலக்கரை, திருச்சினப்பள்ளி.

# உமர் பாறூக்.

---

இஃது நபிபெருமான் அவர்களின் இரண்டாவது கலீபாவாகிய பாறூகே அஃலம் அமீருல் முமீனின் ஹஜரத் உமர் (றளி) அவர்களின் ஜீவிய சரித்திரத்தின் முதற்பாகம்.

"அல்லாமா ஷிப்லி (ரஹ்)" அவர்களால் உருது பாஷையில் எழுதப்பெற்றுள்ள "அல்பாறூக்" என்னும் மிக்கக் கியாதிபெற்ற நூலின் மொழிபெயர்ப்பாகும். இஃது மேல் நாட்டினர்களாலும் நன்கு மதிக்கப்பெற்று அவர்களுடைய பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பெற்றுள்ளது. துருக்கிக் குடியரசின் தலைவராகிய முஸ்தபா கமால் பாதுஷாவின் கட்டளையின் மீதே துருக்கிய பாஷையில் இஃது மொழிபெயர்க்கப் பெற்றதென்றால் இதனருமையையும், பெருமையையும் யாவரும் எளிதில் அறிந்துகொள்ளலாம்.

இந்நூல் இதுவரையில் தமிழில் மொழிபெயர்க்கப் பெறாதிருந்தது. ஆகவே, யாவரும் எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய எளிய நடையில் தமிழில் மொழி பெயர்த்து அச்சிடப்பெற்றுள்ளது.

டிம்மி கிரௌன் 1/8 சைஸில் 299 பக்கங்களைக் கொண்டுள்ளது.

இதன் கிரயம் ரூ. **1—8—0** தான்.

கிடைக்குமிடம்:—

இஸ்லாமிய நூற்பிரசுரச் சங்கம்,

பாலக்கரை, திருச்சி.

# இமாம் கஸ்ஸாலி.

இஸ்லாம் மார்க்கத் தத்துவங்கள் யாவும் அறிவுக்கும், ஆராய்ச்சிக்கும் முற்றிலும்பொருத்தமானவையென்று தெளிவுபட விளக்கிக்காட்டியவர்களில் "இமாம் கஸ்ஸாலி (றஹ்) அவர்கள்தான் முதன்மையானவர்கள். 800 வருடங்களுக்குமுன்னர் இவர்களால் இயற்றப்பெற்ற நூற்கள் ஒவ்வொன்றும் இன்று வரை மேல்நாட்டினராலும் பொன்னேபோற்றப்படுகின்றன. இவர்களுடைய ஜீவிய சரித்திரமும், இவர்களாலியற்றப்பெற்ற நூற்களும் ஆசியா, ஐரோப்பா முதலியதேசங்களின் பலபாஷைகளிலும் பிரசுரிக்கப்பெற்றிருக்கின்றன.

இவர்களுடைய ஜீவிய சரித்திரசம்மந்தமாகப் பல பாஷைகளிலும் எழுதப்பெற்ற நூற்களிலிருந்து எடுத்து தமிழில் இஃது எழுதப்பெற்றுள்ளது.

இப்பெரியாரால் இயற்றப்பெற்ற நூற்களெவை? அவைகளின் தன்மைகள் என்ன? அவர்களால்இவ்வுலகுக்கேற்பட்ட நன்மைகள் என்ன? என்ற இவ்விஷயங்கள் யாவும் மிக்க விரிவாகவும், தெளிவாகவும் இதிற் கூறப்பெற்றுள்ளன.

இதனைக்கொண்டு யாவரும் பிரயோஜனம் அடையும் பொருட்டு இதனை இயற்றுவதற்கேற்பட்ட செலவைவிட மிகக் குறைவாகவே இதன் கிரயம் ஏற்படுத்தப்பெற்றுள்ளது.

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

نَحْمَدُ اللهَ وَنُصَلِّي عَلٰى رَسُوْلِهِ

# முகவுரை.

---

புகழனைத்தும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. முஹம்மது (ஸல்) அவர்கள்மீதும் அன்னார் கிளைஞர் தோழர்கள்மீதும் அவனது கருணையுண்டாவதாக. தமிழைத் தாய்பாஷையாகக் கொண்ட முஸ்லிம்களாகிய நாம் வசிக்கும் தமிழ்நாட்டில் குத்பா என்னும் மார்க்கோபதேசம் அறபி பாஷையில் நடைபெற்றுவருகின்றது. அப்பாஷையறியாத நம்மவருக்கு அவ்வுபந்யாசங்கள் கருதிய பயனைத்தருவதில்லை. தேசபாஷையில்இவ்வுபந்யாசம் செய்வது பலவித ஆட்சேப சமாதானத்திற்கு இடங்கொடுப்பதாக இருந்து கொண்டிருக்கிறது. இவ்வாட்சேபத்திற்கு இடமில்லாமல் குத்பாக்களின் பிரயோஜனத்தை முஸ்லிம் சகோதரர்கள் அடையுமாறு செய்ய வேண்டுமாயின், அவற்றின் அர்த்தத்தை தேசபாஷையில் அச்சிட்டு வழங்குதல் உத்தமமெனத்தோற்றியது. அவ்வாறே சில நண்பர்களும் வேண்டிக்கொண்டனர். ஆதலின் இரங்கூன் சோலியாப்பள்ளியில் கடந்த ஓராண்டு முழுவதும் ஓதப்பட்டும் அரேபியா முழுவதும் கையாளப்பட்டும் வரும் "இப்னு நபாதா" என்னும் குத்பாக்கள் எம்மால் மொழி பெயர்க்கப்பட்டு, துண்டுப்பிரசுரங்களாக அச்சடிக்கப்பட்டும் பிரதிவாரமும் வழங்கப்பட்டுவந்தது. இப்பிரசுரங்கள் யாவையும் ஒருங்கேதிரட்டி வெளியாக்கப் படுவதே

இக்கிரந்தமாகும். இவ்வநித்திய உலகவாழ்க்கையே பெரிதென்று கருதி மறுமையை முற்றிலும் மறந்துவிடலே மானிடரில் பெரும்பாலானோரின் சுபாவமாயிருக்கிறது. மேலும் மறுமைப்பயனைக்குறித்து அலட்சியமாயிருத்தலே பல பாதகங்களுக்கு மூலகாரணமாக முடிகிறது. எப்பொழுதேனும் மானிடர் மரணித்தல் நிச்சயமென்பதையும், மரணத்திற்குப்பின் இறைவன் சமுகத்தில் ஒவ்வொருவரும் நிற்கும்படி நேரிடுமென்பதையும், நினைவுகூறும் எந்த விவேகியும் பாவங்களைச்செய்ய அஞ்சுவான் என்பது திண்ணம். இக்காரணத்தினலேயே முற்காலத்திய பெரியார் குத்பா உபதேசங்கள் ஒவ்வொன்றிலும் மரணத்தின் உண்மையையும் மறுமையின் கஷ்டங்களையும் விஸ்தாரமாகக் கூறுவதையே விசேஷ நோக்கமாகக் கொண்டிருக்கின்றனர். ஆதலின் இக்கிரந்தம் முஸ்லிம்களுக்குக் கிடைப்பதற்கரிய பொக்கிஷமாக அமைந்திருக்கின்றதென்று சொல்லவேண்டும். அறபியில் மாத்திரம் குத்பா ஓதப்படும் நகரங்களில் ஜும்ஆத்தொழுகைக்குப்பின் இதிலிருந்து ஒவ்வொரு உபந்நியாசத்தைப் படித்துக்காட்டி அதன்மூலமாக பள்ளிக்குத் தொழுகச்செல்லும் முஸ்லிம்கள் பலனடையும்படி செய்வதற்கு இந்நூல் மிகவும் ஏற்றமானதாக இருக்குமென்று நம்புகிறோம். முற்றுமுணர்ந்தவரில்லையாதலின் இம்மொழிபெயர்ப்பில் எம்மையறியாது நேர்ந்துள்ள பிழை ஏதேனுமிருப்பின் அதனைத் திருத்திக்கோடல் அறிஞர் கடனென்று விண்ணப்பித்துக்கொள்கின்றோம்.

இங்ஙனம்,

மு. முஹம்மது யாகூபு, (பாகவி.)

# மூன்றாம் பதிப்பின் முன்னுரை.

---

சர்வபுகழும் அல்லா(ஹ்)வுக்கே (உரியது.) அவனது இறதித்தூதராகிய முஹம்மது (ஸல்) அவர்கள்மீதும், அன்னார் கிளைஞர் தோழர்கள்மீதும், சதா அவனது கருணையுண்டாவதாக! இம்மூன்றாம் பதிப்பு பளபளப்பான கிளேஸ் காகிதத்தில் உங்கள் மனதைக் கவரும்வண்ணம் அச்சிடப் பெற்றுள்ளது. இது அனேக புதிய சீர்திருத்தங்களுடனும் முன்பதிப்புகளிலில்லாத இரண்டாம் குத்பாவின் மொழி பெயர்ப்புடனும் வெளிவந்துளது. சென்ற இரண்டு பதிப்புகளும் அச்சான சிலமாதங்களுக்குள் வெகு விரைவில் செலவாகி விட்டதிலிருந்தே இம் மஹோபந்நியாஸம் நந்தென்னாட்டு தமிழ் மக்களுக்கு எவ்வளவு பிரயோஜனத்தை கொடுத்திருக்கின்றதென்பதை எண்டுரைக்காமலே நன்கறிந்துகொள்வீர்கள். இதற்கு முன்னுள்ள பதிப்புகளின் பிரதிகளை ஆதரித்ததேபோல் இதையும் இனி எம்மால் வெளியிடப்படும் கிதாபுகளையும் ஆதரித்து எமக்கு உற்சாகமூட்டி இஸ்லாமியக் கடமையை நிறைவேற்றுவதுடன், இவ்வடியேனையும் தங்கள் துஆவில் மறக்காமலிருப்பீர்களாக! எல்லாம் வல்ல இறைவன் நம்மவர்க்கு தன்னருள் பாலிப்பானாக! ஆமீன்.

---

# முஹர்ரம் மாதம்,

# முதலாம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. நிச்சய மாய்த்தனித்தவனும் இணையற்றவனுமான அல்லா(ஹ்)வைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறு எவருமில்லை எனவும், நபிகள்பிரான் முஹம்மது (சல்) அவர்கள் அவனது அடிமை யும் திருத்தூதரும் ஆவரென்றும் பூரணமனதுடன் சாக்ஷி யம்பகருகின்றேன். இறைவனே! உனது நபியாகிய எங்கள் தலைவர் முஹம்மது (சல்) அவர்கள்மீதும், அவர்கள் கிளை யார் தோழர்கள்மீதும் எந்நாளும் உனது கருணையையும் சாந்தியையும் சொரிந்தருள்புரிவாயாக.

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக் கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நற்போதனை செய்கின்றேன். அவனைப் பயந்தவர்கட்கே எந்நாளும் சாந்தியுண்டாகுக.

மானிடர்களே! உங்களிடம் புதிய வருஷம் வந்திருக் கிறது. இவ்வருஷத்தை பூரண மனதுடனும் மரியாதை யுடனும் வரவேற்புச் செய்யுங்கள். உங்கள் ரப்பின் உத் திரவுகளை கண்ணியப்படுத்துங்கள். விலக்கப்பட்ட தீய கருமங்களைவிட்டகலுங்கள். உங்கள் நபிபெருமான் (சல்)

அவர்களை நேசியுங்கள். ஈமான் இஸ்லாம் முதலிய அம்சங்களில் உங்கள்மீது கடமையாக்கியவைகளைக் கைக்கொண்டு நடந்துகொள்ளுங்கள். அறிந்துகொள்வீர்களாக! ஒவ்வொருவருஷமுடிவிலும் ஒவ்வொரு திங்கள் வியாழக்கிழமைகளிலும் நீங்கள் செய்யும் கருமங்களை நிச்சயமாய் உங்கள் நபிகள்பிரான் (சல்) அவர்களுக்கு எடுத்தோதப்படுகிறது. அப்படி எடுத்துக் காட்டும்பொழுது தீய கன்மங்கள் செய்தவனின் மானக்கேட்டிற்கு யாதுரைப்பேன்! எப்பொழுதும் பாவத்தின்மீதே மூழ்கிந்திருப்பவனது வெட்கக்கேட்டிற்கு யாது சொல்வேன் !!

அல்லா(ஹ்)வினடிமைகளே! இங்கு சற்று சிந்தித்துப் பாருங்கள். நன்மையானதாயினும் தீமையானதாயினும் நீங்கள் செய்யும் ஒவ்வொரு கருமங்களையும் உங்கள் நாயகம் முஹம்மது (சல்) அவர்களிடம் எடுத்துக்காட்டும்பொழுது தீயகருமம் செய்தவனைப்பற்றி அன்னார் என்ன நினைக்கக் கூடும்? நீங்களோ அப்படிப்பட்ட தீயகாரியங்களைச் செய்யும்பொழுது எவருக்குந் தெரியாமல் செய்கிறோமெனக் கருதுகின்றீர்கள்; நீங்கள் செய்த கெட்டகருமங்கள் ஒரு சமயம் உங்களில் சிலருக்கு வெளிபாகிவிடின் உங்கள்பால் அவர்கள் கொள்ளும் அதிருப்தியை நிவர்த்திசெய்ய எத்துணையோ தந்திரங்களைச் செய்கின்றீர்கள். அல்லா(ஹ்)வினிடம் என்ன தந்திரம் செய்வீர்கள்? கெட்ட கருமங்களைச் செய்யவேண்டாம்! செய்யவேண்டாம்!! அல்லா(ஹ்)வைப் பயந்து அவனது வணக்கத்தை இம்மாதந்தொடுத்தாயினும் அதிகப்படுத்திக்கொள்ளுங்கள். அப்படிச் செய்வீர்களேல் முடிவில் அல்லா(ஹ்) உங்களுக்கு நற்கூலியைத்தாக்கூடும்.

நபிகள் நாயகமவர்களின் செய்கையைத் தொடர்ந்தவர்களாக இம்மாதம் ஒன்பதாம் பத்தாம் தெய்திகளன்று நோன்பு பிடியுங்கள். நாயகம் (சல்) அவர்கள் இம்மாதம் பத்தாம் நாள் நோன்பு பிடித்தார்கள். மேலும் "அடுத்த வருஷம்வரை ஜீவித்திருப்பேனுயின் ஒன்பதாவதும் பத்தாவதுமான இரண்டுநாட்களிலும் நிச்சயமாய் நோன்பு நோற்பேன்" என அருளிச்செய்தார்கள். அவ்வருஷத்திலேயே அல்லா(ஹ்) அன்னாரின் ஆன்மாவைக்கைப்பற்றிக்கொண்டான் ஆஷூரா நாளாகிய பத்தாம் நாளன்று உங்கள் சுற்றத்தார்கள் பேரில் அதிகமாய்ச் செலவு செய்யுங்கள். ஏனெனில் நிச்சயமாயது உங்களுக்கு கண்ணியமான நாளாகும். இஸ்லாமிய வருஷப்பிறப்பாதலால், இம்மாதத்தில் சகாத்து விதிக்கப்பட்டவர்கள் அதை நிறைவேற்றுங்கள். அப்படி நிறைவேற்ருத குற்றத்திற்காக இறுதி நாளில் நீங்கள் பரிதாபப்படுவது பிரயோஜனம் தராது. நிச்சயமாய் அல்லா(ஹ்) தாவூத் நபி (அலை) அவர்களுக்கு பின்வருமாறு வஹியறிவித்தான் :—"ஓ தாவூதே! பொருள் என்னுடைய பொருள், ஏழைகள் என்னைச்சேர்ந்தவர்கள், பொருளுடையோர்கள் என்னுடைய பிரதிநிதிகள்; என்னைச்சேர்ந்தவர்கள்மீது என்னுடைய பிரதிநிதிகள் உலோபத்தனம் செய்வார்களாயின் அவர்களை என் வேதனையை அனுபவிக்கும்படி செய்வேன். மேலும் அப்படிச்செய்வது எனக்கொரு பெரிதல்ல." சகோதரர்களே! இவ்வார்த்தைகளைச் சற்று ஊன்றி கவனித்து ஆண்டவனிடத்தில் உங்கள் பாவங்களைப்பொறுக்கக்கோருங்கள். இறைவன் நம்மனைவரையும் அவன் ஆக்ஞைக்குட்பட்டவர்களுள் சேர்த்தருள்புரிவானாக.

"உங்கள் வியாதிகளுக்கு சதகா கொடுத்தல் என்னும் மருந்தைச் செய்துகொள்ளுங்கள். உங்கள் பொருள்களை சகாத் கொடுப்பதினால் காத்துக்கொள்ளுங்கள். பிணிகளுக்குப் பிரார்த்தனை செய்யுங்கள்'' எனவும், அல்லா(ஹ்) ஒருவனுக்குப் பொருளைக்கொடுத்து அவன் சகாத்தை அவன் நிறைவேற்றவில்லையாயின், இறுதிநாளில் அந்தப்பொருளை பாம்பாக சிருஷ்டிக்கப்படும், "நானே உன்னுடைய பொருள், நானே நீ சேகரஞ்செய்த முதல்'' எனச்சொல்லிக்கொண்டு, அப்பொருளுடையவனது இரண்டு கன்னங்களையும் அப்பாம்பு கொத்தும்'' எனவும், நபிகள்பிரான் (சல்) அவர்கள் அருளிச்செய்து பின்பு இந்த ஆயத்தை ஓதினார்கள்.

"அல்லா(ஹ்) தன்னருளால் கொடுத்த பொருளை ஈயாமல் உலோபிகளாக இருப்பவர்கள் தங்கள் உலோபத்தனத்தை தங்களுக்கு நன்மையாகக் கருதவேண்டாம்; எனினும், அது அவர்களுக்கு கெட்டதாகவே முடியும். உலோபத்தனம்செய்த பொருளை இறுதிநாளில் பாம்பாக சிருஷ்டித்து அவர்கள் கழுத்தில்போட்டு வேதனை செய்யப்படும். அல்லா(ஹ்)வுக்கே வானம் பூமியின் பாத்தியம் உண்டாயிருக்கிறது. அவன் நீங்கள் செய்பவைகளை நன்கறிபவன். (அல்-குர்ஆன் 3 : 179, வியாக்கியானம்.)

---

# முஹர்ரம் மாதம்,

# இரண்டாம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் மாத்திரமே வணக்கத்திற்குரியவன். அவனது திருத்தூதரும் எம்பெருமானருமாகிய முஹம்மது (சல்) அவர்கள் மீதும் அவர்களது கிளையார் தோழராதியோர்மீதும் இறைவனது கருணைமாரி சொரியப்படுவதாக.

மனிதர்களே! சர்வவல்லமையுமுடைய ஆண்டவனது ஆணைவழிநின்று அவனுக்கு அஞ்சி நடந்துகொள்ளும்படி உங்களுக்கு எச்சரிக்கைசெய்கிறேன். சீரும்சிறப்பும் தங்கிய முஹர்ரம் என்னும் இம்மாதத்தில் நன்மைசெய்வோர் இரட்டிப்பான பலனைப்பெறுவார்களென்பதை உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். சகோதரர்களே! இம்மாதத்தில் தான் நமது நபிகள்பிரான் (சல்) அவர்களது திருப்பேரரும் ஹஸ்ரத் அலி (ரலி) அவர்களின் புத்திர ரத்தினமுமாகிய ஹுசைன் (ரலி) அவர்கள், உலக நன்மைக்கு அஸ்திவாரமாக முஸ்லிம்கள் முதன்முதல் ஸ்தாபித்த பிரஜாதிபத்தியம் என்னும் மஹத்தான கொள்கையை நிலைநிறுத்தும்பொருட்டுத் தங்கள் உயிரைத்தியாகஞ் செய்தார்கள். அவர்கள் ஹிஜ்ரீ அறுபத்தொன்றும் வருடம் முஹர்ரம்-மீ 10-உ

யன்று கர்பலா பிரதேசத்தில் வதை செய்யப்பட்டார்கள். குடியரசுக் கொள்கையை உலகத்திற்கு முதன்முதல் அளித்தது இஸ்லாம்தான். இக்கொள்கையின் கீழ் சய்யிதினு ஹுசைன் (ரலி) அவர்கள் முஸ்லிம்களுக்குத் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட வேண்டியவர்களாயிருந்தார்கள். இத்தேர்தலுக்கும் கொள்கைக்கும் விரோதமாக முஸ்லிம்களுள் ஒரு வகுப்பினர் மற்றொருவரை வம்ச பரம்பரைக் கொள்கையின்கீழ் தலைவராக்கியதன் பலனாகவே கர்பலா யுத்தம் நடைபெற்றது. ஆகவே சய்யிதினு ஹுசையின் (ரலி) அவர்கள் பிரஜாதிபத்தியக் கொள்கையை உலகில் நிலை நாட்டுதற்கு முதன்முதல் உயிரைத் தியாகஞ்செய்த புண்ணிய சீலராவர்.

சகோதரர்களே! கர்பலாவில் நடந்த யுத்தமானது முஸ்லிம் உலகத்தையே நிலைகுலையச்செய்து விட்டது. எங்கள் நபிகள்பெருமான் (சல்) அவர்களால் அஸ்திவாரமிடப் பெற்று, அவர்களுடைய நான்கு பிரதானமான தோழர்களாலும் ஏனைய முஸ்லிம்களாலும் மென்மேலும் உறுதியாகவும் விசாலமாகவும் நிறுவப்பெற்ற, இஸ்லாமிய இராஜ்ஜியம் என்னும் ஒப்புவமையற்ற கட்டிடத்தைத் தகர்த்தெறியும்வேலை, கர்பலா பிரதேசத்தில் ஆரம்பிக்கப் பட்டதென்று சொல்லவேண்டும். அந்தோ! பயங்கரமும் கோரமுமான பல சம்பவங்கள் நிகழ்ந்த அந்நாளையும், அதன்பின்னர் முஸ்லிம்களுக்குள் ஏற்பட்ட பிளவையும் அப்பிளவு காரணமாக இஸ்லாமிய இராஜ்ஜியங்களுக்கு நேர்ந்த கதியையும் நினைவு கூரும் எந்த முஸ்லிமும் கண்ணீர் உகுக்காதிருக்கமுடியாது. சய்யிதினு ஹுசைன்

(ரலி) அவர்கள் வீரபுருடராகத் தங்கள் பிராணனைத் தியாகஞ்செய்த தினத்திலிருந்து மூன்று நாட்கள்வரை வானம்இருண்டு,யுகப்பிரளயகாலம் வந்துவிட்டதோவென்ற சந்தேகத்தையும், அச்சத்தையும், ஏக்கத்தையும், ஜனங்களுக்கிடையே எழுப்பிவிட்டதென்று சரித்திராசிரியர்கள் கூறுகிறார்கள். இவ்வடையாளம் முஸ்லிம் அரசாங்கங்களின் பிற்கால வீழ்ச்சியை முன்னறிவித்ததுபோலும்!

சகோதரர்களே! மேற்காட்டிய துக்ககரமான சம்பவங்கள் நடந்தேறிய இம்மாதத்தில் முஸ்லிம்களாகிய நீங்கள் செய்யவேண்டிய கடமை யாதென்றும், அதற்கு மாறாக நம்மில் பலர் யாது செய்துகொண்டிருக்கிறார்களென்றும் நீங்கள் கவனிக்கவேண்டாமா? இஸ்லாத்தின் நன்மைக்காக உயிர்களைத் தியாகஞ்செய்த புண்ணியசீலர்கள்பால் நீங்கள் நன்றியறிதலுள்ளவர்களாயிருக்கிறீர்களா? எந்தக் கொள்கைக்காக அவர்கள் பிராணனை விட்டார்களோ, அக்கொள்கை பூர்த்தியாகுமாறு உங்கள் ஆயுளில் எப்பொழுதாவது முயற்சி செய்திருக்கிறீர்களா? அவ்வாறு செய்வதற்கு விரோதமாக சமீபகாலத்தில்கூட இந்திய முஸ்லிம்கள் தங்கள் சகோதர முஸ்லிம்களை எதிர்த்து யுத்தஞ்செய்து அவர்களது இரத்தத்தை ஒட்டிய சம்பவத்தை நினைக்கும்பொழுது நமக்குத் துக்கமும் வெட்கமும் உண்டாகின்றது. நோன்பு நோற்பதிலும் தர்மஞ் செய்வதிலும், ஆடம்பரமற்ற முறையில், பொதுவாக முஸ்லிம்களுடையவும், சிறப்பாக இஸ்லாமிய அரசாங்கங்களுடையவும் நன்மையைக் கருதி யாது செய்யலாமென்ற சிந்தனையிலும் கழிக்கவேண்டிய இம்மாதத்தின் முதற்பத்து தினங்களை,

தற்கால முஸ்லிம்கள் வேடிக்கையிலும் விளையாட்டுகளிலும், பலவித வேஷத்துடன் கூத்தாடும் கேளிக்கைகளிலும் கழிக்கிறார்கள்! மார்க்கத்திற்கு முற்றிலும் விரோதமானதும் விக்கிரக ஆராதனைசெய்யும் காபிர்‌ன்களின் உற்சவங்களை நிகர்த்ததுமான பஞ்சா வைத்தல், அதற்குத் தூபதீபங் காட்டுதல், அதைத்தூக்கிக்கொண்டு ஊர்வலமாகச் செல்லுதல், தீக்குழியில் இறங்கல் முதலிய இகழ்ச்சிக்கும் நகைப்பிற்கும் இடமான பல செய்கைகள் நமதுநாட்டில் பலவிடங்களில் இன்னும் நடைபெறுகின்றன இது சம்மந்தமாகச் சில ஊர்களில் கலகங்களும் நடக்கின்றன. அந்தோ! பரிதாபம்! சகோதரர்களே! இனியாவது இப்படிப்பட்ட வீணான அஞ்ஞானச் செய்கையில் முஸ்லிம்கள் தலையிடாது தங்கள் கடமைகளைச் செவ்வனே புரியும்படி முயற்சிப்பீர்களாக.

எமது நபிகள்பிரான் (சல்) அவர்கள் பின்வருமாறு திருவுளம்பற்றியிருக்கின்றார்கள். (1) "என்னுடைய குடும்பத்தாரில் எனக்கு மிகவும் பிரியமானவர்கள் ஹஸனும் ஹுஸைனுமாவர். (2) ஹுஸைன் புராத் நதியருகே கொல்லப்படுவாரென்று எனக்கு ஜிப்ரயீல் வஹ்' அறிவித்தார்."

"ஏ நன்னம்பிக்கை பூண்டவர்களே! மதுபானம் அருந்தலும் சூதாடுதலும், நாட்டிவைக்கப்பெற்ற விக்கிரகங்கள் பஞ்சா முதலியவைகளை ஆராதித்தலும், சோதிடம் பார்த்தலும், பைசாசக்கிரியைகளுள் இழிவானவைகளாம்; நீங்கள் ஜெயம்பெறும்பொருட்டு அச்செய்கைகளைத் தவிர்ந்திருப்பீர்களாக" (அல்—குர்ஆன் 5 : 90, வியாக்கியானம்.)

---

# முஹர்ரம் மாதம்,

# மூன்றும் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் இணைதுணையற்றவன் மாறுதலடைதலின்றும் தூய்மையானவன்; நன்னம்பிக்கை வைத்து நல்லவழியில் நடந்தவர்களை நரகத்தைவிட்டும் காப்பாற்றுபவன். நிச்சயமாய் வணக்கத்திற்குரியவர், தனித்தவனும் இணைதுணையற்றவனுமான அல்லா(ஹ்)வைத்தவிர வேறு எவருமில்லை எனவும், நிச்சயமாய் நபிகள்பிரான் முஹம்மது(சல்) அவர்கள் அவனது அடிமையும் திருத்தூதரும் ஆவரென்றும் சாக்ஷிபம் பகருகின்றேன். எங்கள் இறைவனே! எங்கள் தலைவராகிய முஹம்மது(சல்) அவர்கள்மீதும் அவர்கள் கிளையார் தோழர்கள் மீதும் எந்நாளும் உனது கருணையையும் சாந்தியையும் சொரிந்தருள்வாயாக.

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நல்லுபதேசஞ்செய்கின்றேன்; அவனைப் பயந்தவர்கட்கே நற்கதியுண்டாகும்.

மானிடர்களே! கியாமநாளின் அறிகுறிகள் தொடர்ந்து தோன்றிக்கொண்டிருப்பது அறிவுடையோர்களின் பார்

வைக்கு மறைந்ததன்று. எவ்வாறு கியாமநாளின் அறிகுறி கள் அதிகப்பட்டுக்கொண்டு செல்லுகின்றனவோ அவ்வாறே நீங்கள் வரம்பைக்கடந்து நடப்பதும் அதிகமாய்க்கொண்டே போகிறது. வரம்புகடந்து நடப்பதற்கு முக்கிய காரணம், நீங்கள் ஆகிறத்தை முற்றிலும் மறந்துவிட்டதேயாகும். ஒவ்வொருவரின் செய்கைகளும், அவரவரது எண்ணம் எப் படிப்பட்டதென்று காட்டுபவையாயிருக்கின்றன. உங்கள் செய்கைகளினுல் கிஞ்சித்தும் அல்லா(ஹ்)வுக்கு பயப்பட வேண்டுமென்ற எண்ணமிருப்பதாய் நீங்கள் காட்டிக்கொள் வதில்லை. அல்லா(ஹ்) நீங்கள் செய்பவைகளையெல்லாம் நன்கு கவனித்துக்கொண்டேதானிருக்கிறுன். மேலும் நாளுக்குநாள் பாவஞ்செய்வதிலும், ஒருவரையொருவர் குற்றஞ்சாட்டி தூஷிப்பதிலுமே கண்ணுங்கருத்துமா யிருக்கின்றீர்கள். சிறிய சிறிய விஷயங்களுக்காகவெல்லாம் குபிர்பத்வா பிறப்பித்து உங்களுக்கிடையில் ஒற்றுமையைக் குலைத்துவிடுகிறீர்கள். உங்களின் பாவங்கள் உங்களுடைய கண்களுக்கு சிறியனவாய்த் தோன்றுகின்றனபோலும்! ஆனதினுல்தான் அப்பாவங்களை மிகவும் அற்பஜந்துக்களான கொசுக்களுக்குச் சமமாகக் கருதுகிறீர்கள். அந்தோ பரிதாபம்! அப்பாவங்கள் மலையைப்போல என்றைக்கு உங்கள் கண்களுக்குத்தெரியுமோ! உங்களுடைய பாவங் களின்மீது நீங்கள் கவனத்தைச்செலுத்துங்காலம் எப்பொழுது வருமோ!! ஒவ்வொருவரும் அவரவர் செய்கையின்மீது கவனத்தைச் செலுத்தித் தம்மைச் சீர் திருத்தம்செய்வது முக்கிய கடமையாகும். சகோதரர்களே! காலத்தின்பேரில் பழிசுமத்துகிறீர்கள். இரவு பகலாய்

மாறி மாறிவரும் காலம் மாறுதலடைவதில்லை. ஆனால், உங்களின் செயல்களே நாளுக்கு நாள் மாறுதலடைந்து வருகின்றன. எத்துணையோ பஹிரங்கமான மார்க்கச் சட்டங்களை மாறுதலடையும்படி செய்துவிட்டீர்கள். எத்துணையோ ஹாரமானவைகளை ஹலாலைப்போல் செய்துவருகிறீர்கள். உங்களில் அநேகருக்கு அதைப்பற்றிய கவலை கிஞ்சித்துமில்லை. அதை அருவருப்பவர் மிகச்சிலரே. அபாரமான எத்துணையோ வஸ்துக்களை கேவலமாயும், கேவலமான அனேக வஸ்துக்களை அபாரமாயும் நினைக்கின்றீர்கள். உங்களுள் சிறியோர், பெரியோர்களை கண்ணியப்படுத்தாமலும், பெரியோர் சிறியோர்மீது, இரங்காமலும், தவறி நடக்கிறீர்கள். இவ்வாறெல்லாம் மனம் போனபோக்காய் நடப்பதினின்றும் யாதொரு கஷ்டம் வந்துவிடுமாயின் அது உங்கள் கைகளால் சம்பாதித்ததென்றே ஞாபகத்தில்வைத்துக்கொள்ளுங்கள். அல்லா(ஹ்) நீங்கள் செய்பவைகளில் அநேகத்தை பொறுக்கக்கூடும். ஆனால் அல்லா(ஹ்) பொறுக்கக்கூடுமென இஷ்டம்போல் செய்வது மார்க்கத்தில் தடுக்கப்பட்டதென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

சகோதரர்களே! "இறுதிநாளின் அடையாளங்கள் வந்துகொண்டிருக்கின்றன; பாவங்கள் அதிகப்பட்டுக்கொண்டிருக்கின்றன" என்று அநேகர் வாயால்மட்டும் சொல்லிக்கொள்வதல்லாமல், இறுதிநாளை விசுவாசித்த மூமின்கள் செய்யவேண்டிய கிரியைகளைப்போல் யாதொன்றும் செயலளவில் செய்வதில்லை; ஒவ்வொருவரும் பிறரைக் குற்றம் சாட்டுவதிலேயே கவனத்தைச் செலுத்துவதல்லாமல், தம்

மளவில் கவனத்தைச் செலுத்துவதில்லை. இவ்விதம் நீங்கள் நடந்துகொள்ளுகிறதின் பலன் யாதாகுமென ஒவ்வொரு நாளிலும் கணப்பொழுதேனும் சிந்திப்பீர்களாயின் இப் பெருங்குறைகள் நம்மைவிட்டுத்தொலையும்வழி உங்களுக்கு புலப்படும். அல்லா(ஹ்) நம்மனைவோருக்கும் நல்லறிவைப் புகட்டி நேரான பாதையைக் காண்பிப்பானாக!

"இறுதிநாள் வந்துவிடுமாயின் நான்கு வஸ்துக்களை அல்லா(ஹ்) உயர்த்திவிடுவான்:— (1) பூமியைவிட்டும் பரக்கத்து நீங்கிவிடும். (2) ஹிருதயங்களைவிட்டும் கிருபை நீங்கிவிடும். (3) அதிகாரிகளைவிட்டும் நீதம் நீங்கிவிடும். (4) பெண்களைவிட்டும் நாணம் நீங்கிவிடும்." (ஹதீஸ்.)

மானிடர்களே! பூமியினின்றும் சுத்தமான ஹலாலான வஸ்துக்களைத் தின்னுங்கள். ஷைத்தானுடைய கெட்ட தூண்டுதல்களைத் தொடர்ந்து நடக்காதீர்கள். ஏனெனில், நிச்சயமாயவன் (உங்களுக்கு) பகிரங்கமான பகைவன்; நீங்கள் பாவங்களையும் சட்ட விரோதமானவைகளையும் செய்யும்படியும், அல்லா(ஹ்)வின்பேரில் நீங்கள் அறியாத விஷயங்களைச் சொல்லும்படியும்தான் அவன் ஏவுகின்றான். (குர்ஆனின் வியாக்யானம் 2:169.)

---

# முஹர்ரம் மாதம்,

# நான்காம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் மானிடர்களின் சரீரத்தை மண்ணினால் சிருஷ்டித்து ஆன்மாவை அதனுள் புகுத்திச் சீர்படுத்தியவன்; சிருஷ்டி கர்த்தாவாகிய அல்லா(ஹ்)வே மிகத் தூய்மையானவன்; அவன் சிருஷ்டிப்பதில் எவரின் உதவியும் தேவையற்றவன். நிச்சயமாய் வணக்கத்திற்குரியவர், தனித்தவனும் இணைதுணையற்றவனுமான அல்லா(ஹ்)வைத்தவிர வேறு எவருமில்லை எனவும், நிச்சயமாய் நபிகள்பிரான் முஹம்மது (சல்) அவர்கள் அவனது அடிமையும் திருத்தூதரும் ஆவரென்றும் சாக்ஷியம் பகருகின்றேன். எங்கள் இறைவனே! எங்கள் தலைவராகிய முஹம்மது (சல்) அவர்கள்மீதும் அவர்கள் கிளையார் தோழர்கள்மீதும் எந்நாளும் உனது கருணையையும் சாந்தியையும் பொழிந்தருள்வாயாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நல்லுபதேசஞ் செய்கின்றேன்; அவனைப் பயந்தவர்கட்கே நற்கதியுண்டாவதாக!

சகோதரர்களே! ஜயமடைய விரும்புவீர்களாயின், உலகப்பற்றை ஹிருதயங்களைவிட்டும் அப்புறப்படுத்திவிடுங்

கள். அப்படிச் செய்ததின்காரணமாகவே உங்களின் மூதாதைகள் ஜயமடைந்தனர். கேவலம் சரீரத்தை வளர்க்கக் கூடிய உணவுகளுக்காக ஏன் கவலைப்படுகிறீர்கள்? வல்லமை பொருந்திய இரக்ஷகனாகிய அல்லா(ஹ்) உங்களுக்கு உணவளிப்பவனாயிருக்கிறான். நீங்கள் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யாமல் வீண்காலம் கழிக்கின்றீர்கள்; மார்க்கத்திற்குச் சற்றும் சம்பந்தமில்லாத அநேக விஷயங்களை வெகு சந்தோஷமாய்ச் செய்ய விருப்பம் கொள்ளுகிறீர்கள்; அக்கிரமஞ் செய்யப்பட்டவர்களுக்கு உதவிபுரியாது அக்கிரமஞ் செய்பவர்களுக்கு உதவி செய்கிறீர்கள்; ஏழையான மூமின்களைப் பரிகாசம் செய்கின்றீர்கள்; அல்லா(ஹ்)வின் நல்லடியார்களைக் கேவலமாய் நடத்துகின்றீர்கள்; பொருள் பறிக்க வந்தவர்களென உலமாக்களை ஏளனம் செய்கின்றீர்கள்; நீங்கள் கோரிய காரியம் நிறைவேறும்பொருட்டு உங்களின் இனிய சொற்களைக்கொண்டு ஜனங்களை வஞ்சகமாக உற்சாகப்படுத்துகிறீர்களன்றோ? இவ்வாறெல்லாம் செய்வது கொண்டு மெய்யாகவே அல்லா(ஹ்)வின் கோபத்திற்குள்ளாகின்றீர்கள்; (ஆண்டவன் நம்மை அவனது கோபத்துக்குள்ளாக்காமல் காப்பாற்றுவானாக;) இவையெல்லாம் உங்களின் நிலைமை கேவலஸ்திதியை யடைவதற்குக் காரணங்களாகுமன்றோ? இங்ஙனம் செய்வது இஸ்லாமின் விதிகளை அறியாமையினாலன்றோ? அல்லா(ஹ்)வின் ஆணையாக உங்களில் பலருடைய ஆன்மாக்கள் உலக ஆசைகளில் சிக்குண்டு தாழ்மையடைந்துவிட்டன; உண்மையாகவே நீங்கள் இவ்வற்ப உலக இன்பங்களில் மூழ்கிவிட்டீர்கள்; இராகங்களைக்கேட்பதிலும் ஜாஹில்களுடைய சொற்களை ஆதரிப்பதிலுமே உங்கள்

ஆன்மாக்கள் சந்தோஷமடைகின்றன ; ஆண்டவனது திரு வேதத்தையும், மெய்யான வார்த்தைகளையும் கேட்பது உங்களுக்கு மரணவேதனையை அனுபவிப்பதுபோலிருக்கிறது. அவாவையும் துற்செயல்களையும் தொடர்ந்து அவற்றிற்குத் தலைசாய்க்கின்றீர்கள் ; இஸ்லாத்திலில்லாத நூதனச் செய்கையாகிய ஒரு பித்அத்தைச்செய்ய உங்களை அழைக்கப்பட்டால் அதிவேகமாய்ச் செல்லுகின்றீர்கள் ; ஆனால் சுன்னத்தான விஷயத்தின்பால் அழைக்கப்பட்டால் அதை அருவருக்கின்றீர்கள் ; நஸீஹத்தைக் கேட்பதற்கு அழைக்கப்பட்டால் கோபங்கொள்ளுகிறீர்கள் ; என்னே ! உங்களது பிற்போக்கு; என்னே! உங்களது கவனக்குறைவு; எத்துணை உபந்நியாசங்களைக்கேட்கினும் உங்கள்மனம் கரைவதில்லையே! சகோதரர்களே ; எவ்வளவைச் சொல்லினும் எதைக்கேட்கினும் உங்கள் மனம் உருகாமலிருப்பதை நோக்க, "சிலரின் ஹிருதயங்கள் கல்லைப்போல் கெட்டியாகிவிட்டன" வென்றும், "சில ஹிருதயங்களின்மீது முத்திரை இடப்பட்டிருக்கின்றது" என்றும் அல்லா(ஹ்) தன் திருமறையில் அருள் செய்ததேபோல் உங்கள் நெஞ்சம் ஆகிவிட்டதோவென்று அஞ்சவேண்டியதாயிருக்கிறது. அப்படிக் கல்லைப்போல் அல்லது முத்திரையிடப்பட்டதாய் ஆவது, பெரும் துர்ப்பாக்கியத்திற்கடையாளம் என்பதை ஊன்றிக் கவனித்து, ஆகிறத்தளவில் கவனத்தைச் செலுத்துங்கள். இவ்வித துர்ச்செயல்கள் நிரம்பிய உங்கள்பால் இறுதிநாளின் அடையாளங்களுள் ஒன்றாகிய தஜ்ஜால் வெளிப்படுவது ஆச்சரியமல்ல. இங்ஙனமே முஸ்லிமுக்கும் காபிருக்குமிடையே பாகுபாடு செய்யக்கூடிய தாப்பத்துல் அர்லு என்னும் உயிர்ப்

பிராணி வெளியாவதும், மனனம் செய்தவர்களின் ஹிருத யங்களைவிட்டும் திருகுர்ஆன் உயர்த்தப்படுவதும், பொழுது அஸ்தமாகுமிடத்திலிருந்து பொழுது உதயமாவதும், பாவஞ் செய்தவர்களைவிட்டும் தவ்பாவின் வாசல் அடைபடு வதும், இறுதிநாளின் மற்றைய அநேக அறிகுறிகளும் இக் காலத்தில் நடைபெறுவதும் ஆச்சரியமல்ல.

"உங்களுக்கும் "லாஇலாஹ இல்லல்லாஹு" வென் னும் கலிமாவுக்குமிடையில் திரைபோடப்படுமுன்னமே(சக் ராத்தின் நிலைமைவருவது, அல்லது தவ்பாவின்வாசல் அடை படுவது, என்பதே திரையென்பதின் பொருள்) அக்கலிமா வை மிகுதமாய் ஓதிக்கொள்ளுங்கள்! உங்களுள் மரணம் சமீ பித்தவர்களுக்கும் இதைக்கற்பித்துக்கொடுங்கள்." (ஹதீஸ்)

"மனைவி, மக்கள், தங்கம், வெள்ளி முதலிய பொருட் குவியல்கள், நன்கு பழக்கப்பெற்ற குதிரைகள், கால்நடை கள், வேளாண்மை, ஆகிய இவைகளின்மீது பற்றுதலா யிருத்தல் மனிதருக்கு அழகாகத் தோற்றக்கூடியதாயிருக் கிறது இஃது இவ்வுலக வாழ்க்கையின் (அழியக்கூடிய) பொருளாகும். அல்லா(ஹ்)வோ சிரேஷ்டமான மீட்சி ஸ்தலத்தைத் தன்பாலுடையவனாயிருக்கிறான்." (அல்—குர் ஆன் வியாக்கியானம், 3 : 13.)

---

# ஸபர் மாதம்,

# முதலாம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் நமது பிதாவாகிய ஆதம் (அலை) அவர்களை சிருஷ்டித்து, அன்னவரின் புத்திரர்களைப் பல்வேறு கூட்டங்களாகப் பிரித்தவன்; எண்ணிறந்த அக்கூட்டங்களை அவனன்றி எவரும் அறியார். அவர்களை வறிஞராயும் தனமுடையோராயும், மேன்மையுடையோராயும், தாழ்மையுடையோராயும் ஆக்கியவன்; இணைதுணையற்றவனும் தனித்தவனுமாகிய அல்லா(ஹ்)வைத்தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை என்றும், நபிகள்பிரான் முஹம்மது(சல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதரும் நபிமார்களுக்குத்தலைவரும் ஆவரென்றும், நிச்சயமாய் சாக்ஷிபம் பகருகின்றேன். அல்லா(ஹ்) அன்னவர்கள்மீதும், அன்னார் கிளைஞர் தோழர்கள்மீதும், தன் கிருபாமாரியைச் சொரிந்தருள் புரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளுமாறு நற்போதனை செய்கின்றேன். நிச்சயமாய் அல்லா(ஹ்)வை அஞ்சுவது அவனது அன்பிற்கு அருகதை அளிக்கும்.

மானிடர்களே! நமது இன்பசுகங்களைப் பிரிக்கக்கூடிய மரணத்தை எந்நேரமும் ஞாபகத்தில் நிலைநிறுத்துங்கள். மரணமென்பது யாதென அறிவீர்களா? அதுவே நம்மில் தாயையும் குழந்தையையும், புருடனையும் பெண்டீரையும், சகோதரனையும் சகோதரியையும் ஒருவருக்கொருவர் இனிச் சந்திக்க இயலாதவண்ணமாய்ப் பிரிக்கக்கூடியது. எவனது நெஞ்சத்தில் மரணத்தின் ஞாபகம் குடிகொள்ளுமோ அவன் அல்லா(ஹ்)வின் ஞாபகத்தில் ஆழ்ந்து சாந்தியடைவான். அப்படிப்பட்ட மரணத்தை மறந்து இவ்வுலகத்தில் நிலையாயிருக்க ஆவல் கொள்ளாதீர்கள். அப்படி நினைப்பது தவறென உங்களுக்கு நினைவுறுத்துகிறேன். அல்லா(ஹ்)வைத்தவிர வேறு எவரும் இவ்வுலகில் நிலைத்திருக்க முடியாதென்பதே திருமறையின் கூற்று. எவ்வுயிர்க்கும் சிரேஷ்டராயவதரித்த நபிகள் நாயகமே இவ்வுலகவாழ்க்கையை நீத்தார்களென்றால் மற்றவர்களின் கதி என்னவென்றுரைப்பது! அறிந்துகொள்வீர்களாக! நிச்சயமாய் நபிகள் பிரான் (சல்) அவர்கள் இவ்வுலகைவிட்டு அவர்களின் பிரயாணம் சமீபித்து மரணம் வந்தடுத்தபொழுது, மலக்குல் மவுத்தென்னும் உயிரைக் கைப்பற்றும் வானவர் வந்து வாசலைத் தட்டித் திறக்கச்சொன்னார். அப்பொழுது நபி பெருமான்(சல்) அவர்கள் தங்கள் புத்திரியாகிய பாதிமா (ரலி) அவர்களையழைத்து யார் கதவைத் தட்டுவதென நோட்டமிடச்சொன்னபொழுது, எவரோ சந்திக்க வந்தவரென பதிலிறுத்தார்கள். "நீர் அவரை அறிவீரா?" என நபிகள்பிரான்(சல்) அவர்கள் தங்கள் மகளிடம் வினவியதற்கு இல்லையென பதிலுரைத்தார்கள். அப்பொழுது

"இவர் இன்பசுகங்களையெல்லாம் ஒரு நிமைப்பொழுதில் மாற்றிவிடுபவர்; சேர்ந்திருப்பவர்களைப் பிரித்துவிடுபவர்; சிசுக்களை அனாதையாக்குபவர்; இவருக்கு வாசலைத் திறந்து விடு" என நபிகள்பிரான் (சல்) அவர்கள் அருளிச்செய்தார்கள். அப்பொழுது "நபித்துவத்தின் வீட்டையுடையவர்களே! அஸ்ஸலாமு அலைக்கும் (உங்கள்மீது அல்லா(ஹ்)வின் சாந்தியுண்டாவதாக)" என்ற சப்தம் மாத்திரம் ஆளின் தோற்றமின்றி நாயகி பாதிமா (ரலி) செவியில் விழுந்தது. "வஅலைக்குமுஸ்ஸலாம் வரஹ்மதுல்லாஹி என் சகோதர இஸ்ராயீலே! வெறுமனே சந்திக்கவந்தீரா? அல்லது அல்லா(ஹ்)வின் ஆக்ஞைப்படி ஆன்மாவைக் கைப்பற்ற வந்தீரா?" என நபிகள்நாயகம் (சல்) வினவியதற்கு, "அல்லா(ஹ்)வின் திருத்தூதராகிய என் சிநேகிதரே! இவ்வுலகில் உமக்குமுன் எவரையும் வெறுமனே சந்தித்ததில்லை; எனினும் உங்கள்மீது கிருபையுடையவனாகவும், இரக்கமுடையவனாகவுமே நடந்துகொள்ளும்படி அல்லா(ஹ்) எனக்கு ஏவியுள்ளான்" என விடை இறுத்தார்கள். என் சகோதரர் ஜிப்ரயீல் (அலை) இரசூலாகிய அல்லா(ஹ்) இடத்தினின்றும் வரும்வரை சற்று தாமதியுமெனச் சொல்லியதுடன், நீர் வரும்பொழுது ஜிப்ரயீலை (அலை) எங்கு சந்தித்தீரெனவும் வினவினார்கள். அதற்கு வானவர்களாகிய அல்லா(ஹ்)வின் மலக்குகள் உங்கள் விஷயமாய் அன்னவரிடம் விசாரித்தவர்களாக வானத்தில் பார்த்தேன் எனச் சொல்லிமுடிவதற்குள் ஜிப்ரயீல் (அலை) அவர்களும் வந்தார்கள். மேலும், அல்லா(ஹ்) சலாம் சொன்னதாகச்சொல்லி, நீங்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதராகும்; நீங்கள் விரும்பினால்

உங்களைப் பிற்படுத்திவைக்கமுடியுமெனவும் சொன்னார்கள். அதற்கப்பால் என்ன சம்பவிக்குமென நபிபெருமான் (சல்) வினவியதற்கு மீளவும் மரணமடைந்து அல்லா(ஹ்)வைச் சந்திப்பீர்களென விடையளித்தார்கள். அப்பொழுது "ஏ இஸ்ராயீலே! என் ஆயுள் முடிந்துவிட்டது, என் ஆன்மாவைக் கைப்பற்றிக்கொள்ளும்" எனச் சொன்னார்கள். நபி (சல்) அவர்களின் ஆன்மா முழந்தாளை அடுத்தபொழுது ஆண்டவா!) பாக்கியம்பெற்ற உன் அடிமைளுடன் சேர்ப்பாயாக என்றும், தொப்புளை அடுத்தபொழுது நம்முடைய மீட்சிஸ்தலம் அல்லா(ஹ்)வின்பாலிருக்கிறது என்றும், நெஞ்சை அடுத்தபொழுது இன்ன லில்லாஹ் (நாம் அல்லா(ஹ்)வினின்றும் வந்தவர்களே) என்றும், தொண்டையை அடுத்தபொழுது "என் கஷ்டமே!" என்றும் கூறினார்கள். அதைச் செவியுற்ற பாதிமா (ரலி), "என் பிதாவின் கஷ்டத்தைப்பற்றி எனது கஷ்டமே!" என உரைத்தார்கள். நபிகள்நாயகமவர்களின் ஆன்மா பிரிந்தது.

"என்னிடம் ஜிப்ரயீல் (அலை) வந்தார்கள். "முஹம்மதே! நீங்கள் நாடின காலம்வரை ஜீவித்திருங்கள், இறுதியில் மரணமடைவீர்கள்; நாடியவற்றை இச்சித்திருங்கள், இறுதியில் அவைகளைவிட்டும் பிரிவீர்கள்; நாடினதைச் செய்யுங்கள், நிச்சயமாய் அதற்குக் கூலி கொடுக்கப்படுவீர்கள்" எனச் சொன்னார்கள். மேலும், நான் ஜீவித்திருத்தலும் மரணமடைதலும் உங்களுக்கு நன்மையையே அளிக்கும். நீங்கள் செய்பவைகளை எனக்கு எடுத்துக்காட்டப்படும்; அவைகள் நன்மையாயின் அல்லா(ஹ்)வைத் துதிப்பேன்; தீமையாயின் உங்கள் பாவங்களை மன்னிக்குமாறு

பிரார்த்திப்பேன்" என நபிகணுயகம் (சல்) அருளிச்செய் தார்கள். (ஹதீஸ்.)

"(நபியே) உமக்குமுன் எந்த மனிதனுக்கும் (இவ்வுலகில்) நிலையாயிருத்தலை நாம் கற்பிக்கவில்லை. எனவே நீர் மரணமடைந்து அவர்கள் தாமா நிலையாயிருக்கப்போகிறுர்கள்? ஒவ்வொரு ஆன்மாவும் (இவ்வுலகில்) மரணமடைந்தே தீரவேண்டும்." (அல்—குர்ஆன், 21 : 34.)

---

## ஸபர் மாதம்,

# இரண்டாம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் மானிடர்களை இல்லாமையினின்றும் சிருஷ்டித்து அவர்களது உணவு ஆயுள் முதலியவைகளைத் திட்டஞ் செய்தவன்; மரணமென்னும் குடிப்பை அவர்களுக்கு வகுத்தவன். இணை துணையற்றவனும் தனித்தவனுமாகிய அல்லா(ஹ்)வைத்தவிர வணக்கத்திற்குரியவர் எவருமில்லை என்றும், நபிகள்பிரான் முஹம்மது(சல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதரும் நபிமார்களுக்குத் தலைவரும் ஆவரென்றும், நிச்சயமாய் சாக்ஷியம் பகருகின்றேன். அல்லா(ஹ்) அன்னவர்கள்மீதும், அன்னார் கிளைஞர் தோழர்கள்மீதும், தன் கிருபாமாரியைச் சொரிந்தருள்புரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளுமாறு நற்போதனை செய்கின்றேன்; நிச்சயமாய் அஃது அல்லா(ஹ்)வின் அன்பிற்கு அருகதையுடையவர்களாக ஆக்கிவிடும்.

சகோதரர்களே! இவ்வுலகம் கஷ்டநஷ்டத்தை அனுபவிக்கக்கூடிய ஸ்தலமாயிருக்கும் நிலைமையில், நீங்கள் உங்களது ஆன்மாக்களை வீணாகக் கஷ்டப்படுத்திக்கொள்ளுகிறீர்

கள். அல்லா(ஹ்) இட்ட ஆக்ஞைகளை அறிந்து சற்றேனும் அனுஷ்டானத்தில் கொண்டுவராமல், ஆயுள் நாளை வீணாகச் செலவுசெய்கின்றீர்கள். ஹராமான செய்கைகளைச்செய்து வருகிறதுமன்றி, அவைகளை ஹலாலெனைக்கருதுகிறவனுக்கு யாதுசொல்வேன்? அல்லா(ஹ்)வை அஞ்சிப்பயந்தவர்கட்கும் அஞ்சாதவர்கட்குமிடையில் எவ்வளவோ வித்தியாசமிருக்கிறது; உங்களில் அநேகருக்கு மரணகாலம் சமீபித்து அவர்களுடைய கபன்கள் தயாரிக்கப்படுகின்றன; எனினும் உங்களில் அநேகர் அதை உணருவதில்லை. இரவில் சுகமாக நித்திரை செய்யுமிடங்களை விட்டுத் தங்களைத்தூரப்படுத்தி, அல்லா(ஹ்)வுக்காக வணக்கம் புரிந்தவர்களுக்கும் உங்களுக்கும் எவ்வளவோ வித்தியாசமிருக்கின்றது. தவமென்னும் ஊதியத்தைச் சம்பாதிக்காத ஏழைகளே! நீங்கள் இவ்வுலகில் நிலையாயிருக்க நினைத்திருக்கின்றீர்கள். ஆனால் உங்களின் வாலிபம் வீணாகச்செல்லுகின்றது. இவ்வற்ப உலகின் வேலைகளில் சிக்குண்டு கிடப்பவர்களே! பிரதி வெள்ளிக்கிழமைதோறும் உபந்நியாசங்களைக்கேட்கும் உங்கள் செவிகள் செவிடாய்விட்டனவோ? இவ்வுலகில் நடைபெறும் பல விபரீதச்செயல்களையும், அதற்காக ஏற்படும் ஆண்டவனது தண்டனைகளையும் பார்த்திருந்தும், உங்கள் கண்கள் குருடாய் விட்டனவோ? அல்லது நீங்கள் இவைகளை ஆராய்ச்சிசெய்யும் ஹிருதயங்களற்றவர்களாக ஆய்விட்டீர்களோ? தவங்கள் செய்ய உங்களுக்கு இன்னும் தருணமிருக்கிறது. ஆதலால் இப்பொழுதே அல்லா(ஹ்)வின்பால் சுத்தமான கலப்பற்ற தவ்பாவாக தவ்பாச்செய்யுங்கள். மகா வல்லமை பொருந்திய அல்லா(ஹ்)வின் சந்நிதானத்தில் நீங்கள் நிற்கும்படி

நேரிடுவது திண்ணம். அப்பொழுது உங்களுடைய சிறிய பெரிய ஒவ்வொரு செய்கையின்மீதும் உங்களைக் கேள்வி கணக்குக் கேட்கப்படும். ஒரு அணுவேனும் உங்களுக்கு அநியாயமாய் அல்லா(ஹ்) தீர்ப்புச் செய்யமாட்டான். அப்படி தீர்ப்பை யடைந்தபின் நீங்கள் செல்லுமிடம் மனிதர்கள் சுகம் பெறத்தக்க உயர்த்தியான சுவனமாகும்; அல்லது அதில் உணவு கள்ளியாகவும், குடிக்கக்கொடுக்கும் நீர் முடி கருகும்படியாகக் காய்ச்சப்பட்டதாகவும் இருக்கும்படி யான நரகமாகும்.

சகோதரர்களே! சற்று நிதானமாய் இங்கு ஆழ்ந்து யோசனை செய்துபாருங்கள். எத்துணைகாலம் இவ்வுலகில் ஜீவித்திருந்தபோதிலும் இறுதியாக இதைவிட்டு நீங்கள் பிரயாணப்படுவது மெய்யே. சுற்றத்தார்களைவிட்டு நீங்கள் பிரிவது உண்மையே. அங்ஙனமிருக்க வீண்காலம் கழிப்பதேனோ? நல்லோர்களைப் பார்த்தேனும் நீங்கள் நன்னடத்தையைக் கைக்கொள்ளலாகாதா? அவ்வாறு நடந்து கொள்ள முயற்சி எடுத்துக்கொள்ளாத காரணம் யாதென நீங்களே சற்று நிதானமாய் சிந்தித்துப் பாருங்கள். அல்லா(ஹ்)வின் ஆணையாக உங்கள் ஆன்மா சுகமாயிருக்கும் பொருட்டு நற்றவங்களை செய்யத் துணியுங்கள். அப்படிச் செய்வீர்களேல் அல்லா(ஹ்)வின் அதாபைவிட்டும் ஜய மடைவீர்கள்.

பாவத்தில் மூழ்கிக்கிடப்பவர்களே! நான் சொல்வதை சமீபகாலத்தில் அறிந்துகொள்ளுவீர்கள். ஜஹன்னமென்னும் நரகத்தின்பேரில் சிராதுல் முஸ்தகீம் பாலத்தை வைக்கப்பட்டு, நன்மை தீமைகளை நிறுக்கும் மீஸானென்னும்

தராசையும் நிறுத்தப்பட்டு, அநீதம் செய்தவனை "முன் னோக்கி நட" என்றும், அநீதம் செய்யப்பட்டவனை "நில்" என்றும் சொல்லப்படும்பொழுது, இங்கு செய்தவைகளின் பலனை நன்கு அறிந்துகொள்வீர்கள். இறுதிநாளில் அழைக் கப்பட்ட ஒருவன் நற்பாக்கியமுள்ளவனாயிருப்பானாகில் நன்மாராயம் சொல்லப்பட்டு சந்தோஷமடைவான்; துர்ப் பாக்கியமுள்ளவனாயிருப்பானாகில் தன் குறைகளுக்காக அழுது பரிதாபப்படுவான். அந்நேரந்தான் குற்றஞ் செய் தவர்களை அவர்களது அறிகுறிகளால் அறியப்பட்டு அவர் களின்முன் நெற்றி உரோமங்களையும் கால்களையும் பிடித்து நரகத்தில் எறியப்படும். நற்பாக்கியமுள்ளவர்களின்மீது மதிப்பையுடைய உடைகளை உடுத்தாட்டப்படும்.

"அல்லா(ஹ்)வைப் பார்க்கிறவனைப்போல் அவனை நீ வணங்கு; அவனை நீ பார்க்காவிடினும் அவன் உன்னைப் பார்க்கிறான். மேலும் மரணமடைந்தவர்களுள் ஒருவனாக உன்னை எண்ணிக்கொள். அநீதஞ்செய்யப்பட்டவனது துஆவைப் பயந்துகொள். ஏனெனில் அநீதஞ் செய்யப் பட்டவனது துஆ சீக்கிரம் ஒப்புக்கொள்ளப்படும்." (ஹதீஸ்)

"(நபியே! இறுதிநாளில்) குற்றஞ்செய்தவர்களை (அவர்கள் வணங்கியவைகளுடன்) இணைத்து விலங்கிடப் பட்டவர்களாகப் பார்ப்பீர்கள். அக்குற்றவாளிகளின் உடை கீல் பூசம்பட்ட உடையாகும்; மேலும் அவர்களை நெருப்பு மூடிக்கொள்ளும்" (அல்—குர்ஆன், 15 : 50.)

---

# ஸபர் மாதம்,

# மூன்றும் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் எந்நாளும் மேன்மையுடையவன். அவனது மேன்மை என்றென்றும் அதிகமாய்க்கொண்டே இருக்கிறது அவனுடன் அடுத்து நெருங்கும்வார் அவனை பரிபூரணமானவனாகக் காண்பார். ஹபஷா தேசத்து அடிமையாயினும் அவனுக்குத் தொண்டு புரிந்தவர்கட்கே சுவனம். குறைஷி வம்சத்தைச் சேர்ந்த மேன்மைவாய்ந்தவனாயினும் அவனுக்கு மாறுசெய்தவனுக்கே நரகம். "நம்முடைய அடிமைகளுள் தக்வாச் செய்தவர்கட்கே சுவர்க்கத்தை நாம் பாத்தியமாக்குவோம்" என்பது திருமறையின் கூற்று. இணைதுணையற்றவனும் தனித்தவனுமாகிய அல்லா(ஹ்)வைத்தவிர வணக்கத்துக் குரியவர் எவருமில்லை என்றும், நபிகள்பிரான் முகம்மது (சல்)அவர்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதரும் நபிமார்களுக்குத் தலைவரும் ஆவரென்றும் நிச்சயமாய் சாக்ஷியம் பகருகின்றேன். அல்லா(ஹ்) அன்னவர்கள்மீதும், அன்னார் கிளைஞர் தோழர்கள்மீதும், தன் கிருபாமாரியைச் சொரிந்தருள்புரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளுமாறு

கற்போதனை செய்கிறேன். நிச்சயமாய் அஃது அல்லா(ஹ்)வின் அன்பிற்கு அருகதையுடையவர்களாக ஆக்கிவிடும்.

சகோதரர்களே! உலக ஆசையைவிட்டும் உங்கள் மனங்களைச் சுத்திசெய்யுங்கள். நிச்சயமாய் அதிலுண்டானவைகள், மரணத்திற்குப்பின் நீங்கள் அடையவிருப்பவைகளுடன் ஒப்பிட்டால் மிகச்சொற்பமானவைகளேயாம். அல்லா(ஹ்)வையஞ்சி உங்கள் நன்மைக்காக தவங்களைச் சேகரஞ்செய்துகொள்ளுங்கள். நீங்கள் பிரயாணமாய்ப் போய்ச்சேரவேண்டியிருக்குமிடம் வெகுதூரமிருக்கின்றது. நீங்கள் இவ்வுலகில் நீடித்திருப்பதை ஆசைகொள்ளாதீர்கள். இதில் நீடித்திருப்பது முடியாத ஒரு காரியமாகும். உங்களுக்கு முன்னுண்டானவர்களடங்கலும் இவ்வுலகைவிட்டுச் சென்றவர்களாயிருக்கும்பொழுது நீங்கள்மாத்திரம் எங்ஙனம் நீடித்திருக்கமுடியும்? ஒவ்வொருநாளும் அல்லா(ஹ்)வின் பக்கமிருந்து தோற்றமின்றி சப்தமிடுபவர் "அல்லா(ஹ்)வினடிமைகளே! பிரயாணம் நெருங்கிவிட்டது, பிரயாணம் நெருங்கிவிட்டது" என்று சப்தமிடுகிறார். அப்படிப்பட்ட பிரயாணத்தின் ஆரம்பந்தான் மரணம். இதைவிட்டும் ஒரு க்ஷணநேரமேனும் நீங்கள் தப்பித்திருக்கமுடியாது. குறிப்பிட்ட காலத்திற்குமுன் அஃது வரவும்முடியாது. அதைப் பிற்படுத்தும்பொருட்டு உங்களிடமிருந்து எவ்வித இலஞ்சத்தையும் அல்லா(ஹ்) எற்றுக்கொள்ளவுமாட்டான். மரணத்திற்குப்பதிலாக வேறு எதையும் அல்லா(ஹ்) உங்களிடமிருந்து அங்கீகரிக்கமாட்டான். சாகுந்தறுவாயிலிருக்கும் எத்தனையோ வியாதியஸ்தர்களை அல்லா(ஹ்) சொஸ்தப்படுத்திவிட்டான். எத்தனையோ சுகசரீரிகளை

வியாதியஸ்தர்களாக்கிவிட்டான். எத்துணையோ சிநேகிதர்களைவிட்டும் அவர்களது சிநேகிதர்களைத் தன்பால் அழைத்துக்கொண்டான். எத்துணையோ பந்துக்களை அவர்களது பந்துக்களைவிட்டும் பிரித்துவிட்டான்.

சகோதரர்களே! உங்களின் ஆன்மாக்களைக் கைப்பற்றுபவராகிய இஸ்ராயீல் (அலை) உங்களை எதிர்நோக்கிக் கொண்டிருக்கையில் நீங்கள் எவ்வாறு இவ்வுலகில் நீடித்திருக்கப்பிரியப்படுகிறீர்கள்? உங்களுடைய அறிவீனமும் அல்லா(ஹ்)வையஞ்சாமையும் எதுவரையிலிருக்குமோ? உங்களுக்கேற்படுத்தப்பட்ட சொற்ப ஆயுளில் எஞ்சியுள்ளவை மிகக் கொஞ்சமே. பின்பு சிரேஷ்டனாகிய உங்கள் இரக்ஷகனின்பால் நீங்கள் திரும்புவீர்கள். அப்பொழுது "எனதருளால் அளவிறந்த நன்கொடைகளை உங்களுக்களித்தேன்; என்னுடைய நிஅமத்துகளைக்கொண்டு உங்களை வளர்த்தேன்; ஆயினும் அவைகளைச்சுகித்து நீங்கள் எவ்வித நற்றவங்கள் செய்தீர்கள்? நான் இரக்ஷகனென்பதை உங்களுக்கறிவித்தேன்; எனது தூதர்களுள் சிரேஷ்டரான தூதரை உங்களிடம் அனுப்பினேன்; எனக்குத் தலை சாய்ப்பதைவிட்டும் நீங்கள் பிந்திவிட்டீர்கள். இன்றைக்கு ஆகட்டும், நாளைக்கு ஆகட்டும், எனச்சொல்ல ஆரம்பித்தீர்கள் அன்றோ?" என்று உங்கள் எஜமானனாகிய அல்லா(ஹ்) கேட்பானாகில் அப்பொழுது நீங்கள் என்ன ஜவாபு கொடுப்பீர்கள்? உங்கள் கதி அப்பொழுது எவ்விதமாகுமென்பதைச் சற்று சிந்தித்துப்பாருங்கள்.

"யாதொரு மூமின் மற்றொரு மூமினுடைய பசியை ஆற்றுவானாகில், இறுதிநாளில் சுவனலோகத்தின் பழங்களை

அல்லா(ஹ்). பசியாற்றினவனுக்குத் தின்னக்கொடுப்பான். நிர்வாணமாயிருக்கும் ஒரு மூமினுக்கு மற்றொரு மூமின் (உடுக்க) வஸ்திரம் கொடுப்பானானல், இறுதிநாளில் சுவன லோகத்தின் வஸ்திரங்களை அல்லா(ஹ்) அவனுக்கு உடுக்கக் கொடுப்பான்" (ஹதீஸ்)

ஒவ்வொரு கூட்டத்தினருக்கும் குறிப்பிட்ட தவணை ஏற்பட்டிருக்கிறது; அவரவர்களுக்கு குறிப்பிட்ட தவணை வந்துவிடுமாகில் ஒருநொடிப்பொழுதேனும் அவர்கள் பிற் படுத்தவும் முற்படுத்தவும் தேடமாட்டார்கள். ஆதமின் புத்திரர்களே! உங்களுக்கு என்னுடைய திருஷ்டாந்தரங் களை அறிவிக்கும்படியான தூதர்கள் உங்களிலிருந்து (தெரிந்தெடுக்கப்பட்டு) எங்களிடம் வருவார்களாகில், பின்பு (உங்களிலிருந்து) எவர்கள் அல்லா(ஹ்)வுக்கு மாறு செய்வதைப்பயந்து நல்ல அமல்களைச் செய்வார்களோ அவர்கள்மீது எவ்வித பயமும் கிடையாது, அவர்கள் துயருறவுமாட்டார்கள். (அல்—குர்ஆன், 7 : 34, 35.)

---

# ஸபர் மாதம்,

# நான்காம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் எப்பொழுதும் தன்னடிமைகளை நோட்டமிட்டுக்கொண்டிருப்பவன். தனது சிநேகமும் அன்பும் நிறைந்தோரிடம் சமீபித்திருப்பவன். தனக்கு மாறுசெய்தவர்களை அடக்கியாளுபவன். தன் கருத்துக்கிணங்காமல் அக்கிரமஞ்செய்தவர்களை வேருடன் கெல்லி எறிபவன். இணைதுணையற்றவனும் தனித்தவனுமாகிய அல்லா(ஹ்)வைத்தவிர வணக்கத்திற்குரியவர் எவருமில்லை என்றும், நபிகள்பிரான் முஹம்மது (சல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதரும், நபிமார்களுக்குத்தலைவரும் ஆவரென்றும், நிச்சயமாய் சாக்ஷியம் பகருகின்றேன். அல்லா(ஹ்) அன்னவர்கள்மீதும், அன்னார் கிளைஞர் தோழர்கள்மீதும், தன் கிருபாமாரியைச் சொரிந்தருள்புரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளுமாறு நற்போதனை செய்கின்றேன்; நிச்சயமாய் அஃது அல்லா(ஹ்)வின் அன்பிற்கு அருகதையுடையவர்களாக ஆக்கிவிடும்.

சகோதரர்களே! மவுத்து சம்பந்தமாகவும், நல்ல அமல்கள் செய்வதன் சம்பந்தமாகவும், உபந்நியாசங்களை பிரதி

வெள்ளிக்கிழமையும் கேட்டிருக்கிறீர்கள். அல்லா(ஹ்)வினல் உங்களுக்குக் கொடுத்தருளப்பட்ட உபகாரங்களை இன்று உங்களுக்கு நினைவுறுத்துகிறேன். அல்லா(ஹ்)வினின்றும் உங்களுக்குக்கிடைத்த அளவிறந்த உபகாரங்களை நீங்கள் மறந்துவிட்டீர்கள். அவைகளை ஞாபகம் செய்வதேயில்லை. ஆனல் ஆண்டவனல் ஏற்படுத்தப்பட்ட தண்டனைகளைச் செவியுற்ற மாத்திரத்தில் கோபங்கொள்கிறீர்கள். இவைகளின் நிலைமைகளை சற்று நிதானமாய்ச் சிந்தித்து நோட்டமிடுவீர்களேல், மகாப்பெரும் பாரதூரமானவைகளாகக் கண்டுகொள்வீர்கள். இவ்வுலகில் உற்பத்தி செய்யப்பட்டவைகளைச்சற்று ஆழ்ந்து யோசிப்பீர்களேல், அவைகள் ஒவ்வொன்றும் உங்களுக்கு அனுகூலமானவழிகளில் ஊழியனைப்போல் உபகாரஞ்செய்யக் கூடியதாய்க் காண்பீர்கள். அல்லா(ஹ்) உங்களுக்களித்த பாக்கியங்களைமறந்து கஷ்டங்களைமாத்திரம் ஞாபகஞ் செய்கின்றீர்கள். இது பெருத்த ஆச்சர்யம்! துன்பங்களைப்போல் தோற்றக்கூடியவைகளில் அநேகம், ஆழ்ந்த புத்தியுடன் சிந்திக்கும்பொழுது பாக்கியமாக ஆகிவிடுவதுண்டு. உதாரணமாக ஏழையான அநேகர் தாங்கள் செய்த பாபத்திற்காக நாம் ஏழையாய் இருக்கிறோமெனக் கருதுவதுண்டு. உண்மையில் அவ்வெளிமைத்தன்மையின் காரணமாக இவ்வுலகக் கஷ்டங்களைச்சகிப்பதினல் அளவற்ற லாபங்கிடைக்கிறது. அநேகர் தங்களுக்கு வியாதியுண்டாகுவதை தங்களது பாவதண்டனையெனக் கருதுவதுண்டு. உண்மையில் அவ்வியாதியானது அநேக குற்றங்களுக்குப் பரிகாரமாகவும், அநந்தம் பாவங்களை அழித்துவிடக்கூடியதாகவுமிருக்கிறது.

சகோதரர்களே! உங்கள் இறைவன் உங்களுக்கு அநீதம் செய்பவனல்ல. அவன் செய்பவைகள் யாவும் மிகவும் நீதியானவையே. எஜமானுகிய அல்லா(ஹ்)வின் வழியில் நடக்காமல் வேறுவழி நடப்பவர்களே! சற்று நிதானியுங்கள், மெய்யாகவே நீங்கள் உங்களுடைய எண்ணத்தில் தவறிவிட்டீர்கள். நீங்கள் அல்லா(ஹ்)வின்மீது பழிசுமத்தும் அக்கிரமஸ்தர்களாயிருக்கிறீர்கள். ஏதோ ஒருதடவை அல்லா(ஹ்) உங்கள் எண்ணப்பிரகாரம் கொடுக்கவில்லையாயினும் வேறு எத்தனையோ தடவை கொடுத்திருக்கிருன். ஏதோ ஒருதடவை வியாதியஸ்தர்களாக உங்களை ஆக்கிவிடினும் எத்தனையோ நாள் சுகஜீவிகளாக வைத்திருக்கிருன். அல்லா(ஹ்)வின்மீது ஆணையாக அல்லா(ஹ்)வின் கருணை உங்கள்பால் இல்லையேல் உங்களுக்கு நேரிடும் கஷ்டங்களை அவன் ஒருபொழுதும் நீக்கி இருக்கமாட்டான்; மேலும் சுகங்களைக் கொடுத்திருக்கவுமாட்டான். அல்லா(ஹ்)வுக்கு மாறுசெய்ய முனைந்திருக்கும் காலத்திலும் எவ்வளவு உபகாரங்களைக்கொண்டு உங்களைப்போஷிக்கிருன்? அவன்உங்களையும் நீங்கள் செய்பவைகளையும் நோட்டமிட்டுக்கொண்டேதானிருக்கிருன்; மேலும் நீங்கள் செய்பவைகளை அறிபவனுயுமிருக்கிருன். அவனுக்கு மாறு செய்யும்பொழுதே உங்களுடன் அல்லா(ஹ்) இத்தன்மையாய் நடந்துகொள்வதென்ருல், அவனை நீங்கள் மனதினுல் ஒருவனெனக்கருதி, நாவினுல் துதித்து அவயவங்களால் அடிபணிந்து அவனைப்பிரியம் வைப்பதிலேயே ஆழ்ந்துவிடுவீர்களாகில், அல்லா(ஹ்)வின் மீது ஆணையாக நீங்கள் கோரிய ஒவ்வொரு காரியமும் இலேசாகவே முடிவடையும் ஒவ்வொரு துர்க்காரியமும்

குறைந்துகொண்டேபோகும். சுருங்கச்சொல்லின்கலப்பற்ற மனச்சுத்தியுடன் எவரும் அவனை வணங்குவதில்லை, அல்லா (ஹ்) தன் கருணைக்கடலால் அவர்களைமூடியேயொழிய.

"ஒரு அடிமை மெய்யான தவ்பாவாக தவ்பாச்செய்வானாகில் அவனுடைய கருமங்களை எழுதும் மலக்குகளை விட்டும் அவனது பாவங்களை அல்லா(ஹ்) மறக்கவைத்துவிடுகிறான். அங்ஙனமே அவனது அவயவங்களைவிட்டும், அந்தப் பாவம் நடந்த பூமியின் அடையாளங்களை விட்டும் அல்லா(ஹ்)வை இவர்கள் சந்திக்குமளவும் மறக்கவைத்து விடுகிறான். முடிவாக அவன்மீது சாக்ஷிபகருபவரே இல்லாமையாய் விடுகின்றனர்." (ஹதீஸ்)

"மனிதன் அவனை வெறுமனே விடப்படுமெனஎண்ணுகின்றானா? குதித்து விழும்படியான இந்திரியத்திலிருந்து விந்தாகவும், பின்பு மாமிசத்துண்டாகவும் ஆயிருந்து பின்பு அல்லா(ஹ்) அவனை சரியான (மனிதனாக) சிருஷ்டிக்கவில்லையா? பின்பு ஆணும் பெண்ணுமாய் ஜோடியாக ஆக்கவில்லையா? இப்படியே அல்லா(ஹ்) இறந்தவர்களை எழுப்புவதின் மீது சக்திபெற்றவனாய் இருக்கமுடியாதா? (முடியும்)" (அல்—குர்ஆன், 75 : 36-40.)

---

# ரபீஉல் அவ்வல் மாதம்,

# முதலாம் குத்பா.

எல்லாப் புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் மானிடர்களுள் சிரேஷ்டரானவரை நம்முள் வெளிப்படுத்தி, அதன்மூலம் உலகோர்க்கு உபகாரஞ் செய்தவன். மேலான இப்மாதத்தில் அவர்களது பிறப்பு நிகழச்செய்தவன். நபி பெருமான் (சல்) அவர்கள் பிறந்த அந்த இரவில் அன்னவர்களின், பிரகாசம் வானத்தின் நக்ஷத்திரங்களை ஒளி குன்றச் செய்துவிட்டது. ஆமினு (ரலி) அவர்களின் இல்லத்தைப் பறவைகள் சூழ்ந்துகொண்டன. கிஸ்ரா அரசனது கோட்டை இடிந்துவிட்டது. மானிடகோடிகளின்பால் அந்நபியை அனுப்பியவனே மிகத்தூய்மையானவன்; வணக்கத்திற்குரியவன் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு எவருமில்லை; அவன் தனித்தவன்; இணையற்றவன் என்றும், எமதுபிரான் முஹம்மது (சல்) அவர்கள், அவனது திருத்தூதரும், மானிடர்களுள் சிரேஷ்டரானவரும் ஆவரென்றும் சாக்ஷியம் பகருகின்றேன். இறைவனே! எங்கள் நபியும் ஆண்டவனின் திருத்தூதருமான முஹம்மது (சல்) அவர்கள்மீதும், அன்னவரது கிளைஞர் தோழர்கள்மீதும் எந்நாளும் உனது சாந்தியையும் கருணையையும் பொழிந்தருள்வாயாக.

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் எந்நாளும் அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி முதன் முதல் நற்போதனை செய்கிறேன். அவனைப் பயந்தவனே அவனிடத்தில் மேன்மையானவன். அவனுக்கே சாந்தியுண்டாகுக.

மானிடர்களே! இவ்வுலகில் உண்டானவைகள், உண்டாகுபவைகள், மறைந்திருப்பவைகள், பிரத்தியட்சமானவைகள் அடங்கலேயும், அவைகளுண்டாகுமுன்னமே அல்லா(ஹ்) அறிந்திருக்கிறான். இங்ஙனமே நபிபெருமான் (சல்) அவர்களது திருவாக்கியமுமிருக்கின்றது. தன்னுடைய சிருஷ்டிகளின் நிலைமையை அறிந்திருக்கும்படியான அல்லா(ஹ்)வே மிகத்தூய்மையானவன். அவன் வழிப்பட்டவர்களது வழிப்படுதலேயும் மாறுசெய்தவர்களது மாறுசெய்தலேயும் அறிபவன். அல்லா(ஹ்) மானிடர்களை இரு கூட்டமாகப்பிரித்து "இவர்கள் சுவர்க்கவாதி, அதுவும் எனக்கு இலக்ஷியமல்ல; இவர்கள் நரகவாதி, அதுவும் எனக்கு இலக்ஷியமல்ல" என அருளிச்செய்தவன். (விஷயம் இப்படியானல் நாம் ஏன் கஷ்டப்படவேண்டும்? நாம் ஏன் அல்லா(ஹ்)வுக்கு அடிபணிந்தொழுகவேண்டும்? என்ற சந்தேகம் இங்கு ஜனிக்க இடமுண்டாகிறது. நாம் எந்தக்கூட்டத்தைச் சேர்ந்தவர்களென நமக்குப்புலப்படாத நிலைமையிலும், நன்மை தீமையை பாகுபாடு செய்யக்கூடிய சக்தி நமக்கேற்பட்டிருக்கும் நிலைமையிலும், அல்லா(ஹ்)வின் ஏவல் விலக்கல்களுக்கு நாம் அடிபணிந்தே தீரவேண்டும்.)

சகோதரர்களே! இம்மாதம் உலக சிரேஷ்டரான நபிபெருமான் (சல்) அவர்கள் அவதரித்த மாதம்.

ஆதலால் அவ்விஷயத்தைச் சிறிது உங்களுக்கு எடுத்துரைக்கிறேன். அல்லா(ஹ்) தான் தனியாக இருந்தபொழுது தன்னுடைய பிரகாசத்திலிருந்து கொஞ்சத்தை எடுத்து "மனித கோடிகளுக்குத் தலைவராகிய முஹம்மதாக ஆய்விடு" என ஆக்ஞையிட்டான். அப்பொழுது அவ்வொளி அல்லா(ஹ்)வின் சன்னிதானத்தில் ஜொலிக்கும்படியான தீபத்திற்கொப்பாக பிரகாசித்துக்கொண்டிருந்தது. இதுதான் அல்லா(ஹ்)வால் முதன்முதல் சிருஷ்டிக்கப்பெற்றது. பின்பு ஹதீஸில் வந்திருப்பதேபோல் அந்தப்பிரகாசத்தை நான்கு பாகம் செய்து, முந்தின பங்கினின்றும் சிருஷ்டிப்பொருள்களின் கணக்கு ஏடாகிய லவ்ஹையும், அதிலெழுதும் பேனாவாகிய கலத்தையும் சிருஷ்டித்தான். பின்பு அந்தப்பேனாவுக்கு தான் சிருஷ்டிக்க நாடினவைகளடங்கலையும் எழுதும்படி உத்திரவளித்தான். அல்லா(ஹ்)வின் உத்திரவுப்படியே அவனது சக்தியால் உலகமுடியுமளவும் நடைபெறவிருக்கும் சகலமானவைகளையும் அக்கலம் எழுதிமுடித்தது. இரண்டாவது பங்கினின்றும் அர்ஷையும் குர்ஸையும் சிருஷ்டித்தான். அந்த அர்ஷின்மீது "லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர்ரஸூலுல்லாஹி" என்னும் திருக்கலிமாவுடன், "நபியே உமது பெயராகிய முஹம்மதுர்ரஸூலுல்லாஹி என்பதைச் சொல்லாமல், லாஇலாஹ இல்லல்லாஹுவென்னும் முற்பகுதியைமாத்திரம் சொன்னவனது பாவத்தை யான் பொறுக்க மாட்டேன்." என எழுதப்பட்டிருந்தது. மூன்றும் பங்கினின்றும் சந்திரன்சூரியன் முதலியவைகளை சிருஷ்டித்தான். நான்காம் பங்கினின்றும் சுவர்க்கலோகத்தையும் அதிலுண்டானவைகளையும் சிருஷ்டித்தான். பின்பு நமது பிதாவாகிய

பாவா ஆதம் (அலை) அவர்களை உற்பத்திசெய்ய நாடிய பொழுது பெருமைவாய்ந்த நபியவர்களின் பிரகாசத்தினின் றும் கொஞ்சத்தை பாவா ஆதம் (அலை) அவர்களை உண்டு பண்ணும் மண்ணிலமைத்து சிருஷ்டித்ததாகவே இதிகாசங் களில் வரையப்பட்டிருக்கிறது

சகோதரர்களே! மேல் சொன்னதிலிருந்து நமக்கும் நமது பெருமான் முஹம்மது (சல்) அவர்களுக்குமிடையி லுள்ள சம்மந்தம் எவ்வாறிருக்கிறதென்பது நன்கு வெளி யாகிறது. நமது பிதாவாகிய ஆதம்(அலை) அவர்களின் சிருஷ் டியில் நாயகமவர்களது பிரகாசத்திற்கு சம்பந்தமேற்பட் டிருக்கின்றமையால், நாம் அந்த பிதாவின் புத்திரர்களாத லின் நம்மிலும் அவசியம் நாயகத்தின் பிரகாசத்திற்கு ஒரு விதசம்மந்தமிருந்தே தீரவேண்டுமென்பது தெற்றென விளங்குகின்றது. எனவே நம்முடைய உற்பத்திக்கு அந்த நபி(சல்) அவர்களே மூல காரணமாதலால் நாம் அன்னவர் களை நேசிப்பதும், மனம் வாக்குக் காயம் ஆகியவைகளால் அன்னவர்கட்கு அடிபணிவதும், நம்முடைய உயிர் பொருளைப்பார்க்கினும் அவர்களை மேன்மைப்படுத்துவதும் உவப்பதும் நம்மீது கடமையாகும். இங்ஙனமே திரு மறையும் நாயக வாக்கியமும் அறைகின்றன.

"கத்னச் செய்யப்பட்டுத் தாய்வயிற்றிலிருந்து அல்லா (ஹ்) என்னைப்பிறப்பித்தது என்னை அவன் பெருமைப்படுத் தியதாகும். மேலும் என்னுடைய வெட்கஸ்தலத்தை எவ ரும் கண்டுகொள்ளவில்லை'' எனவும், "நிச்சயமாய் இஸ்மா யீல்(அலை) அவர்களின் சந்ததியாருள் அல்லா(ஹ்) கினை கூட்டத்தைத் தெரிந்தெடுத்தான்; அக்கூட்டத்தினின்றும்

குரைஷிக்கூட்டத்தைத் தெரிந்தெடுத்தான்; குரைஷியினின்றும் பனீ ஹாஷிமைத் தெரிந்தெடுத்தான்; பனீ ஹாஷிமிலிருந்து என்னைத் தெரிந்தெடுத்தான். நான் தெரிந்து எடுக்கப்பட்டவர்களிலிருந்து, தெரிந்தெடுக்கப்பட்டவர்களிலிருந்து, தெரிந்தெடுக்கப்பட்டவர்களிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்டேன்'' எனவும், நபிகணாயகம்(சல்) திருவாய்மலர்ந்தார்கள். (ஹதீஸ்.)"

மானிடர்களே! உங்களின் இரக்ஷகனிடத்திலிருந்து மெய்யான வேதத்தை நம்முடைய தூதர் உங்களுக்குக் கொண்டுவந்திருக்கிறார். உங்களுக்கு நன்மையயக்கும் பொருட்டு நீங்கள் ஈமான் கொள்ளுங்கள். நீங்கள் மாறு செய்வீர்களேல் (அவனுக்கு நஷ்டமாவது ஒன்றுமில்லை, நீங்களே நஷ்டமடைவீர்கள்.) வானம் பூமிகளில் உண்டானவைகளடங்கலும் அல்லா(ஹ்)வுக்குடையவைகளாயிருக்கின்றன. அல்லா(ஹ்) நீங்கள் செய்பவைகளை அறிபவனும், ஆழ்ந்த அறிவையுடையவனுமாயிருக்கிறான்.

(அல்-குர்ஆன், 4 : 170.)

---

## ரபீஉல் அவ்வல் மாதம்,

# இரண்டாம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் தனித்தவன்; அதிபதியானவன்; வணங்கப்படுபவன்; கெட்டியான கல்லினுள் ஓடக்கூடிய தண்ணீரைப் பார்க்கும் சக்தியுள்ளவன். இருட்டான இரவில் கருப்புக்கல்லின்மீது ஊரக்கூடிய கருமையான சிற்றெறும்பின் மெல்லிய நடையும் அவனது பார்வையைவிட்டு மறைந்ததன்று. நிச்சயமாய் வணக்கத்திற்குரியவன், தனித்தவனும் இணைதுணையற்றவனுமான அல்லா(ஹ்)வைத்தவிர வேறு எவருமில்லை எனவும், நிச்சயமாய் நபிகள்பிரான் முஹம்மது(சல்)அவர்கள் அவனது அடிமையும் திருத்தூதரும், ஆவரென்றும், சாக்ஷியம் பகருகின்றேன். எங்கள் இறைவனே! எங்கள் தலைவராகிய முஹம்மது (சல்) அவர்கள்மீதும் அவர்கள் கிளையார் தோழர்கள்மீதும் எந்நாளும் உனது கருணையையும் சாந்தியையும் அருள்புரிவாயாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளுமாறு நற்போதனைசெய்கிறேன். அவனைப்பயந்தவனே அவனிடத்தில் மேன்மையானவன்; அவனுக்கே அல்லா(ஹ்)வின் சாந்தியுண்டாகுக!

சகோதரர்களே! இவ்வுலகில் மெய் பிரத்தியட்சமாக வெளியாகிவிட்டது; அதைப்பார்ப்பதைவிட்டும் பலருடைய கண்கள் குருடாயிருக்கின்றன. நேரான வழி வெளியாகி விட்டது; மெய்யானவைகளை இட்டுக்கட்டுபவர்கள் தங்கள் இஷ்டம்போல்இட்டுக்கட்டுவதினின்றும்இனிவிலகிக்கொள் ளட்டும். நேரானவழி வெளியானபின்னும் அவர்களது பொய் பலிதமடையமுடியாது. கண்ணியமான இம்மாதத்தில்தான் ஈமானென்னும் சூரியன் உதயமாயிற்று. அதன் பிரகாசம் உலகமெங்கும் ஜொலிக்கவாரம்பித்தது. குப்ரென்னும் அந்த காரம் இஸ்லாம் என்னும் ஒளியைக்கண்டதும் நீங்கிற்று. விக்ரஹ ஆராதனை செய்பவர்கள் கேவலமடைந்தனர். அவர்களது ஆராதனையும் ஒழிய ஆரம்பித்தது. ஆராதனை செய்யப்படும் விக்ரகங்களே மெய்யான மதத்தின் பெருமையை உரைக்கலாயின. வேதத்துடன் அனுப்பப்பட்ட முர்சலான நபிமார்களுக்கெல்லாம் தலைவராகிய முஹம்மது(சல்) அவர்களது பிறப்பின் காரணமாகவே, பரிசுத்த இஸ்லாமிய மதம் தெற்றென வெளியாயிற்று. ஏகத்துவமான ஒரே ஆண்டவனது வணக்கம் உலகெங்கும் பரவலாயிற்று. சத்தியம் நிலைநிற்க அசத்தியம் ஒழிந்தது. உலகத்தில் தலை விரித்தாடிய அநாகரீகங்கள் சூரியனைக்கண்ட பனிபோல் காணாமல் மறைந்தன. பாபமற்ற சிறுமிகளைக் கொல்லும் துற்பழக்கமும், மானுஷீகத் தன்மையைவிட்டு அப்புறப்படுத்தி, மிருகத் தன்மையைக் கைக்கொள்ளச் செய்யும் மதுபான வழக்கமும் வேருடன் கெல்லி எறியப்பட்டன. கொலை களவு முதலிய பாபத்தில் ஆழ்த்தக்கூடிய மாபெரும்பாதகங்கள் ஒழிந்து சாந்தியும் நீதியும் சமாதானமுமுலகில் நிலவின.

துர்குணங்கள் அகன்று இருதயங்களில் நற்குணங்கள் குடி கொண்டன. என்னே! இஸ்லாத்தின் மகிமை; என்னே! இஸ்லாத்தின் கண்ணியம்! என்னே! இஸ்லாத்தின் சமா தானம்.

சகோதரர்களே! இப்படிப்பட்ட இஸ்லாத்தின் மூல புருஷரான எங்கள் நபிபெருமான் (சல்) அவர்கள் அவதரித்த விஷயத்தை நீங்கள் கேட்க ஆசிப்பீர்களன்றோ? இங்கு சற்று அதை சுருக்கமாக விளக்குவோம். எங்கள் நாயகம் (சல்) அவர்கள் தாயின் உதரத்தினிடமிருந்து வெளிவரும் பொழுது கையை ஊன்றினவர்களாகவும், ஆள்காட்டி விர லால் அல்லா(ஹ்) ஒருவனென்பதை சமிக்ஞைசெய்தவர்களா கவும், மேன்மை வாய்ந்த வானவர்களைக்கொண்டு தாங்கப் பட்டவர்களாகவும், பிறந்தார்கள். யாவற்றையும் அறியுந் தன்மையுடைய தயாளமுள்ள அல்லா(ஹ்)வை ஸ்தோத்தி ரம் செய்தவர்களாகவும், சிறந்த பார்வையைக்கொண்டு வா னத்தை நோட்டமிட்டவர்களாகவும் இவ்வுலகில் அவதரித் தார்கள். தொப்புள் அறுக்கப்பட்டவர்களாகவும், கத்னச் செய்யப்பட்டவர்களாகவும், தங்கள் கூட்டத்தினரின்மீது பெரும்பாக்கியமாக வெளிவந்தார்கள். அவ்வமயம் அவர் களுடன் வெளியான ஒளியினால் பசராவின் மாளிகைகள் யா வும் நாயகத்தின்மாதாவாகிய ஆமினா (ரலி) அவர்களுக்குத் தோற்றின. நபி(சல்) அவர்கள் பிறந்த காரணமாகவே பைசா சங்கள் வானத்தின்மேல் ஏறுவதைவிட்டும்தடுக்கப்பட்டன. அவைகளுள் இனி ஏற ஆரம்பிப்பவைகளைத் தடுப்பதற் கெனவே நக்ஷத்திரங்களை எரிபந்தங்களாக ஆக்கப்பட்டன. சகோதரர்களே! இப்படிப்பட்ட சிறப்பு வாய்ந்த நபிகள் பிரான் (சல்) அவர்களைப்பற்றிப் பெருமை பேசிக்கொள்ளும்

நாம், அவர்களை கண்ணியப்படுத்துகின்ரோமா? அவர்களை கௌரவித்தலாவது அன்னார் காட்டிய சன்மார்க்கநெறி தவருது நடத்தலன்ரோ? அன்னார் கூறியபடி நாம் நடக்கின்ரோமா? அவ்வாறு நடக்காத நாம் அவர்களைப்பின்பற்றும் முஸ்லிம்களென்று நம்மை அழைத்துக்கொள்வது பரிகாசமான செய்கையன்ரோ? எம்பெருமானர் (சல்) அவர்கள் கற்பித்த நற்காரியங்களான நமது கடமைகளைச் செய்யாமலும், அன்னார் விலக்கிய துர்ச்செய்கைகளை ஒழிக்காமலும், அக்கிரமத்திலும் அசட்டுத்தொழிலிலும் ஈடுபட்டிருக்கும் நாம், எம்பெருமானின் உம்மத்தென்று நம்மைச் சொல்லிக்கொள்ள வெட்கப்படவேண்டாமா? செய்கையளவில் உண்மையான முஸ்லிமல்லாதோர் எம்பெருமானின் கூட்டத்தாரெனப்படுவது அன்னாரை அவமதித்தலாகுமன்ரோ? ஆதலின், சகோதரர்களே! நாம்யாவரும் இனியேனும் உண்மையோடு நடந்து நமது நபிகள்பிரான் (சல்) அவர்களை கௌரவிப்போமாக.

"நான் சிருஷ்டிப்பில் நபிமார்களில் முந்தினவனாக ஆயிருந்தேன்; உலகத்திற்கு அனுப்பப்படுவதில் அவர்களுள் கடைசியாக ஆயிருக்கிறேன். இறுதிநாளில் என்னை அனுப்பியதன் காரணம், என்னுடைய கூட்டத்தார்களின் குற்றங்களைக்கண்டு மற்ற உம்மத்துகள் பரிகாசம் செய்யாதிருக்கும் பொருட்டேயாம்'' என்று எம்பெருமான் (சல்) திருவுளம் பற்றினர்கள். (ஹதீஸ்)

"நிச்சயமாக உங்களிலிருந்து ஒரு தூதர் உங்களிடம் வந்துவிட்டார்; நீங்கள் கஷ்டப்படுவது அன்னவருக்குவருத்தத்தை யுண்டுபண்ணுகிறது. அவர் நீங்கள் ஈமான் கொள்ளுவதின்மீது பேராவலுடையவர்; நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீது தயாளமும் அன்புமுடையவர்.''

(அல்—குர்ஆன், 9 : 128.)

# ரபீஉல் அவ்வல் மாதம்,

# மூன்றும் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் மானிடர்களை சிருஷ்டித்து அவர்களுக்குக் கேள்வி பார்வை முதலியவைகளைக் கொடுத்தருளியவன்; அழகிய வார்த்தைகளைப் பேசும் திறமையளித்தவன்; குழந்தை தன் தாயின் வயிற்றிலிருக்கும்பொழுது அவளின் முதுகின்பக்கம் அக்குழந்தையின் முகத்தைத்திருப்பியமைத்து, அதன் இரண்டு முழந்தாளிற்கும் கல்பிற்குமிடையே சுவாசம் விடும்படி செய்தவன்; அக்குழந்தைக்குத் தேவைப்பட்டவைகளை வெளி ஜனங்களின் உபகாரமின்றிச்சேர்ப்பிப்பவன்; தாயின்வயிற்றிலிருக்கும்பொழுது இரக்கமுள்ள தந்தைக்கொப்பான ஒரு மலக்கை உதவிபுரிய ஏற்படுத்தியவன்; அங்கசிருஷ்டி பூரணமடைந்து காலம் பூர்த்தியானவுடன் செவ்வையான மனிதச் சிசுவாக வெளிப்படுத்தியவன்; மனிதனை சிருஷ்டிகளில் அழகாக சிருஷ்டித்த இறைவனே மிகத் தூய்மையானவன். நிச்சயமாய் வணக்கத்திற்குரியவன் தனித்தவனும் இணைதுணையற்றவனுமான அல்லா(ஹ்)வைத்தவிர வேறு எவருமில்லை எனவும், நிச்சயமாய் எமது பிரான் முஹம்மது (சல்) அவர்கள், அவனது அடிமையும் திருத்தூதரும் ஆவரென்றும் சாக்ஷியம் பகருகின்றேன். எங்கள் இறைவனே! எங்கள்

தலைவராகிய முஹம்மது (சல்) அவர்கள்மீதும், அவர்கள் கிளையார் தோழர்கள்மீதும் எந்நாளும் உனது கருணையையும் சாந்தியையும் அருள்புரிவாயாக!

சகோதரர்களே! அறிந்துகொள்வீர்களாக! நிச்சயமாய் அல்லா(ஹ்) தொழுகையை மார்க்கத்தின் ஒரு முக்கிய கடமையாக விதித்துள்ளான். ஜயமடையும் கூட்டத்தில் நம்மைச் சேர்ப்பதற்காக அத்தொழுகையின்பேரில் கவனத்தைச் செலுத்தும்படி ஏவினான். "தொழுகைகளைப்பேணிக் கொள்ளுங்கள்; மேலும் நடு (அசறு)த்தொழுகையை (முக்கியமாகப் பேணுங்கள்.) அல்லா(ஹ்)வுக்கு சதா அடிபணிந்திருங்கள்" என அல்லா(ஹ்) தன் திருமறையில் தெளிவாய் அறிவித்திருக்கிறான். அவன் சொல்லுகிறவர்களுள் மிகவும் மெய்சொல்லுகிறவன்; அல்லா(ஹ்)வின் கோபத்தை இலேசாகக்காண்பவன் நிச்சயமாக அவன்பால் பாவியாக மீள்வான். மூன்றுநாள் தொடர்ச்சியாக தொழுகையை விடுபவனுக்கு இஸ்லாத்தில் எவ்வித பாக்கியமுமில்லை. மேலும், அவன் கேவலத்திற்கும், கொடிய வேதனைக்கும் ஆளாவான். ஆதலால் தொழுகையைப்பேணி அல்லா(ஹ்)வுக்கு அடிபணிந்தொழுகுங்கள்; அறிந்துகொள்வீர்களாக. நிச்சமாய் தொழுகையை விட்டவன் பழிப்புக்குரியவனாவான். உணவில் அபிவிருத்தியைக் குறைத்து அவனின் முகத்தினின்றும் கிருபாலக்ஷணத்தைப் போக்கிவிடப்படும். தொழுகையை விடுபவன் இறுதிநாளில் ஹவ்லுல் கவ்தர் என்னும் ஆற்றினிடம் வர அனுமதிக்கப்படமாட்டான். ஆதலின் அல்லா(ஹ்)வுக்கே தலை சாய்த்து வணங்குங்கள். தொழுகையை விடுபவனது இறைஞ்சுதல் வானத்தளவில்

உயர்ந்து செல்லமுடியாது. தொழுகையை விடுபவனது இதர நற்றவங்களை அல்லா(ஹ்) ஏற்றுக்கொள்ளவுமாட்டான். அல்லா(ஹ்) ஏற்றுக்கொள்வதெல்லாம் அவனைப் பயந்து தொழுபவர்களின் நற்றவங்களேயாம். ஆதலின் தொழுகையைப் பேணிக்கொள்ளுங்கள். மேலும், நடு (அசறு)த் தொழுகையை முக்கியமாய்ப் பேணுங்கள். "தொழும் நேரங்களில் நித்திரைசெய்து பாவங்களைச்செய்ய விழித்திருந்தவன் யாவன்? இன்று அவனை நான் வேதனை செய்வேன்; நான் எல்லாரையும்விட வல்லமையுள்ளவனும், வேதனை செய்யக்கூடியவனுமாயிருக்கிறேன். நரகத்தின் வேதனையை இன்று அவன் சுகிக்கும்படி செய்வேன்" என இறுதிநாளில் அல்லா(ஹ்)வின் பக்கமிருந்து சப்தமுண்டாகும். அந்நாளைச் சற்று நினைத்துப்பாருங்கள். அந்தோ! இழிவான வேதனையைப்பற்றி யாது சொல்வேன்! ஆதலால் சகோதரர்களே! அல்லா(ஹ்)வுக்கு வழிப்பட்டு நடந்துகொள்ளுங்கள். அல்லா(ஹ்)வைப் பயப்படும்விதமாக பயந்துகொள்ளுங்கள். அல்லா(ஹ்)வின் திருப்தியால் மாத்திரமே நீங்கள் ஜெயமடைதல்கூடும். அவனது திருப்தியை அடைந்தாலன்றி நீங்கள் செய்யக்கூடியவைகள் அணுத்துணையும் பிரயோஜனம் தராது. அவனது திருப்தி உண்டாகிவிடுமாயின் உங்களை அவனது கோபாக்கினியைவிட்டும் காப்பாற்றிக்கொள்ள ஒரு அணுவவ்வளவும் போதும். இவ்வுலகத்திற்காக சம்பாதித்தது போதும். சற்று சிந்தித்து அவ்வுலகத்திற்காகவும் வேலைசெய்ய முற்படுங்கள். சென்றகாலத்தைத் தவறவிட்டதேபோல் வருங்காலத்தையும் தவறவிடுவீர்களாயின் உங்களைப்போல் துர்ப்பாக்கியம்

உள்ளவர்கள் இவ்வுலகில் எவருமேயில்லை என்பதை உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். அல்லா(ஹ்) நம்மனைவருக்கும் நேரான வழியில் நடக்க சீரான புத்தியைக் கொடுத்தருள்வாஞக.

“தொழுகைவிட்டவன் சபிக்கப்பட்டவனுவான்; அப்படி அவன் விடுவதை (விலக்காமல்) சம்மதித்திருக்கும் அவன் அயல்வீட்டானும் சபிக்கப்பட்டவனுவான். நான் அதிபதியாகவும் நீதிவாஞகவும் ஆயிருக்கவில்லையாகில், அப்படிச்செய்பவனது சந்ததிகளையும்சபிக்கப்பட்டவர்களெனச் சொல்லிவிடுவேன்” என்று இறைவன் அருளியதாக நபிகள்நாயகம் (சல்) அவர்கள் அருளிச்செய்தார்கள். மேலும், “எவனுயினும் அல்லா(ஹ்)வை பயமற்றுச் சந்திக்க நாடுவாஞயின் அவன் ஐந்து நேரத்தின் தொழுகைகளைப் பேணிக்கொள்ளட்டும்” எனவும் அருளிச்செய்தார்கள். (ஹதீஸ்.)

“தொழுகையைக் கடைபிடித்தொழுகுங்கள். ஐகாத்தைக்கொடுங்கள். யாதாமொரு நன்மையை ஆன்மாவுக்காக முற்படுத்திவைப்பீர்களேல், அதை நீங்கள் அல்லா(ஹ்)வினிடத்தில் பெற்றுக்கொள்வீர்கள். அல்லா(ஹ்) நீங்கள் செய்பவைகளை நிச்சயமாய் பார்த்துக் கொண்டிருக்கிருன். (அல்—குர்ஆன், 2:110.)

---

# ரபீஉல் அவ்வல் மாதம்,

# நான்காம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் ஆதம் (அலை) அவர்களை மண்ணினல் சிருஷ்டித்து, பின்பு எலும்பு, சதை, தோல், இரத்தம், அல்லா(ஹ்)வன்றி வேறு எவராலும் எண்ணிமுடியாத நரம்புகள் ஆகியவைகளால் அதை உருவுப்படுத்தியவன். பின்பு ஆன்மாவை அதனுள் புகுத்தி அவ்வான்மா மூக்கினுள் வந்தவுடன் "அல்ஹம்து லில்லாஹி" எனச்சொல்லும் உதிப்பையளித்தவன்; (இவை தாம் ஆதம் (அலை) முதன்முதலில் மொழிந்த வார்த்தைகள்.) இவற்றிற்கு அல்லா(ஹ்) "ஆதமே! உமக்கு எனது கருணையுண்டாகுக" என பதிலிறுத்தவன். நிச்சயமாகத் தனித்தவனும் ஒப்புவமையற்றவனுமாகிய அல்லாஹுத்த ஆலாவே வணக்கத்திற்குரியவனென்றும், மெய்யாகவே நமது பிரான் முஹம்மது (சல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் மெய்யடியாருந் திருத்தூதருமாவரென்றும் சாக்ஷியம் பகருகின்றேன். அல்லா(ஹ்) அத்திருத்தூதர்மீதும் அன்னாரின் கிளைஞர் தோழர்களின்மீதும் தனது கிருபா கடாக்ஷ மாரியைச் சொரிந்தருள்வாளுக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளுமாறு

நற்போதனைசெய்கிறேன். மெய்யாகவே அவனையஞ்சி நடப்பது உன்னத பதவியையடைவதற்குப் பேருதவியாகும்.

மானிடர்களே! அறிந்துகொள்ளுங்கள். இவ்வுலகத்தையும் அதின் இன்பசுகங்களையும் எவன் துயர்வானே அவனுடைய துயரம் நிச்சயமாக அதிகப்படும். மேலும், அவனை இவ்வுலகம்தூர்ப்பாக்கியமுள்ளவனாகவும்ஆக்கிவிடும்எனவே, தலைகுனிந்து அல்லா(ஹ்)வுக்கு வழிப்படுபவனே பெரும் நற்பாக்கியமுள்ளவன். ஆகிரத்தின் சுகவாழ்க்கையை இவ்வற்ப உலகின் சுகத்திற்கு பதிலாய் விற்பவனே பெரும் தூர்ப்பாக்கியமுள்ளவன். எத்தனை மனிதர்களை இவ்வுலகம் ஏமாற்றிவிட்டது! அவர்கள் சதா இவ்வுலகில் இருந்து சுகிப்போமெனக்கருதினர்; அல்லா(ஹ்)வை தியானிக்க அவர்களுக்கு மிகச்சொற்ப நேரங்கூட வாய்க்கவில்லை; இறைவனைத்தொழ அவகாசம் கிடைக்கவில்லை; இரவு பகல் உலகத்தின் செல்வத்தைச் சம்பாதிப்பதிலேயே காலம் கழித்தனர்; தங்கள் தொழிலை விருத்திசெய்வதிலேயே மூச்சைத்துலைத்தனர். உணவருந்தக்கூட அன்னவர்கட்கு நேரம் எஞ்சவில்லை; இறுதியாக மரணத்திற்காளானார்கள். ஒரு மனிதனுக்கு உபந்நியாசம் செய்வதற்கு மரணமே தகுந்த விஷயமாகும். அவ்வாறிருக்க எவன் நாம் மரணித்து விடுவோமென்ற எண்ணத்தைக்கொண்டேனும்உறுதிபெறவில்லையோ, அவனுக்கு அச்சத்தையூட்டத்தக்க வேறு உறுதியான சம்பவம் என்ன இருக்கிறது? ஆதியில் அல்லா(ஹ்)தன் கரத்தால் சிருஷ்டித்துத் தனக்கன்பராகத் தெரிந்தெடுத்து, சுவனலோகத்தை அவரது வாசஸ்தலமாக ஆக்கிய ஆதம்(அலை)எங்கே? நீண்ட ஆயுளைப்பெற்றிருந்த நூஹ் (அலை) எங்கே? தூர் என்னும்

மலையில் இறைவனுடன் வசனித்த மூஸா (அலை) எங்கே? இரும்பை மெழுகுபோல் இளக்கும் அற்புத சக்தி அருளப் பெற்றிருந்த தாவூத் (அலை) எங்கே? வேறு எவருக்கும் அளிக்கப்படாத அவ்வளவு பெரிய இராஜாங்கத்தைக் கொடுக்கப் பெற்றிருந்த சுலைமான் (அலை) எங்கே? பிறவி ஊமை, பிறவிக் குருடு ஆகியவர்களை சொஸ்தப்படுத்தவும், மரணித்தவர்களை உயிர்ப்பிக்கவும் வன்மைபெற்றிருந்த ஈஸா (அலை) எங்கே? மிஃராஜுக்குச்சென்று, ஆண்டவனிடம் அதிகம் நெருங்கும் மாப்பெருங்கண்ணியம் அளிக்கப்பெற்றிருந்தவர்களும், அல்லா(ஹ்)வின் அன்பர்களுள் இணையற்றவர்களுமான சர்வலோக நாயகர் முஹம்மது (சல்) அவர்கள் எங்கே? நபிகள் பெருமான் (சல்) அவர்கள் இவ்வுலகைவிட்டு அவர்களது பிரயாணம் சமீபித்து மரணம் அடுத்தபொழுது முஸ்லிம்கள் பள்ளியில் நுழைந்தார்கள். தொழுகைக்காக இமாமத்துச் சொல்பவர்களைக் காணவில்லை; ஜனங்களின் சந்தடியைச் செவியுற்ற நபிபெருமான் (சல்) அவர்கள் "கஷ்டத்திற்குள்ளானவர்களின் துஆவை ஒப்புக்கொள்பவனே உன்னைத் தொழுவதன் மூலமாகவே நான் ஜனங்களிடம் விடைபெற்றுக்கொள்ளும்பொருட்டு எனது நோயைச் சற்றே இலகுவாக்குவாயாக" என அல்லா(ஹ்)விடம் துஆச் செய்தார்கள். பின்பு உட்கார்ந்தவர்களாய் அவர்களின் தொழுகையைப் பூர்த்திசெய்தார்கள். இதுதான் உலகில் நாயகமவர்களின் இறுதித்தொழுகையாயிருந்தது.

சகோதரர்களே! இங்கு சற்று கவனியுங்கள். நபிமார்களும், அவர்களுள் சிரேஷ்டரான நாயகம் (சல்) அவர்களும் மரணமடைந்து இவ்வுலகைவிட்டுப் பிரிந்தார்களென்றால்

நாம் இதில் சதா ஜீவித்திருக்கப்போகிறோமா? ஒருபோது மில்லை. மரணமடையவிருக்கும் நாம் இவ்வுலகத்தில் விட்டுச் செல்லவேண்டியவைகளுக்காக ஏன் அல்லும் பகலும் கஷ்டப்படவேண்டும்? அப்படிப்பட்ட கஷ்டத்தில் ஒருசிறிது அல்லா(ஹ்)வுக்காக ஊழியம் செய்வதில் எடுத்துக்கொள்வோமாயின் உன்னத பதவியடைந்து அல்லா(ஹ்)வின் அன்பிற்கு உரியவர்களாகிவிடுவோம். தவிர நாம் எந்த இலக்ஷியத்திற்காக இவ்வுலகில் பிறந்தோமோ அதையும் பூர்த்திசெய்துவிடுவோம். அல்லா(ஹ்) நம்மனைவருக்கும் தனது நல்லருள் புரிவானாக!

"உங்களுள் மேன்மையானவன் அவனது ஆயுள் அதிகமாகவும், அவனது அமல் நல்லதாகவும் இருப்பவனே. உங்களுள் கெட்டவன் அவனது ஆயுள் நீளமாயும் அவனுடைய அமல்கெட்டதாயுமுள்ளவனே'' எனவும், "அல்லா(ஹ்) விதித்ததற்குச் சம்மதிப்பது ஆதமுடைய சந்ததிகளின் நற்பாக்கியத்திலுள்ளதாகும்; அல்லா(ஹ்) இடத்தில் நல்லுதவி தேடாமலிருப்பதும், அவன் விதித்ததற்குச் சம்மதப்படாமலிருப்பதும் ஆதமுடைய சந்ததிகளின் துர்ப்பாக்கியத்திலுள்ளவைகளாகும்'' எனவும், நபிபெருமான் (சல்) அவர்கள் திருவாய்மொழிந்தார்கள். (ஹதீஸ்.)

"மானிடர்களுடைய அக்கிரமத்தின் காரணமாக அல்லா(ஹ்) அவர்களைப்பிடிக்க நாடுவானாயின் இப்புவியில் ஊர்வன ஒன்றையேனும் விட்டுவைக்கமாட்டான்; எனினும் அன்னவர்களை ஒரு குறித்த காலம்வரை பிற்படுத்துகிறான்; அவர்களது முடிவுகாலம் வந்துவிடுமாயின் ஒரு க்ஷணநேரம் பிற்படுத்தவேனும் முற்படுத்தவேனும்படமாட்டாது.'' (அல்—குர்ஆன், 16:61.)

# ரபீஉல் அவ்வல் மாதம்,

# ஐந்தாம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் மானிட கோடிகளுக்கு நேர்வழி காட்டுபவன்; இலக்ஷக் கணக்காக தீர்க்கதரிசிகளை அனுப்பி எச்சரிக்கை செய்த வன். அந்தத்தீர்க்கதரிசிகள் அவ்வக்கூட்டத்தினின்றும் வெளிப்படுத்தப்பட்டு அவரவர்கட்குத் தக்கவண்ணமாய் நற் போதனை செய்தார்கள்; அவர்களின் உபதேசங்களுக்குச் செவிகொடுத்து மனத்திலிருத்தி நேரானவழியில் நடந்த வன் பாக்கியம்பெற்று ஜயமடைந்தான்; அவர்களின் உப தேசங்களுக்குச் செவிகொடாமல் புறக்கணித்தவன் தனக் குத்தானே தீங்கிழைத்துத் துன்பமடைந்தான். நிச்சய மாகத் தனித்தவனும் ஒப்புவமையற்றவனுமாகிய அல்லா ஹுத்த ஆலாவே வணக்கத்திற்குரியவனென்றும், மெய்யா கவே நமதுபிரான் முஹம்மது (சல்) அவர்கள் அல்லா(ஹ்) வின் மெய்யடியாரும் திருத்தூதருமாவரென்றும் சாக்ஷியம் பகருகின்றேன். அல்லா(ஹ்) அத்திருத்தூதர்மீதும் அன் னாரின் கிளைஞர் தோழர்களின்மீதும் தனது கிருபாகடாக்ஷ மாரியைச் சொரிந்தருள்வானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக் கும் முதலாவதாக ஆண்டவனைப் பயந்துகொள்ளும்படி நல்

உபதேசஞ்செய்கின்றேன். மெய்யாகவே அவனையஞ்சி நடப்பது உன்னத பதவியையடைவதற்குப் பேருதவியாகும்.

சகோதரர்களே! இன்ப துன்பம் என்பன பிரத்திபட்சமான இரண்டு சம்பவங்கள். சந்தோஷத்திற்குரிய நற்கிரியைகளை உங்களுள் ஒருவன் செய்வானாயின் அவை அவனுக்கு இகபரலோகங்களில் இன்பத்தையே அளிக்கும். துக்கத்திற்குரிய துர்ச்செய்கைகளை உங்களுள் ஒருவன் செய்வானாயின் அவை அவனுக்கு இருலோகத்திலும் துன்பத்தையே விளைவிக்கும். இன்பமும் துன்பமும் இறைவனால் விளைவிக்கப்படுபவைகளென்பது நமது நம்பிக்கை; ஆயினும் அவைகளை அடையவிரும்புவதும், அதற்கெனப் பலதுறைகளில் முயற்சிப்பதும், இறுதியில் அச்செய்கைகள் நம்முடைய சம்மதத்தின்பேரில் நடைபெறும்படி செய்துகொள்வதும் நாமே. இதனால் இத்துன்பத்திற்கு மூலகாரணம் நாம் தாமென்பது வெளிப்படையான விஷயமன்றோ? நீங்கள் இவ்வுலக விஷயங்களில் இன்பத்தையடைய விரும்பி அதற்கெனப் பற்பல யோசனைகளும் முயற்சிகளும் செய்கின்றீர்கள். அப்படிச்செய்தும் கைகூடாமல்போன காரியங்களுக்காக "நான் கொஞ்சம் தவறிவிட்டேன், எனது யோசனை கொஞ்சம் பிசகிவிட்டது" என உங்களை நீங்களே நொந்துகொள்வதில்லையா? இதனால் அக்காரியத்தைப்பற்றி யோசனை செய்வதும், அதை நிறைவேற்ற முயற்சிப்பதும் உங்கள் பாலுள்ளதென்பதை சற்று நீங்களே கவனிக்க வேண்டாமா? ஆகிரத்தின் காரியங்களில்மாத்திரம் உங்களுக்குஎன் இக்கவலை இல்லை? உங்களுடைய ஆன்மாக்கள் இன்பமடையும்பொருட்டு அவ்வின்பத்தை அளிக்கும் இறைவனது

ஏவல்களை ஏன் கைக்கொள்ளக்கூடாது? அவன் விலக்கிய விலக்கல்களை ஏன் விட்டகலக்கூடாது? ஆகிரத்தின் கருமங்களில் கவனத்தைச் செலுத்தாமலிருப்பது பெரும் தவறென்றே நீங்கள் கருதவேண்டும். அஃது பின்னால் வரக்கூடியதாயிருப்பதால் அப்படியொரு இறுதிநாள் இல்லையென எண்ணுகிறீர்கள்போலும்! அதனால்தான் தொழுகை, நோன்பு, ஜகாத்து, ஹஜ்ஜு முதலிய முக்கிய கடமைகளையும் கவனிக்காமலிருக்கின்றீர்கள். அந்தோ பரிதாபம்! உங்களின் அறியாமைக்கு யாது சொல்வேன்! மறுமையைப் பற்றி அலக்ஷியமாயிருப்பவன் அடையும் ஏமாற்றத்தை என்னென்றுரைப்பேன்! இறைவனால் வெளியிடப்பட்ட திருமறையின்மீது நம்பிக்கை வைத்தபின்னும் இப்படியெல்லாம் எண்ணுவதென்றால் நீங்கள் ஷைத்தானின் சூட்சியில் பூரணமாய்ச் சிக்குண்டு கிடக்கின்றீர்கள் என்றே சொல்லவேண்டியிருக்கிறது. உலக ஆசையில் மூழ்கி ஆழ்ந்துவிட்டீர்கள் எனவே கூறவேண்டியிருக்கிறது. உலக இச்சையென்னும் அஞ்ஞான இருளில் மருண்டுழலும் சகோதரர்களே! உங்கள் அறியாமையென்னும் தூக்கத்தினின்றும் விழித்தெழுங்கள்; இவ்வுலகத்தையும், அதிலுள்ளவைகளையும் சற்று நிதானமாய்ச் சிந்தித்துப்பாருங்கள். உங்களுக்குமுன் இறந்தவர்களுடையவும், இப்பொழுது இறக்குந்தருவாயில் பிணிவாய்ப்பட்டிருப்பவர்களுடையவும், இன்றோ நாளையோ எப்பொழுதோ நிச்சயமாக மரிக்கவேண்டியவர்களான உங்களுடையவும் நிலைமையைச் சிந்தித்துப்பாருங்கள். இறந்தபின் நீங்கள் யோசிப்பதும், ஒன்றைச்செய்ய முற்படுவதும், முடியாத காரியமன்றோ? எஞ்சியிருக்கும் சொற்ப ஆயுளில்

உங்களுக்கு மறுமையில் இன்பந்தரும் வேலைகளை வெகு சீக்கிரமாய் முடித்துக்கொள்ளுங்கள். பின்னால் பச்சாதாபப் படுவது பிரயோஜனந்தராது. அல்லா(ஹ்) நம்மனைவோருக் கும் அவனை வணங்கும் நல்லறிவைத் தந்தருள்வானாக.

"அல்லா(ஹ்)வின்மீது ஆணையாக ஆகிரத்துடன் ஒப் பிடும்பொழுது இவ்வுலகமானது கடலில் ஒரு விரலைத் தோய்த்தெடுப்பதுபோலாகவேயிருக்கிறது. இவ்வுலக இச் சையின் வசப்பட்டிருப்பவன் எவ்வளவு அற்பமான பல னடைகிறான் என்று சிந்திக்கட்டும்!" எனவும், "அல்லா(ஹ்) வின்மீது சத்தியமாக நீங்கள் எளியவர்களாக்கப்படுவது எனக்குக் கவலையைத்தரவில்லை. உங்களுக்குமுன்னிருந்த கூட்டத்தினருக்கு செல்வம் அளிக்கப்படவே அவர்கள் அதன் ஆசையிலேயே ஆழ்ந்துவிட்டதனால் நாசஞ்செய்யப் பட்டார்கள்; உங்களுக்கும் அக்கதி நேராதிருக்கவேண்டுமே என்றே நான் கவலைப்படுகிறேன்" எனவும், நபிகள் பெரு மான் (சல்) அவர்கள் அருளிச்செய்தார்கள். (ஹதீஸ்)

"நீங்கள் யாதொன்றையும் அறிந்திருக்காத நிலைமை யில் உங்கள் தாய்மார்களின் உதரங்களிலிருந்து அல்லா(ஹ்) உங்களை வெளிப்படுத்தினான். மேலும் நீங்கள் அல்லா(ஹ்) வுக்கு நன்றிசெலுத்தும்பொருட்டு கேள்வி, பார்வை, அறிவு ஆகியவைகளை உங்களுக்குத்தந்தான்." (அல்—குர்ஆன், 16 : 78.)

---

## ரபீஉல் ஆகிர் மாதம்,

# முதலாம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் தன் அடிமைகளான மூமினை ஆண்பெண் அடங்கலின் மீதும் தொழுகையைக் கடமையாக்கியவன்; மேலும் நேரான இஸ்லாம் மார்க்கத்திற்கு அதை ஒரு தூணைப்போல நிறுத்தியவன்; மேலும் நல்ல அமல்களை இம்மார்க்கத்தின் மூல கர்மங்களாக ஏற்பாடுசெய்து, நம்மீது ஐந்து நேரங்களில் ஐந்து தொழுகையைக் கடமைப்படுத்தியவன்; அந்தநேரங்களைவிட்டும் அத்தொழுகைகளை பிற்படுத்த நாம் எவ்வித காரணமும் சொல்லிக்கொள்ள முடியாது. ருகூஉ, சுஜூது, ஓதல் முதலியனவகளைக் குறைவின்றி நிறைவேற்றி அத்தொழுகைகளை ஒருவன் காப்பாற்றிக்கொள்வானாயின், அவனது சிறுபாவங்கள் அவற்றின் காரணத்தால் மன்னிக்கப்பட்டுவிடும். நிச்சயமாகத் தனித்தவனும் ஒப்புவமையற்றவனுமாகிய அல்லாஹுத்தஆலாவே வணக்கத்திற்குரியவனென்றும், மெய்பாகவே நமது பிரான் முஹம்மது (சல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் மெய்யடியாரும் திருத்தூதருமாவரென்றும் சாக்ஷியம் பகருகின்றேன். அல்லா(ஹ்) அத்திருத்தூதர்மீதும் அன்னாரின் கிளைஞர் தோழர்களின்மீதும் தனது கிருபாகடாக்ஷ மாரியைச் சொரிந்தருள்வானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகாள்! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக ஆண்டவனைப் பயந்துகொள்ளும்படி நல்லுபதேசம் செய்கிறேன். மெய்யாகவே அவனையஞ்சி நடப்பது உன்னத பதவியை அடைவதற்குப் பேருதவியாகும்.

மானிடர்களே! அல்லா(ஹ்)வை யஞ்சி நடந்துகொள்ளுங்கள்; உங்களுடைய பாவங்கள் குறைகள் யாவற்றையும் அவன் பொறுத்துவிடுவான். அறிந்துகொள்வீர்களாக! தொழுகையானது எவ்வளவு முக்கியமானதென்பதை உங்களுக்குநான் எத்தனைமுறை எடுத்துக்கூறினும் மிகையாகாது. ஏனெனின், அல்லா(ஹ்) தன் திருமறையில் நூற்றுக்கணக்கான தடவை தொழுகையைப்பற்றி வற்புறுத்திக் கூறியிருக்கிறான் என்றால் அதுஎவ்வளவு முக்கியமானதென்பதை நீங்களே ஊகித்துப்பாருங்கள். பெரும்பான்மையினர் அதை அவ்வளவு முக்கியமாகக் கருதாமல் அலக்ஷியமாய் இருக்கின்றனர். எனவே அதனால் ஏற்படும் குற்றங்களை மாத்திரம் கொஞ்சம் எடுத்துக்கூறுகிறேன். தொழுகையை விட்டவனது சாக்ஷியம் இஸ்லாமிய நீதிஸ்தலங்களிலும், முஸ்லிம்களிடத்திலும் ஒப்புக்கொள்ளப்படமாட்டாது; பொதுமக்கள் கூடுமிடங்களில் அவர்களுக்கு சலாம் சொல்லுவதும், அவர்கள் உங்கள்மீது சலாம் சொல்லுவார்களாயின் நீங்கள் பதிலுரைப்பதும் விரும்பத்தகாதனவாகும். இவ்விதமாகவே நவவி இமாம் சொல்லியிருக்கிறார்கள். காரணமாவது, தொழுகையானது அல்லா(ஹ்)வின் கண்டிப்பான ஆக்ஞைக்குட்பட்டதும், நபிமார்களடங்கலாலும் அனுஷ்டிக்கப்பெற்றதுமாய் இருக்கிறது. மேலும் மானிடகோடிகளாகிய நம்மை அல்லா(ஹ்) அதற்கெனவேசிருஷ்டித்துள்ளான். தொழுகை

விட்டவனை நம்பப்படமாட்டாது. அவன் அநேகநேரங்களில் மோசஞ் செய்வான். மரணம் சமீபித்துவிடுமாயின் அவன் மீது சகராத் கடினமாகும். நாசஞ்செய்யும் முட்களில்மாட்டி இழுக்கப்படும் மெல்லிய பட்டுக்கொப்பாக அவனது ஆன்மா இழுக்கப்படும். சரீரத்தைவிட்டு ஆன்மா பிரிந்துவிடுமாயின் கஷ்டத்தை யுண்டாக்கும் கருவிகளைக் கைக்கொண்டிருக்கும் வேதனைசெய்யும் மலக்குகள் அவ்வான்மாவை எடுத்துக்கொள்வார்கள். பின்பு அவ்வான்மா நாற்றத்துடனும், பரிதாபமான கூக்குரலுடனும் வானத்தளவில் கொண்டு செல்லப்படும். வானத்தின் வாசல்கள் திறக்கப்படமாட்டா. ஆகவே கேடான நிலைமையில் தன் சரீரமிருக்கும் இடத்திற்கு திரும்பிவிடும் அது மேலும் அவனை கப்ரில் அடக்கம் செய்து மண்ணை அவன்மீது தள்ளப்படுமாயின், அழகிய திருத்தமான மொழிகளைக்கொண்டு கபர் அவனை நோக்கி, "உலகில் இரக்ஷகனின் கடமைகளைப் பழுதாக்கியவனே! என்மீது நீண்டகாலம் ஜீவித்திருந்து இறைவனின் தொழுகையை வீணாக்கியவனே! தொழுகையைவிட்டு உலக ஆசாபாசங்களில் மூழ்கியவனே! உனக்குக் கேடுண்டாகுக! உனது இருப்பிடம் கெட்டதாகுக! பெரிய மலைகளாலும் சகிக்கொணாத வேதனையை இன்று என்பால் காண்பாய்" எனக்கூறியபின் அவனை அழுத்தமாக நெருக்கும் அப்பொழுது அவனது எலும்புகள் ஒன்றோடொன்று பின்னிக் கொள்ளும்.

சகோதரர்களே! சற்று சிந்தித்துப்பாருங்கள். இந்த நிலைமையில் நீங்கள் ஆகிவிடும்பொழுது உங்கள் இன்பசுகங்கள் உங்களுக்கு உபகாரம்செய்தல்கூடுமா? அல்லும்பகலும்

கஷ்டப்பட்டுத்தேடிய பொருள் யாதுக்குதவும்? உங்களின் அன்புநிறைந்த சந்ததிகள் எவ்வளவுதூரம் உங்களுக்கு உதவுவார்கள்?

"குல் அஊது பிரப்பில் பலக்" என்ற திருமறையின் வசனத்தைப்பற்றி அனஸ் (ரலி) அவர்கள் நபிகள் பிரான் (சல்) அவர்களை நோக்கி "அல்லா(ஹ்)வின் திருத்தூதரே! "பலக்" என்பது யாது?" என வினவினார்கள். அதற்கு "அஃதொரு கிணறு; ஒரு பறவை ஆயிரம் வருடம் அதில் (கீழ்நோக்கிப்)பறக்கினும் அதன் ஆழத்தை எத்திக்கொள்ள முடியாது" என நாயகம்(சல்) அவர்கள் பதிலுரைத்தார்கள். அப்பொழுது "இறைவனது தூதரே! அது யாருக்கு?" என முன்னவர் வினவினர். "சரீரசௌக்கியமாயிருக்கும் பொழுது தொழுகையை விட்டவனுக்கு" என நபிபெருமான் (சல்) அவர்கள் பதிலுரைத்தார்கள். (ஹதீஸ்)

"அல்லா(ஹ்) சாந்தியின் வீட்டின்பால் (உங்களை) அழைக்கின்றான், மேலும் அவன் நாடிய ஜனங்களை நேரான பாதையளவில் வழிகாட்டுகிறான். நன்மை செய்தவர்களுக்கு (அதற்குத்தகுந்த) சன்மானமும் அதிகமும் உண்டாயிருக்கிறது. மேலும் அன்னவர்களின் முகங்களை கலக்கமும், கஷ்டமும் சூழ்ந்துகொள்ளமாட்டாது. அவர்கள்தாம் சுவர்க்கவாதிகள், அதில் அவர்கள் எந்நாளுமிருப்பார்கள்."

(அல்—குர்ஆன், 11 : 26.)

---

## ரபீஉல் ஆகிர் மாதம்,

# இரண்டாம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் நமக்கு இஸ்லாமென்னும் பெரும்பாக்கியத்தை அருளியவன்; இவ்வுலகத்தவர்களை நன்கொடைகளைக் கொண்டு போஷிப்பவன்; கப்ரில் தன் அடிமைகளுக்கு சந்தோஷத்துடன் கருணைபுரிபவன்; இறுதிநாளில் நீதத்துடனும், பேருபகாரத்துடனும் தீர்ப்பளிப்பவன்; ஈமானின் பேரில் நிலைத்திருப்பதுகொண்டு நேர்வழி காட்டுபவன். வணக்கத்திற்குரியவன் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு எவருமில்லை. அவன் தனித்தவன் இணையற்றவன் என்றும், எமது பெருமான் முஹம்மது(சல்) அவர்கள் அவனது திருத்தூதரும், மானிடர்களுள் சிரேஷ்டமானவரும் ஆவரென்றும் சாக்ஷியம் பகருகின்றேன் அல்லா(ஹ்) அவர்கள்மீதும் அவர்களது கிளைஞர் தோழர்கள்மீதும் எந்நாளும் சாந்தியையும் கருணையையும் அருள்புரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நற்போதனை செய்கின்றேன். அவனைப்பயந்தவனே அவனிடத்தில்மேன்மையானவன்; அவனுக்கே கருணையுண்டாகுக.

மானிடர்களே! எனக்கும் உங்களுக்கும் அல்லா(ஹ்) நற்கிருபை செய்தருள்வானாக உங்களின் சகோதரர்களும் புத்திரர்களும், தந்தைகளும் எங்கே? உலமாக்களும் அரசர்களும் எங்கே? ஜட்ஜுகளும், சாக்ஷி பகர்ந்தவர்களும் எங்கே? அவர்களெல்லாம் மண்ணறையினுள் அமர்ந்து அவர்களின் சரீரம் மண்ணுக்கிரையாகி விட்டதன்றோ? அவர்களது கபன்கள் நைந்து மண்ணுடன் சேர்ந்துவிட்டன. அல்லா(ஹ்)வின்மீது ஆணையாக அவர்கள் இறைவனுக்கு உண்மையாக அடிபணிந்தொழுகி இருப்பார்களாயின், மரணத்தின் கஷ்டத்திற்குத் தப்பி மலக்குகளின் கண்டிப்பான கேள்விகளுக்குத் தகுந்த ஜவாபு கொடுத்திருக்கமுடியும். அவ்வாறில்லையேல் அவர்களது கதி எவ்வாறாகுமென்பதை இறைவனே அறிவன். உடலைவிட்டும் உயிரை நீக்கப்படும் கஷ்டமானது முந்நூறு வெட்டு குத்தைப்பார்க்கினும் அதிக கடுமையானதாகும். அல்லா(ஹ்)வைப்பற்றியும், இன்னும் சில விஷயங்களைப்பற்றியும் முன்கர் நகீர் என்னும் இரு மலக்குகளின் கேள்வி, இவைபடங்களைப்பார்க்கினும் கடினமானதாகும்.

இவர்களின் கேள்விகளுக்கு நிச்சயமான ஜவாபுகொடுப்பார்களாயின் அவ்விரண்டு மலக்குகளும் சுவனத்தின் வாசல்களை இவனுக்காகத் திறந்துவைத்து, மெய்யான விடை பகர்ந்த காரணத்தால் சந்தோஷத்துடன் திரும்பிச்செல்லுவார்கள். இறந்த அவன் முனாபிகாயும் காபிராயுமிருப்பானாயின், கொடூரமான, கடுமையான இரண்டு மலக்குகள் அவனிடம் வருவார்கள். "உன்னுடைய இரக்ஷகன் யார்? உன்னுடைய நபி யார்? உனது மார்க்கமென்ன?" என்னும் பல

கேள்விகளைக் கேட்பார்கள். சரியான பதிலுரைக்க அறியாமல் அருகிலிருக்கும் ஷைத்தானைச் சுட்டிக்காட்டி "இவர் தான் என்னுடைய ரப்பு" என்று பதிலிறுப்பான். இவ்வாறே மற்றவைகளுக்கும் பதில்சொல்ல அறியாமையால் பலவாறாக வாயில் வந்தபடி உளறுவான்; அந்நேரம் அந்த இருமலக்குகளும் அவனது எலும்புகள் நொறுங்கக்கூடிய அவ்வளவு கடினமாக அடிப்பார்கள். பின்பு நரகத்தின் வாசல்களை அவனுக்காக திறந்துவைத்து அதின் கஷ்டங்களை அனுபவிக்கும்படி சொல்லித் திருப்புவார்கள். அல்லா(ஹ்)வின் கோபத்திற்கு ஆளாகியவர்கள் எங்ஙனம் சந்தோஷமடைதல்கூடும்?

கப்ருடைய வேதனையும், முன்கர் நகிர் என்னும் மலக்குகளின் கேள்வியும் நடைபெறுதல் உண்மையென்பதும், அங்கு நல்லவர்கட்கு சுகமும் கெட்டவர்கட்கு துக்கமும் உண்டென்பதும், நபிபெருமான் (சல்) அவர்களின் ஹதீஸ்களின் கூற்று. சஹாபாக்கள், அதற்குப் பின்னுள்ள பெரியார்களின் நன்னம்பிக்கையும் இதுவே. ஆதலால் இந்நம்பிக்கையின்பேரில், இறைவனின் கோபததிற்காளாகாமல் அல்லா (ஹ்) வையஞ்சி நேரான வழியில் சீராகச் செல்லுங்கள். ஷைதானும் அவனுடைய மானிடசிஷ்யர்களும் வெகுசுலபத்தில் உங்களை ஏமாற்றி விடுவார்கள். அப்படி ஏமாற்றம் அடையாமலிருக்கும் பொருட்டு எந்நாளும் அல்லா(ஹ்)வினிடம் காவல்தேடுவீர்களாக.

"ஒருவனை கப்ரில் அடக்கப்பட்டு அவனுடைய சிநேகிதர்கள் அவனைவிட்டு திரும்புவார்களாயின் நிச்சயமாக இறந்தவன் அவர்களது காலடி சப்தத்தைக்கேட்கிறான்.

இரண்டு மலக்குகள் அவனிடம் வந்து அவனை உட்காரவைப்பார்கள்; "நபிபெருமான் (சல்) அவர்களின் விஷயத்தில் என்ன நம்பிக்கை வைத்திருந்தாய்" என அவ்விருமலக்குகளும் அவனைக்கேட்பார்கள். மூமினாயிருந்தால் "நிச்சயமாய் நபிபெருமான் (சல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் அடிமையும் அவனின் தூதருமாவர் என சாக்ஷிபகருகின்றேன்" என பதிலிறப்பான். அப்பொழுது நரகத்தை அவனுக்குக்காட்டி இது உன்னுடைய வாசஸ்தலமாயிருந்தது; அல்லா(ஹ்) இதற்கு பதிலாய் சுவர்க்கத்தில் உனக்கு இடத்தைக்கொடுத்திருக்கிறான் என அவ்விருவரும் கூறுவார்கள். இறந்தவர்கள் காபிர் அல்லது முனாபிகாய் இருப்பார்களாயின் கேள்விகளுக்கு பதிலுரைக்க முடியாமல் "நான் அறியேன்" என்பார்கள்; "நீ அறியாமலே இருக்கக்கடவது" என மலக்குகள் பதிலுரைத்து இரும்புத்தடியினால் அவர்களை அடிப்பார்கள். அப்பொழுது மனிதன், ஷைத்தான் இருகூட்டத்தைத்தவிர அருகிலுள்ளவர்கள் எல்லாருக்கும் கேட்கும்படி அவர்கள் சப்தமிடுவார்கள்" என நபிகள்நாயகம் (சல்) அவர்கள் திருவுளமானார்கள். (புகாரி, முஸ்லிம்)

"ஒருவன் அல்லா(ஹ்)வின்வழியில் முயற்சிப்பானாயின் அவன் தனக்காகவே முயற்சிக்கிறான். நிச்சயமாய் உலகத்தவர்களைவிட்டும் அல்லா(ஹ்) தேவையற்றவனாயிருக்கிறான். ஈமான்கொண்டு நற்றவம்புரிந்தவர்களுக்கு அவர்களது சிறிய பாவங்களைப் பொறுத்துவிடுவோம். மேலும் அவர்கள் செய்ததைப்பார்க்கினும் அழகியதை அவர்களுக்கு நாம் சன்மானமளிப்போம்." (அல்—குர்ஆன், 7 : 29.)

## ரபீஉல் ஆகிர் மாதம்,

# மூன்றாம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் நிலைத்திருக்கும்படியான பெரிய மலைகளனைத்தும் தனது கண்ணியத்தால் நடுங்கும் சக்தியுள்ளவன்; சர்வரகசியங்களையும் அறிபவன்; அவனின் உத்திரவன்றி ஓரணுவும் அசைய முடியாது. இவ்வுலகிலுள்ள யாதொன்றும் அவனைவிட்டும் மறையாது. இருளான இரவில் நடக்கும் சிற்றெறும்பையும் பார்க்கும் வல்லமையுடையவன். வணக்கத்திற்குரியவன் அல்லா(ஹ்)வைத்தவிர வேறு எவருமில்லை; அவன் தனித்தவன் இணையற்றவன் என்றும், எமதுபெருமான் முஹம்மது (சல்) அவர்கள் அவனது திருத்தூதரும், மானிடர்களுள் சிரேஷ்டமானவரும் ஆவரென்றும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா (ஹ்) அவர்கள்மீதும் அவர்களது கிளைஞர் தோழர்கள்மீதும் எந்நாளும் சாந்தியையும் கருணையையும் அருள்புரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதன்முதலாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நற்போதனை செய்கிறேன். அவனைப்பயந்தவனே அவனிடத்தில்மேன்மையானவன். அவனுக்கேகருணையுண்டாகுக.

சகோதரர்களே! உங்களின் மனங்களை அல்லா(ஹ்)வின் பால் திருப்பாமல் வெறுமனே உபந்நியாசங்களைக் கேட்டுவிட்டு அலட்சியமாக எதுவரை இருப்பீர்கள்? எவ்வளவுதான் உங்களுக்கு நேரான வழியைக் காட்டினபோதிலும் நீங்கள் கண்மூடித்தனமாகவே போய்க்கொண்டிருக்கிறீர்கள். உலக ஆசாபாசங்களில் உங்கள் ஹிருதயங்கள் செல்லவொட்டாது விலக்குமாறு எத்தனை தூரம் நற்போதனை செய்தபோதிலும், உங்கள் மனங்கள் அதன் இச்சையிலேயே மூழ்கிப் பற்றிக்கொண்டிருக்கின்றன. ஆகிரத்தைப்பற்றி எவ்வளவு ஆசையைப் புகட்டினும் உங்கள் மனங்கள் அதை விட்டும் புறக்கணிப்பதையே வழக்கமாகக் கைக்கொண்டிருக்கின்றன. நம்முள் நற்பாக்கியமுள்ளவன் எவனென அறிந்திருப்போமாயின் அவனுக்கு சுவன வாழ்வைக்கொண்டு நன்மாராயம் சொல்ல சித்தமாயிருக்கின்றோம். நம்முள் துற்பாக்கியமுள்ளவன் எவனென நிச்சயமாய் அறிந்திருப்போமாயின் கரிக்கக்கூடிய நரகவாழ்வை அடையப்போவதை முன்னிட்டு ஆறுதல் கூறுவோம். அந்தோ! என்னுடைய இந்த உபந்நியாசம் வன்னெஞ்சை உருகும்படி செய்யவேண்டாமா? கல்லேனும் ஒருபொழுது கரைந்துவிடும். உங்களின் மனக்கற்கள் கரைவதில்லையே! கற்களில் சிலவற்றிலிருந்து நீர் ஊற்றாய்ப்பெருகி ஓடுகின்றது. உங்கள் மனங்கள் அப்படி உருகியோடவேண்டாமா? உள்ளத்தில் உலக ஆசைகள் நிரம்பிக் கிடப்பவர்களே! உங்கள் ஆசாபாசங்கள் ஒழிந்து, உங்கள் இல்லங்கள் ஒன்றுமில்லாதனவாய்க் காணப்படும் ஒருநாள் வருமென்பதை உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். மரணம் உங்களை

உங்களது மண்ணறைக்குச் சேர்த்துவிடும். உங்கள் குழந்தைகள் உங்களைநினைத்து நீர்ததும்பும் கண்களால் அழுவார்கள்; மனைவிகள் புருடனற்றவர்களாகவும், குழந்தைகள் அனாதைகளாகவும், பந்துக்கள் பந்துக்களை இழந்தவர்களாகவும் ஆகிவிடுவார்கள். அந்தோ பரிதாபம்! இவைகளனைத்தையும் சிந்தித்துப் பார்ப்பீர்களாக! முன்னுள்ளவர்கள் எங்கு சென்றனர் என்பதை சற்று ஊன்றிக் கவனிப்பீர்களாக! அவர்களெல்லாருக்கும் மரணம் கலக்கமான குடிப்பைப் புகட்டிவிட்டது. அறிந்துகொள்ளுங்கள், அதே கதி உங்களையும் எதிர்நோக்கி வந்துகொண்டிருக்கிறது. மரணம் என்னும் வேங்கையானது உங்கள்மீது பாய்ந்து பிடிப்பது காலையிலோ மாலையிலோ என்பதை இறைவன் அறிவான். பின்பு உங்கள் மண்ணறைகளைவிட்டும் நிர்வாணிகளாயும், வெறுங்காலுடையவர்களாயும் உயிர்த்தெழுவீர்கள். அப்பொழுது நீங்கள் அளிக்கும் விடை தகுதியற்றதாயிருந்தால் உங்கள்பாடு எவ்வாறாகும்? உங்கள் கழுத்துகளில் விலங்குகளை மாட்டப்படும். நரகத்தின் வேலைக்காரர்களால் நீங்கள் இழுக்கப்படுவீர்கள். "யாதொன்றும் அவனைவிட்டும் மறைய முடியாத அப்படிப்பட்ட தத்துவமுள்ள அல்லா(ஹ்)வின் கடமைகளை வீணாக்கியவனது கதி இதுவே" என மலக்குகள் சப்தமிடுவார்கள். ஆதலால் சகோதரர்களே! அல்லா(ஹ்)வை பயப்படவேண்டிய ஒழுங்குப்படி அவனை பயந்து கொள்ளுங்கள். அவனையஞ்சவேண்டிய கிரமப்படி அஞ்சி நடந்துகொள்ளுங்கள்; அப்பொழுது தான் அவனிடத்தில் நன்குமதிக்கப்படுவீர்கள்; அவனது அழகிய சன்மானம்பெற யோக்கியதையுடையவர்களாக

ஆகுவீர்கள். இஷ்டப்படியெல்லாம் நடப்பதென்ருல் இறைவனை மறந்துவிட்டீர்களென்றே அர்த்தமாகும். இறைவன் நம்மனைவருக்கும் அவனிடத்தில் நற்கதியடையும் பாக்கியத்தையும், அவனுக்கே தொண்டுபுரியும் நல்லறிவையும் தந்தருள்வாஞக.

"மரணமடைந்த ஒவ்வொருவரும் பச்சாதாபப்பட்டே தீருவர்.'' என நபிபெருமான் (சல்) அவர்கள் அருளின பொழுது, " அல்லா(ஹ்)வின் ரசூலே! அவர்களின் பச்சாதாபமென்ன?'' என தோழர்கள் வினவினர்கள். (அப்பொழுது) ஒருவன் நன்மை செய்திருப்பானுயின் "இன்னும் யான் அதிகமாய்ச் செய்துகொள்ளவில்லையே'' என்றும், ஒருவன் தீமை செய்திருப்பானுயின் "மரணமாகாமலிருக்க வேண்டிற்றே'' என்றும் கூறுவதுதான், என அருளினர்கள். (திர்மதீ)

"அவர்கள் (மனிதர்கள்) பூமியில் சுற்றுப்பிரயாணம் செய்து அவர்களுக்கு முன்னுள்ளவர்களின் முடிவு எவ்வாருயிற்றென்பதைப் பார்க்கவில்லையா? அவர்கள் (முன்னுள்ளவர்கள்) இவர்களைப்பார்க்கினும் வல்லமைசாலிகளாகவும், பூமியில் பெரிய கட்டிடங்களையுடையவர்களாகவும் இருந்தார்கள். அவர்களது பாவங்களின்காரணத்தால் அல்லா(ஹ்) அவர்களை நாசமாக்கினன். (அப்பொழுது) அல்லா(ஹ்)வைவிட்டும் அவர்களைக் காப்பாற்றுபவன் உண்டாயிருக்கவில்லை.'' (அல்—குர்ஆன், 40 : 21.)

---

# ரபீஉல் ஆகிர் மாதம்,

# நான்காம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் நாம்கேட்காமல் கொடையளிப்பவன்; கண்ணியமுள்ளவன்; தவ்பாச்செய்தவர்களின் தவ்பாவை ஒப்புக்கொள்பவன்; தூண்களன்றியே வானத்தை நிறுத்தியவன்; பூமியை விசாலமாக விரித்து மானிடகோடிகளை அதில் சிருஷ்டித்தவன். வணக்கத்திற்குரியவன் அல்லா(ஹ்)வைத்தவிர வேறு எவருமில்லை, அவன் தனித்தவன் இணையற்றவன் என்றும், எமது பெருமான் முஹம்மது (சல்) அவர்கள் அவனது திருத்தூதரும், மானிடர்களுள் சிரேஷ்டமானவரும் ஆவரென்றும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்கள்மீதும் அவர்களது கிளைஞர் தோழர்கள்மீதும் எந்நாளும் சாந்தியையும் கருணையையும் அருள்புரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நற்போதனை செய்கின்றேன். அவனைப்பயந்தவனே அவனிடத்தில்மேன்மையானவன். அவனுக்கே கருணையுண்டாகுக.

மானிடர்களே! உங்களின் சக்தியும், வாலிபமும் குறைந்துவிட்டன. வேதனையை பயப்படாமல் எவ்வளவு

காலம்பாவங்களில் மூழ்கியிருப்பீர்கள்? வாசல்களை அடைத்துக்கொண்டு மனிதர்களைவிட்டும் மறைந்துகொள்கிறீர்கள். ஆனால் அல்லா(ஹ்ற)நீங்கள் செய்பவைகளை நோக்கிக்கொண்டிருக்கிறான். எவ்வளவு காலம் பகிரங்கமாய் பாவங்களைச் செய்வீர்கள்? எவ்வளவு காலம் அருவருக்கப்பட்டவைகளைக் கைக்கொண்டு பெருமை பாராட்டுவீர்கள்? ஆயுள் நாள் குறைந்து வருவதைச் சிந்திக்காமல் எத்துணைகாலம் பாவங்களை அதிகப்படுத்திக்கொண்டு போவீர்கள்? தவ்பாச் செய்யாமல் எதுவரை இவ்விதச்செயல்களில் ஈடுபடுவீர்கள்? அந்தோ பரிதாபம்! நற்செய்கைகளை இழந்த ஏழைகளே! பாவங்கள் பித்அத்தான கிரியைகளைவிட்டும் தவ்பாச் செய்வதற்கு விரைந்தெழுங்கள். நீங்கள் செய்யும் மத சம்பந்தமான ஒவ்வொரு சடங்குகளிலும் அனாசார பித்அத்துகளை நிறப்பி இருக்கின்றீர்கள்; அவைகளை விட்டொழிக்கஉங்கள் ஹிருதயம் இடந்தருவதில்லை. அவைகளனைத்தும் மார்க்கத்தில் கடமையாக்கப்பட்டவைகளேபோல் நினைத்திருக்கின்றீர்கள். என்னே உங்களது அறியாமை! "பித்அத்துகளனைத்தும் வழிதவறினவை" என, நபிகள் பிரான்(சல்) அவர்கள் அருளியதை ஊன்றி கவனிப்பீர்களேல் நீங்கள் செய்வது தவறென்பதை உணர்ந்துகொள்வீர்கள். சகோதரர்களுடன் சண்டை செய்தல், தர்க்கித்தல், பெருமை, முகதாக்ஷிணை ஆகியவைகளை விட்டொழியுங்கள். மண்ணறையில் புகுமுன் உங்கள் பாவங்களை நினைத்து கண்ணீர் சொரிந்து பச்சாதாபப்படுங்கள்.

சகோதரர்களே! நீங்கள் குடும்பத்துடன் சந்தோஷமாயிருக்கின்றீர்கள்: விளையாட்டிலும் வீண் வேலைகளிலும்

ஏமாற்றமடைந்திருக்கிறீர்கள்; புறம் பேசுதல், கோள் சொல்லுதல், பொய்சொல்லுதல், ஆகிய பாதகங்களுள் சிக்குண்டு, அவ்வித நடத்தையுடைய சிநேகிதர்கள், பந்துக்கள் ஆகியவர்களுடன் கலந்து ஆகிரத்தை மறந்துவிட்டீர்கள். பலவிதமான நோய்களால் பீடிக்கப்பட்டு, சக்தியையும் தந்திரங்களையும் இழந்து, அவயவங்கள் சோர்ந்து அழகிய வடிவம் மாறிப்பட்டு, கேள்விக்கு ஜவாபுகொடுக்க அசக்தர்களாய் விடும் காலம் ஒன்றுவரும் என்பதை உங்களுக்கு ஞாபகப் படுத்துகிறேன். அப்பொழுது சக்ராத்தின் கஷ்டங்களையும் மரணத்தின் வேதனைகளையும் கண்ணுறுவீர்கள். உங்கள் சந்ததிகள் உங்கள்கதியைக்கண்டு இரங்கிக் கண்ணீருகுத்து அழுவார்கள். உங்கள் பெயரைச் சுட்டிக்காட்டி இன்னார் இறந்துவிட்டாரெனச் செப்புவார்கள். வயோதிகரும் வாலிபரும் உங்களையெண்ணி ஒப்பாரி வைப்பார்கள். மண்ணறையினுள் வைத்து உங்கள்பேரில் மண்ணைத்தள்ளப்படும்; அப்பொழுது நற்பாக்கியம் உள்ளவர்களாயிருப்பீர்களாயின் பாவத்தைப் பொறுக்கும்படியான எஜமானின் கார்மானத்திலாய்விடுவீர்கள். துர்ப்பாக்கியமுள்ளவர்களாயிருப்பீர்களாயின் கொடூரமான வேதனை செய்யும் மலக்குகளிடம் நீங்கள் ஒப்புவிக்கப்படுவீர்கள். என்னே உங்களின் பரிதாபகரமான நிலைமை! என்னே உங்களின் கேவலமான அந்தஸ்து! இன்றே நல்ல அமல்களைச்செய்ய விரைந்தெழுங்கள். உங்களின் பாவங்களை மன்னிக்குமாறு இரக்ஷகனை நோக்கிக் கண்ணீர் ததும்ப அழுங்கள். இரக்ஷகனாகிய இறைவன் பாவங்களைப் பொறுக்கச் சித்தமாயிருக்கின்றான். இனி பாவம் செய்வதில்லையென்ற உறுதியுடன் உண்மையாகக்கேட்ட

மாத்திரத்தில் அவன் நமது பிழைகளைப் பொறுத்திடுவான் இறைவன் நம்மனைவருக்கும் தவ்பாச்செய்யும் பாக்கியத்தை அளிப்பானாக.

"அபூஹுரைரா (ரலி) அவர்கள் சொன்னதாவது:—"அந்நாளில் (இறுதிநாளில்) பூமி தன்னுடைய சங்கதிகளைச் சொல்லும்" என்ற ஆயத்தை நபிகள்பெருமான் (சல்) அவர்கள் ஓதினார்கள். அதின் சங்கதி யாதென்பதை அறிவீர்களா? எனவும் வினவினார்கள். அல்லா(ஹ)வும் அவனின் ரசூலும் நன்கறிவார்களென தோழர்கள் பதிலுரைத்தார்கள். நிச்சயமாய் அதன் சங்கதியாவது தன்மீது (வசித்த) ஒவ்வொரு அடிமையும் அடியாளும் இன்னின்ன நாளில் இவ்விதம் செய்தார்கள், இவ்விதம் செய்தார்கள் எனச் சாக்ஷி பகருவதே, என்று கூறியருளினார்கள்." (திர்மதீ)

"அக்கிரமக்காரர்கள் (இறுதிநாளில்) அவர்களின் (துர்கிரியைகளான) சம்பாத்தியத்தைக்கருதி (தண்டனையை) அச்சமுறுவார்கள். அது (தண்டனை) அவர்களுக்கு வந்துவிடும். ஈமான்கொண்டு நல்ல அமல்களைச் செய்தவர்கள் சுவனத்தின் பூங்காவனங்களுள் இருப்பார்கள். அவர்களின் இரக்ஷகனிடத்தில் அவர்கள் விரும்புவது உண்டாயிருக்கிறது. அதுவே (அவர்களுக்கு) பெரும் அருளாகும்" (அல்—குர்ஆன், 42 : 22.)

———

# ஜமாதில் அவ்வல் மாதம்,

# முதலாம் குத்பா.

தனித்தவனும், அடக்கியரசாள்பவனும், தயாளமுள்ளவனும், பொறுமையுடையவனும், நமது ஹிருதயங்களிலுள்ளதையும் இரகசியங்களில் மறைந்ததையும் அறிபவனும், உலகிலுள்ளவர்களைத் தனது ஆழ்ந்த யோசனையினால் படைத்து இரட்சிப்பவனுமாகிய அல்லா(ஹ்)வையே இரவு பகல் எக்காலத்திலும் புகழுகின்றேன். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத்தவிர வேறு நாயனில்லை; அவன் தனித்தவன், இணையற்றவன் எனவும், நிச்சயமாய் நமது நாயகம் முஹம்மது ( ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ) ஆண்டவனின் அடிமையும் அவனால் தேர்ந்தெடுக்கப்பெற்ற பரிசுத்தமான திருத்தூதரெனவும் சாக்ஷியம் கூறுகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும் அவர்களின் கிளைஞர் தோழர்களின் மீதும் சதா கருணையும் சாந்தியும் அருள்புரிவானாக!

சகோதரர்களே! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளும்படி நற்போதனை செய்கிறேன். நிச்சயமாய் அல்லா(ஹ்)வை பயப்படுவது மூமின்க(விசுவாசிக)ளின் நன்னடத்தையும் முத்தகீன்க(பத்தர்க)ளின் வழக்கமுமாகும்.

மானிடனே! எதுவரை பயப்படாமல் பாவங்களைச் சுமந்துகொண்டிருப்பாய்? ஆண்டவனது அச்சம்தோன்றாது திரையிடப்பட்டவனாக எதுவரை உன் எஜமானனுக்கு மாறு செய்துகொண்டிருப்பாய்? நரக வேதனையை பயப்படாமல் எதுவரை பாவங்களை பஹிரங்கமாய்ச் செய்வாய்? நீ முடிவில்லாது நீண்டகாலம் இவ்வுலகில் ஜீவித்திருக்கலாமென்ற வீணெண்ணத்தில் மருண்டுகிடக்கின்றாயோ? உனது மனைவி மக்களும் சொத்துச்சுகங்களும் உன்னைவிட்டு நீங்காத பாக்கியங்களென்று மனப்பால் குடிக்கின்றாயோ? நீ இரகசியமாகச்செய்யும் பாதகங்களைக்குறித்து உன்னைக்கேட்பார் ஒருவருமில்லையென்று மமதைகொண்டிருக்கின்றாயோ? உன்னைப்பார்க்கிலும் நீண்ட ஆயுளைப்பெற்று, நூற்றுக்கணக்கான வருடம் ஜீவித்திருந்த முற்காலத்தின் மானிடர் எண்ணிறந்தோர் மாண்டேபோயினர் என்னும் உண்மை உனக்குத் தோன்றவில்லையா? மண்டலேஸ்வரர்களாயினும் மகுடாதிபதிகளாயினும், மரணத்தின் வசப்பட்டு மண்ணைக்கவ்வும் கதிக்கே ஆளாயினர் என்னும் செய்தியை நீ கேள்விப்படவில்லையா? உனது வாழ்நாளிலேயே உன்னுடைய உற்றார் உறவினரில் பலரும், நீ உனது உயிரேபோல் நேசித்திருந்தோரில் பலரும், நீ பதைத்துத் துடித்துப் பரிதபிக்கும்படி உன்னைவிட்டுப் பறிக்கப்பட்டுப்போன பயங்கரசம்பவங்கள் உனக்கு உணர்ச்சியுண்டாக்கவில்லையா? உனது கண்காண இவ்வுலகில் அகங்காரம் மிகுத்து, அநியாயமும் அக்கிரமமும் செய்த அநேகர் அல்லலுக்காளாகி, அவமானமும் அலைக்கழிவும் அடைந்து, அழிந்தொழிந்த நிகழ்ச்சிகள் உனக்கு அச்சத்தைத் தரவில்லையா? அப்படிப்பட்ட கதி

உனக்கு நேர்வது அசாத்தியம் என்று அகமகிழ்ந்திருக்கின்றாயோ? அந்தோ! மதியீனம்! மதியீனம்!! ஏகத்துவமுடையவனும் அடக்கியரசாள வல்லமை பொருந்தியவனுமான அல்லா(ஹ்)வினின்று நீ வெட்கப்படவேண்டாமா? மிகுந்த கண்ணீர்சொரிந்து துக்கித்து உன் பிற்காலகதியை நினைந்து நீ அழவேண்டாமா? இறுதிநாளை நோக்கி (ஆகிரத்தளவில்) பயணமாகும்படி கூப்பிடுபவர் கூப்பிடுமுன் ஜாக்கிரதையாயிருந்துகொள்ள வேண்டாமா? வீண்வார்த்தைகளைவிட்டு ஆண்டவனிடத்தில் பாவம் பொறுக்கத்தேட வேண்டாமா? நல்ல வேலைகளைச் செய்துகொள்வாயாயின் அழகான கூலியாகக் கூலிபெறுவாய். வம்பர்களையடக்கும் சக்திவாய்ந்த அல்லா(ஹ்)வின் திருசந்நிதானத்தில் உனது செய்கை, அணுப்பிரமாணமாயினும் மலைப்பிரமாணமாயினும், அதன் கணக்குக் கொடுக்கவேண்டுமென்பதை மறந்து விடலாகாது. உன் சரீரத்தைவிட்டு உனது உயிர் நீக்கப் பட்டுப்போம்; உன் சொந்தக்காரர் உன் பிணத்தின்மீது வீழ்ந்து அழநேரிடும்; உன்னுடைய மண்ணறை (கபர்) உன்னை வழிபார்த்ததாகத் திறக்கப்பட்டிருக்கிறது; அதை விட்டுத் தப்பியோட நீ சக்திபெறமாட்டாய். உன்னுடைய இரக்ஷகனைப்பற்றியும், சகல நற்குணங்களைக்கொண்டும் சிறப்பிக்கப்பட்ட உன்னுடைய நபிபெருமான் (ஸல்) அவர்களைப்பற்றியும் கேள்வி கேட்க கப்ரில் இரண்டு மலக்குகள் (தேவதூதர்கள்) உன்னிடம் வருவார்கள். அக்காலத்து, நீ நற்பாக்கியமுள்ளவனாயிருப்பாயாயின் உனது மேலான எண்ணங்களை (அதாவது நித்தியவாழ்வை) அடைவாய். துர்ப்பாக்கியம் உள்ளவனாயிருப்பாயாயின் வல்லமை

பொருந்திய ஆண்டவனது நாட்டத்திற்குட்பட்டு கெட்ட நிலைமையை அடைவாய். அதாவது சுவன வாழ்வைப்பெறுவாய்; அல்லது நரகவாழ்வைபடைவாய். நபிகள் பெருமான் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) திருவாய்மலர்ந்தருளியதாக அனஸ்(ரலி) கூறியதாவது :—(உலகில் வழங்கக்கூடிய) உங்களுடைய இந்த நெருப்பாகிறது ஜஹன்னமென்னும் நரகத்தின் நெருப்பிலிருந்து எழுபது பாகம் செய்து ஒரு பாகமாகும். இரண்டுதடவை தண்ணீரால் அணைக்கப்பட்டிராவிட்டால் இந்த நெருப்பினால் நீங்கள் பிரயோஜனம் பெறமுடியாது. (ஹதீஸ்)

"ஏ! நன்னம்பிக்கைகொண்டவர்காள்! அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளுங்கள்! மேலும் ஒவ்வொரு ஆன்மாவும் இறுதிநாளைக்காக எதை முற்படுத்தி வைத்திருக்கிறதென்பதை நோட்டமிட்டு அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளக்கடவது! நிச்சயமாய் அல்லா(ஹ்)வாகிறவன் நீங்கள் செய்து வரும் ஒவ்வொரு காரியத்தையும் ஆழ்ந்து அறிபவன்."

(அல்—குர்ஆன், 59 : 18.)

# ஜமாதில் அவ்வல் மாதம்,

# இரண்டாம் குத்பா.

பார்வைக்குத் தோற்றுநின்று தனது தத்துவத்தால் மறைந்திருப்பவனும், வழுவழுப்பான கல்லின்மீது கறுமை நிறங்கொண்ட சிற்றெறும்பு ஊர்வதின் சப்த உணர்ச்சியையும், ஆழிய கடலில்வாழும் மச்சங்களின் துதிகளையும் கேட்பவனும், பாவிகளின்மீது திரைகளைவிட்டு மறைத்து, சீக்கிரம் தண்டிக்காமல் பொறுப்பவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன், இணை துணையற்றவன் எனவும், நபிகள்பிரான் (ஸல்) அல்லா(ஹ்)வின் அடிமையும் அவனின் திருத்தூதரும் ஆவரெனவும் நிச்சயமாய் சாக்ஷியம் கூறுகிறேன். அல்லா (ஹ்) அன்னவர்களின்மீதும் அன்னாரின் கிளைஞராதி தோழர்களின்மீதும் சதா கருணையும், அளவிறந்த சாந்தியும் அருள்புரிவானாக!

சகோதரர்காள்! உங்களுக்கும் எனக்கும் அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளும்படி முதலாவதாக நல்லுபதேசம் செய்கிறேன். என்னே உங்களுடைய கவனக்குறைவும் மிரட்சியும்! என்னே உங்களுடைய கண்மூடித்தனமும் உறுதியடையாதிருத்தலும்! நரகவேதனையை எடுத்துக்

காட்டி பயமுறுத்தும் அல்லா(ஹ்)வின் தூதர் உங்களிடம் வரவில்லையா? நல்லோர் தீயோர்களுக்காக ஆண்டவன் தயார்செய்திருக்கும் பாக்கியங்களையும் வேதனைகளையும் அறிவிக்கும் வேதம் உங்களுக்கு அளிக்கப்படவில்லையா?

அல்லா(ஹ்)வின்மீது சத்தியமாக, நீங்கள் நன்மையை எடுத்தோதவும், தீமையை விலக்கவும் ஆண்டவன் விலக்கிய பாவங்களைவிட்டு விலகிக்கொள்ளவுமில்லையானால், கஷ்டமானகாலத்தில் இரக்கமற்ற அரசனை உங்கள்மீது அல்லா(ஹ்) சாட்டுவான். நிச்சயமாய்ப் புறம் பேசுவதும் கோள் சொல்வதும் பெரும் பாவங்களென நீங்கள் அறியவில்லையா? நிச்சயமாய் தாய்தந்தைகளைக் கஷ்டப்படுத்துவது ஆயுளைக் குறைக்குமென்பதை நீங்கள் உணரவில்லையா? நிச்சயமாய் மதுபானம் செய்வது அல்லா(ஹ்)வைக் கோபமூட்டுமென்பதை நீங்கள் தெரிந்துகொள்ளவில்லையா? நிச்சயமாய் ஜினா செய்வது வறுமையை வருத்துமென நீங்கள் கேள்விப்படவில்லையா? நிச்சயமாய்ப் பாவங்கள் மனிதரை நரகத்திற்குக் கொண்டு சேர்க்குமென்பதை அறியாதார் யாவர்? இவ்வுண்மைகளை நீங்கள் அறிந்தேயிருக்கிறீர்கள்; பலமுறை கேள்விப்பட்டேயிருக்கிறீர்கள். ஆயினுமென்ன? உங்களுக்குக் கண்ணிருந்தும் நீங்கள் பார்ப்பதில்லை; காதிருந்தும் கேட்பதில்லை! மனமிருந்தும் சிந்திப்பதில்லை! அந்தோ! உங்களுடைய மறுமையை (ஆகிறத்தை)ப்பற்றி ஒரு வினாடியேனும் சிந்திக்காது, குருடராகவும் செவிடராகவும் நடைப்பிணங்களாகவும் உங்களுடைய அருமையான காலத்தை அவலமாகக் கழிக்கிறீர்கள்! நீங்கள் அறிவீர்களாக! நிச்சயமாய் உங்கள் நபிபிரான்(ஸல்)ஒரு சமயம் அளவுகடந்து அழுதார்கள்.

அப்பொழுது ஹுதைப - துப்னுல் - யமான், "நன்னபியே எதை நினைந்து அழுகின்றீர்கள்?" என வினவினர். அப்போது நபிகள்நாயகம்(ஸல்)திருவுளமானார்கள். "எவ்விதம் யான் அழாதிருக்கமுடியும்? இஸ்லாத்தின் நற்செய்கைகள் இழக்கப்படும் காலம் என்னுடைய உம்மத்துகளின்மீது சமீபத்தில் வரப்போகிறது; அவ்வேளையில் அவர்கள்தொழுகையை விட்டுவிடுவார்கள்; ஏழைவரி(ஜகாத்)கொடுக்க மாட்டார்கள்; அளவு நிறையைக் குறைப்பார்கள். மேலும் அரசனும் அக்கிரமம் செய்வான்; ஜனங்களுக்கு நஷ்டம் வருத்தத்தக்க தகாத தீர்ப்புச் செய்வார்கள்; பொய்ச் சாக்ஷிபம் சொல்லுவார்கள்; மதுபானம் செய்வார்கள்; ஜினைவை அதிகமாக்குவார்கள்; வட்டி வாங்குவார்கள்; இராகம் கேட்பதைப் பிரியப்படுவார்கள்; நம்பிக்கைத்துரோகம் அதிகமாகும்; வம்சத்தின்மீது பெருமை பேசுவார்கள்; தொழும் ஸ்தலங்களில் சப்தங்களும் வழக்குகளும் அதிகமாகும்; தொழுகிறவர்கள் மிகவும் குறைந்து விடுவார்கள், சிறியோர்கள் பெரியோர்களுக்கு மரியாதைசெய்யார்கள்; பெரியோர்கள் சிறியோர்களின்மீது கருணை காட்டார்கள்; பொய்யே அவர்களுடைய வார்த்தையாகும்; கோள் சொல்வதும் புறம்பேசுவதும் அவர்களுடைய உணவாகும்; மெய்யான விஷயத்தை காண்கில் அருவருப்பார்கள்; பொய்யான விஷயத்தை காண்கில் அகங்களித்துப் பின்செல்வார்கள்." சகோதரர்களே! இவ்வித அடையாளங்களை இக்காலத்தில் நீங்கள் காண்கிறீர்களன்றோ? எம்பெருமானின் தீர்க்கதரிசனம் இக்காலத்தவர்பால் நிறைவேறியதாகக் காணப்படுகிறது. உங்களை நினைத்து அழுத எம்பெருமான் அவர்கள்மீது நீங்கள் அன்புவைத்தி

ருப்பது உண்மையானால், இனியாயினும் பாவங்களைச் செய்யாதொழித்து, முன்செய்த பிழைகளை மன்னித்தருளுமாறு, கனிவிரக்கங்கொண்டு கண்ணீருகுத்து இறைவன் சமுகத்தில் பிரார்த்திப்பீர்களாக.

நபிகள் பெருமான் (ஆண்டவன் கருணையும் சாந்தியும் அவர்களின் மீதுண்டாவதாக) திருவாய் மலர்ந்தருளியதாக அபூமூஸல்-அஷ்அரீ(ரலி) கூறினார்கள்:— "நிச்சயமாய் அல்லாஹுதஆலா பகலில் பாவம் செய்தவர்களின் பாவங்களைப் பொறுப்பதற்காக இரவில் தனது கருணைக் காத்தை நீட்டுகிறான். இரவில் பாவம் செய்தவர்களின் பாவங்களைப் பொறுப்பதற்காக பகலில் தனது கருணைக் கரத்தை விரிக்கின்றான், சூரியன் மேற்குத்திசையில் உதயமாகுமளவும், அதாவதுயுகமுடியுமளவும்" (ஹதீஸ்) மேலும் நபிகள்நாயகம் (ஸல்) நிச்சயமாய் திருவுளமானார்கள்:- கள் குடிப்பவனையும், அதைவடிப்பவனையும், விற்பவனையும், சுமப்பவனையும், அல்லாஹுதஆலா தனது கருணையைவிட்டும் தூரப்படுத்துகின்றான். (ஹதீஸ்)

"உங்களது இந்த நாளை (இறுதிநாளை) நீங்கள் சந்திப்பதை மறந்ததுபோல் நாம் இன்று உங்களை மறந்துவிட்டோம் என சொல்லப்படும். மேலும் உங்கள் இருப்பிடம் நரகமாகும். மேலும் உங்களுக்கு உதவி புரிவாருமில்லை. இன்னிலைமைநேர்ந்தது நீங்கள் அல்லா(ஹ்)வின் திருவஷ்டாந்தரங்களைப் பரிகாசமாக ஆக்கிக்கொண்ட காரணத்தினாலாகும். மேலும் உங்களை இவ்வுலகம் மிரட்டிவிட்டது. ஆனதுபற்றியே இன்று அந்நரகத்தைவிட்டு அவர்கள் வெளியாக்கப்பட மாட்டார்கள். மேலும் ஆண்டவனை பொருத்தமாக்க தேடப்படவுமாட்டார்கள்." (அல்—குர்ஆன், 45, 34 : 35.)

## ஜமாதில் அவ்வல் மாதம்,

# மூன்றும் குத்பா.

எங்கும் வியாபித்து யாவராலும் வணங்கப்படுபவனும், தான் தனியாய், தேவையற்றிருப்பவனும், அன்பும் அருளும் நிறைந்தவனும், தாய் தந்தை புத்திரசம்பத்தில்லாதவனும், சர்வ அரசர்களுக்கரசனானவனுமாகிய, அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத்தவிர வேறு ஆண்டவனில்லை. அவன் தனித்தவன், இணைதுணையற்றவன் எனவும், எமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் அடிமையும் அவனது உண்மைத் திருத்தூதரும் சர்வாதிஜனங்களுக்கும் தலைவரும் ஆவரெனவும் நிச்சயமாய் சாக்ஷியம் கூறுகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்கள்மீதும் அன்னாரின் கிளைஞராதி தோழர்களின்மீதும் சதா கருணையும், அளவிறந்த சாந்தியும் சொரிவானாக!

எனதன்பார்ந்த சகோதரர்காள்! உங்களுக்கும் எனக்கும் அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளும்படி முதலாவதாக நல்லுபதேசஞ்செய்கிறேன். அல்லா(ஹ்)வை பயப்படுதல முக்திக்கும், உன்னத ஸ்தானத்தை அடைவதற்கும் மூலகாரணமாகுமென்பதை நீங்கள் உணரவேண்டும். நண்பர்காள்!

தேவதூதர்(மலக்கு)களால் நாம் செய்த ஒவ்வொரு செய்கையும் பத்திரங்களில் எழுதப்பட்டிருக்கின்றது. நமது வயதில் பெரும்பாகம் வீணுகக்கழிந்துவிட்டது. விசால மான இப்பூவுலகைவிட்டு நெருக்கமான மண்ணறை (கபர்) யின்பால் சேரும் காலம் நெருங்கிவிட்டது. சென்றுபோன காலம் உங்களிடம் மீண்டுவருமென நினைக்கின்றீர்களோ? அல்லது நாம் இறைவனைத் திரும்பசச்சந்திக்க நேரிடாதென உங்கள் பேதபுத்தியால் எண்ணுகின்றீர்களோ? இல்லை, இல்லை; அல்லா(ஹ்)வின்மீது சத்தியமாக உண்மையாக நீங் கள் இறந்துவிடுவீர்கள். தொழுகையில் நீங்கள் செய்யும் ஒவ்வொரு ருகூஉ, ஸுஜூது, நிலைமுதலியவைகளைப்பற்றிக் கேள்வி கேட்கப்படுவீர்கள். நீங்கள் நடக்கும்பொழுது எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடிக்கும் சாக்ஷியுண்டாயிருக் கிறது. அல்லா(ஹ்)வின்மீது சத்தியமாக நீங்கள் ஜஹன்ன மென்னும் நரகத்தின் குறுக்கே போடப்பட்டிருக்கும் சிறுத்துல்முஸ்தகீம் என்னும் பாலத்தின்மீது நடந்து செல்ல நேரிடும்.

அப்பாலத்தின் நிகளமாகிறது, ஏற்றம் ஆயிரவருஷம், இறக்கம் ஆயிரவருஷம், சமம் ஆயிரவருஷம் நடந்து செல்லவேண்டிய நெடுந்தூரமுள்ளதாயிருக்கும். அதன் மீதுண்டான தேவதூதர்கள் (மலக்குகள்) உரத்த தொனி யோடு "நன்மையைச் சுமந்துகொண்டுவருபவன் இப்பாலத் தைக்கடந்துசெல்வான்; தீமையைச்சுமந்துவருபவன் கொ ழுந்துவிட்டெரியும் நரகத்தில்விழுவான்'' என சப்தமிடுவார் கள். ஆதலால் இவ்வுலகின்காட்சிகளைக்கண்டு நீங்கள் மிரள வேண்டாம். இவ்வுலகமானது பரலோகத்தின் வாழ்விற்கு

சாகுபடிசெய்யும் நிலமென்பதைத் திண்மையாய் அறிய வேண்டும். இவ்வுலகம் உங்களைப்போல் இலக்ஷக்கணக்கான எத்தனையோ வாலிபர்களையும் வயோதிகர்களையும் விழுங்கிவிட்டது. நீண்டகாலம் இருப்போமென நினைத்து அல்லா(ஹ்)வை மறந்தோரின் கதி யாதாயிற்று?

பொருளைச் சேகரித்து எவ்வழியிலும் உபயோகிக்காமலும் பிறருக்குக் கொடாமலும் கட்டிப் புதைத்து பைசாசுகளைப்போல் காத்தோரின் கதி எவ்வாறு முடிந்தது? உங்கள்மீது இரவு பகலாய் இரக்கங்காட்டி வளர்த்துவந்த தாதை மூதாதைகளின் கதி என்னவாயிற்று? உங்களுக்கு உபந்நியாஸம்செய்த மார்க்கப்போதகாசிரியர் எவ்வாறாயினர்கள்? உலகத்தையாள நினைத்த அரசர் ஆசை நிராசையாய் முடிந்ததன்றோ? உங்களில் சிலர் ஓய்வு ஒழிவின்றிக் கஷ்டப்பட்டுப் பணத்தைச் சம்பாதித்து, தாம் அநுபவிக்காமலும் சற்பாத்திரங்களில் செலவிடாமலும் பிற்காலத்திற்கு வேண்டுமென்று சேர்த்துவைக்கிறீர்கள். அப்படிச் செய்தவர்களில் எத்தனையோ மனிதர் திடீரென்று மரணத்திற்காளாகி ஏமாற்றமடைந்ததை நீங்கள் பார்க்கவில்லையா? உங்களில் சிலர் தமது சம்பாத்தியத்தை அநாவசியமான கேளிக்கைகளிலும் ஹராமான வழிகளிலும் செலவிடுவதன்றி, நன்மையான காரியங்களைப்பற்றி முற்றிலும் அசட்டையாயிருந்துவருவது முட்டாள்தனமல்லவா? பாக்கியத்தை அளித்த இறைவனுக்கு நன்றிசெலுத்தி, அப்பாக்கியத்தைச் சன்மார்க்கத்தில் உபயோகிக்காதிருத்தல் மதியீனமல்லவா? சகோதரர்களே! நீங்கள் பகுத்தறிவில்லாத விலங்குகளல்ல; ஆண்டவன் உங்களுக்கு அறிவைக்

கொடுத்திருக்கிறானன்றோ? அவ்வறிவைக்கொண்டு உங்கள் நிலையைச் சிந்தித்துப்பாருங்கள்.

இவ்வுலகின் அநித்திய வாழ்வை நம்பி வசித்த வம்பர்களான ஆது, தமூது, ஹாமான், நம்றூது முதலியவர்கள் எங்கிருக்கின்றார்கள்? அந்தோ! யாவரும் உயிர் துறந்தார்கள். அவர்களின் சரீரம் மண்ணுக்கிரையாய் அழிந்துவிட்டது. ஆனதால் பரலோகமே (ஆகிறமே) நித்தியமான குடியிருப்பாகும். அதற்காகவே நாம் பாடுபடவேண்டும். நபிகள்நாயகம் திருவாய்மலர்ந்தருளினார்கள்:—ஒரு முஸ்லிமானவனைவிட்டு அவனது கஷ்டத்தை யாதொருவன் நிவர்த்தி செய்வானானால் இறுதிநாளையில் பாலத்தின்மீது இரண்டு பிரகாசங்களை அல்லாஹுதஆலா அவனுக்கு நன்கொடையளிப்பான். அவ்விரு பிரகாசத்தினால், ஒரு உலகம் பிரயோஜனமடையும்; அவ்வுலகத்தின் (கணக்கை) அல்லா(ஹ்)வைத் தவிர யாரும் மதிக்கமுடியாது. (ஹதீஸ்.)

"நிச்சயமாய் ஆண்டவன் கேள்வி கணக்கு கேட்பானென்பதை அவர்கள் பயந்தவர்களாயிருக்கவில்லை. மேலும், நமது வாக்கியங்களைப் பொய்யாக்கிவைத்தார்கள். வஸ்துக்களனைத்தையும் நாம் லவ்ஹுல் மஹ்பூலில் மட்டுப்படுத்தியிருக்கின்றோம்." (79 : 27—29)

---

# ஜுமாதில் அவ்வல் மாதம்,

# நான்காம் குத்பா.

எக்காலத்திலும் அழிவின்றித் தனித்திருப்பவனும், பார்வைகளுக்குள்ளடங்காதவனும், பாபம் செய்தவர்களை உடனுக்குடன் தண்டிக்காத ஆற்றலுடையவனும், ஹிருதயங்களில் ஊசாடுபவைகளையும், இரகசியங்களில் மறைந்தவைகளையும் அறிபவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை. அவன் தனித்தவன், இணை துணையில்லான், எனவும், நபிகள்பிரான் (ஸல்) அல்லா(ஹ்)வினது அடிமையும், தீர்க்கதரிசியும் அவனின் திருத்தூதரும் ஆவரெனவும், நிச்சயமாய் சாக்ஷியம் கூறுகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்கள்மீதும், அன்னாரின் கிளைஞராதி தோழர்களின் மீதும் சதா கருணையும் அளவிறந்த சாந்தியும் சொரிந்தருள் புரிவானாக!

சகோதரர்காள்! உங்களுக்கும் எனக்கும் அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளும்படி நல்லுபதேசம் செய்கிறேன். நாளுக்குநாள் வயதுகள் குறைந்துகொண்டே போகின்றன. மரணகாலம் சமீபமாகிவிட்டதை நினைத்து பரலோகத்தளவில் பிரயாணமாகத் தயாராயிருந்து கொள்ளுங்கள்.

யாதொரு பொருளும் உங்களுடன் உண்டாயிராத ஞாயத் தீர்ப்பு நாளில், வம்பர்களைபடக்கி அரசாள்பவனும், நிகரற்றிருப்பவனுமாகிய அல்லா(ஹ்)வின் சந்நிதானத்தில் கணக்குக் கொடுப்பதற்காக நீங்கள் நிற்கும்படி சம்பவிக்கும் இவ்வுலகின்கண் செய்யத்தவறின தவங்களைக் குறிப்பிட்டு உங்கள்மீது குற்றம்ஸ்தாபிக்கும்பொழுது பரிதாபப்படுவீர்கள். அங்ஙனம் நேராதிருக்கும்பொருட்டு அவ்வுலகத்திற்குப் பிரயாணமாகுமுன் நல்லஅமல்களைப்புரிந்து தயாராயிருந்துகொள்ளுங்கள். பெரும் பாவங்களைவிட்டுத் தவிர்த்துகொள்ளுங்கள்; ஏனெனில் அவைகள் பாவங்களில் மிகக்கொடியவைகளாகும். உங்களின் வயதுகளில் எஞ்சியிருப்பவைகளை கவனமாய்ப் பாதுகாத்துக்கொள்ளுங்கள். உங்களுக்குக் கொடுக்கப்பட்ட அவகாசம் மிகவும்சொற்பமானதே. ஆகையால் இவ்வுலகில் நீண்ட நாளிருப்போமென இறுமாப்புக் கொண்டுவிடாதீர்கள். உங்களுக்கு முன்சென்றவர்களை கவனித்து உறுதிகொள்ளுங்கள்; ஏனெனின் சென்றவர்களை கவனித்து உறுதிபெறுவதே ஸ்திரமான உறுதியாகும். நாகரீகமான காலத்தையனுசரித்து ஒருவன் செய்த தீய செயல்கள் அவனை நரகத்தளவில்கொண்டு சேர்க்கும்; அவனது துர்ப்பாக்கியத்திற்கு யாது சொல்வேன்! பாவங்களைச் செய்ய நினைத்துத் துணிவுபெற்றவனது துரதிருஷ்டத்தை என்னென்றுரைப்பேன்! பாவங்களை விட்டகலும்படி நற்போதனையால் பயமுறுத்தியும் அவற்றின்மீது நியமமாயிருந்தவன் படும் வேதனையை எங்ஙனம் கூறுவேன்! ஓ! ஏமாற்றமடைந்தவனே! எந்த வீட்டை ஆசைவைத்து சந்தோஷமாயிருக்கின்றாய்?

அழிவடையக்கூடிய வஸ்துக்கள் உன்னை வளைந்து சுற்றிக்கொண்டிருக்கின்றன. ஓ! சிந்தனையற்றவனே! ஒருவனுக்கும் பயாமல் வன்னெஞ்சனயிருப்பதைவிட்டு பயந்துகொள்; ஏனெனில் வன்னெஞ்சனை நிச்சயமாய் நரகத்திலிட்டு அல்லாஹுதஆலா வேதனை செய்வான். ஓ! வாலிபனே! உனது நிலைமையைச் சிந்தித்துப்பார்ப்பாயாக! நீ கிழவனாகும்வரை ஜீவித்திருப்பாய் என்னும் நிச்சயம் உண்டா? பலமும் உற்சாகமும் உன்னில் குடிகொண்டிருக்கும் இச்சமயத்தை வீணாய்க்கழிக்கும் நீ, அதிக நாள் உயிரோடிருப்பினும், விருத்தாப்பியதசையில் எவ்வித நன்மையும் செய்யும் சக்தியில்லாது வருந்தி நஷ்டமடைவாயன்றோ? உனது வாலிபகாலத்தை மெய்யான நித்திய வாழ்வாகிய மறுமையில் உதவத்தக்க நல்வழியில் உபயோகிப்பாயாக! அல்லாஹுத ஆலாவுக்குப் பயந்து ஊழியம் செய்பவனாகவிருந்துகொள்வாயாக பொருளையே பெரிதெனக்கருதவேண்டாம். ஓ! வயது முதிர்ந்தோனே! உனது இளம்பிராயத்தின் நிலைமையையும் தற்கால ஸ்திதியையும் சீர்தூக்கிப்பார்ப்பாயாக! நீண்டகாலம் வாழலாமென்று நீ பாலியனாயிருக்கும்பொழுது எதிர் பார்த்திருக்கக் கூடும். இப்பொழுதுகூட உனக்கு மரணம் சமீபிக்கவில்லையென்று நினைத்துக்கொண்டிருக்கின்றாயோ? மதியீனம்! மதியீனம்!! இனியேனும் உனது மறுமைப்பிரயாணத்திற்கு நீ ஆயத்தமாயிருக்கவேண்டாமா? உன்னால் இயன்ற வழிகள் நற்செய்கைகளை உடனே உவப்புடன் செய்வாயாக! இத்தள்ளாத காலத்திலும் அக்கிரமங்களைப்புரிந்து உன் அழகிய நரைகளை நரகத்திலிட்டுக்கரிக்கவேண்டாம். ஓ! தலைமைவகிப்பவனே!

அதிகாரத்தில் மயங்கி ஆண்டவனை கோபமாக்கும் வேலைகளைச்செய்து அல்லலுக்காளாக வேண்டாம். ஓ! போதுஸ்தாபனங்களில் ஈடுபட்டவனே! மார்க்கமறியாமல் உன் மனம் போனபோக்குப்படி உன்மனத்தில் உதித்தவைகளைச்செய்ய வேண்டாய்; மீறிச்செய்வாயாகில், பார்வைகள் மேல்நோக்கி நிற்கும் (கியாம) நாளில் உன் ஆத்மாவைப் பங்கப்படுத்தி இறுதியாக வேதனைக்குள்ளாவாய்.

நபிகள்நாயகம்(ஸல்)திருவாய் மொழிந்தருளினார்கள்:- கியாம நாளையில், (முதலாவது) அடியான் வயதை எவ்வழியில் செலவு செய்தானெனவும், (இரண்டாவது) அவனது சரீரத்தை எக்காரியத்தில் உபயோகித்தானெனவும், (மூன்றாவது) அவன் என்ன தவறுகளைச்செய்தானெனவும், (நான்காவது) அவன் பொருளை எவ்வழியில் சம்பாதித்து எவ்வழியில் செலவு செய்தானெனவும், இந்நான்கு விஷயங்களைப் பற்றிய கேள்விகளுக்கு மறுமொழி கொடுக்காதவரை அப்புறம் செல்லமுடியாது (ஹதீஸ்).

“அல்லா(ஹ்)வுக்கு மாறு செய்தவர்களை நரகத்தின் மீதெடுத்துக்காட்டப்படும் நாளில் (அவர்களுக்குச்சொல்லப்படும்) உங்களுடைய இன்பங்களை உலகத்திலேயே நீங்கள் போக்கி விட்டீர்கள், மேலும் அவைகளை அங்கே சுகித்துவிட்டீர்கள், பூமியின்மீது அக்கிரமமாய்ப் பெருமையடித்த காரணத்தாலும், ஆண்டவனுக்கு மாறுசெய்த காரணத்தாலும், கேவலமான வேதனையை இன்று கொடுக்கப்படுவீர்கள்”. (அல்-குர்ஆன் 46 : 20.)

---

# ஜமாதில் ஆகிர் மாதம்,

# முதலாம் குத்பா.

வானம் பூமிகளையும், அவைகளிலுண்டான ஜீவஜந்துக்கள், தாவரவர்க்கங்கள் முதலிய யாவற்றையும் சிருஷ்டித்து, அவைகளுக்கேற்றவாறு உணவளிப்பவனும், பறவைகள் தங்கள் கூண்டுகளிலிருந்து அவனின் தூய்மையைப்பற்றி தோத்திரம் செய்வதற்கிலக்கானவனும், ஆகாயங்களில் மலக்குகள்(தேவதூதர்கள்) துதிக்கும் புகழுரைக்குத் தகுதியுடையவனும், எவ்வகையான செலவைக்கொண்டும் குறையாப் பொக்கிஷத்தை யுடையவனும், அவனைப் புகழுபவனுக்கு மாறாத விருத்தியையும், நன்கொடையையும் அளிப்பவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன், இணை துணையற்றவன் எனவும், நபிகள்பிரான் (ஸல்) அல்லா(ஹ்)வினது அடிமையும் தீர்க்கதரிசியும் அவனின் திருத்தூதருமாவரெனவும் நிச்சயமாய் சாக்ஷியம் கூறுகிறேன். அல்லா(ஹ்) அன்னவர் மீதும், அன்னாரின் கிளைஞராதி தோழர்களின்மீதும் சதா கருணையும் அளவிறந்த சாந்தியும் அருள்புரிவானாக!

மானிடர்காள்! உங்களுக்கும் எனக்கும் அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளும்படி நல்லுபதேசஞ் செய்கின்றேன்.

ஏனெனில் இவ்வகன்ற உலகங்களைப் படைத்தவனும் அதிபதியுமாகிய அல்லா(ஹ்)வை பயப்படுவது, அவனது அன்பையுண்டுபண்ணும். சகோதரர்களே! சர்வ பாவங்களுள் முக்கியமாய் விவாஹம் செய்த மனைவிகளை தலாகு (விவாஹப்பிரிவினை) சொல்லிவிடுவதாய் பிரமாணம் செய்வதைவிட்டும் உங்களை விலக்குகின்றேன். மேலும் நியாயமான சத்தியங்களை நிறைவேற்றாமலிருப்பதை முன்னிட்டும் உங்களுக்கு எச்சரிக்கை செய்கின்றேன். ஏனெனில் அப்பிரமாணத்தை நிறைவேற்றாமலிருப்பது உணவுகளைக்குறைத்து விடும்; நாயகத்திருமொழிகளை அறிவிப்பவரும், வியாக்யானியுமான இமாம் மாலிக் (ரஹி) அவர்கள், தலாகை (விவாஹப் பிரிவினையைப்)பற்றியாவது அடிமையை விடுவித்தலைப்பற்றியாவது சத்தியஞ் செய்பவனை கண்டித்திருக்கிறார்கள். ஏனெனில் இவ்விருவஸ்துக்களைக்கொண்டு பிரமாணஞ்செய்வது நபிபெருமானவர்களின் காலத்திலில்லாத புதிய வழக்கமாயிருப்பதோடுங் கூட அவ்விரண்டும் பாவச் செயலுள்ளோரின் குணங்களாகும். சத்தியஞ்செய்வது ஆண்டவன் மீதேயல்லாமல் தகப்பன் பிள்ளைபோலொத்த மற்றவர்களின்மீது செய்வது ஹராமென்னும் மார்க்கவிலக்காயிருக்க, ஆண்டவல்லாதவைகளின்மீது யாதொருவன் சத்தியஞ்செய்வானாகில், செய்யப்பட்டவஸ்துவை அவன் பெருமைப்படுத்தியதாகும். ஆண்டவனையல்லாமல் வஸ்துக்களைப் பெருமைப்படுத்துகிறவன் (நிபாகுடையவர்) நயவஞ்சகக்காரர்களைச்சார்ந்தவனாவான். ஆண்டவன் மீது சத்தியஞ் செய்வதற்கேனும் பரிகாரமுண்டு; ஆனால் தலாகு சொல்லுவேனென்று சத்தியம் செய்வதற்கு மனைவியைவிட்டுப்

பிரிவதைத்தவிர வேறு பரிகாரமில்லை. யாதொருவன் தன் மனைவியிடத்தில் சேருவதில்லையென சத்தியஞ் செய்து, அச்சத்தியத்தை நிறைவேற்றாமல் மறுமுறையும் அம் மனைவியை ஹலாலெனக்கருதி சகவாசம் செய்யத் துணிவானாகில் அவன் காபிராகிவிடுகிறான். மேலும் அவன் பின்வரும் பத்துக் குற்றங்களுக்கும், இலக்காகின்றான். (1-வது) தலாகுச்சத்தியம் கூடாதென இறைவனின் கட்டளையாயிருக்க அக்கட்டளையை மீறியதின்பயனை நிச்சயமாய் தனது இரக்ஷகனுக்கு மாறு செய்தவனாகிறான். (2-வது) குர்ஆன் ஹதீஸுக்கு மாற்றஞ்செய்தவனுமாகிறான்; எவனொருவன் குர்ஆன் ஹதீஸின் கட்டளைகளை மீறி நடப்பானாகில் அவன் ஆகிறத்தில் எவ்வித பாக்கியங்களையும் பெறமுடியாது. (3-வது) அவன் தன்மீதுள்ள பொறுப்பெண்ணும் மார்க்கவிதியை யழித்தவனும், வாக்குறுதியை நிறைவேற்றாதவனுமாகிறான். (4-வது) இமாம்களின் சொற்படி தலாகு சொல்லப்பட்டவள் தன் மனைவியல்லாதிருந்தும் மனைவியெனக் கருதினான். (5-வது) தலாகுச்சொல்லப்பட்டவளோடு கூடிப்பிறந்த குழந்தைகள் தன் குழந்தைகளென நிச்சயிக்கின்றான்; உண்மையில் அக்குழந்தைகள் (ஜினா) விபசாரத்தில் பிறந்தவைகளாகும். (6-வது) தனக்குப் பாத்தியமில்லாத அக்குழந்தைகளை பாத்தியஸ்தராகவும் வாரிஸாகவுமாக்குகிறான். (7-வது) விபசாரத்தில் குழந்தைகளை ஈன்ற காரணத்தினால் இறுதிநாளையில் அக்குழந்தைகளை கஷ்டத்திற்குள்ளாக்குகிறான். அன்றியும் அக்குழந்தைகள் தகப்பனற்றவர்களாகுவதோடு "எங்களின் இரக்ஷகா! எங்களின்பாவங்கள் யாவை?" எனக்கேட்பார்கள். (8-வது)

சத்தியத்தை நிறைவேற்றுமல் மனைவியைவிட்டுப் பிரியாமல் பிடிவாதமாயிருக்கும்வரை அவனது தவமேயடுகளை விட்டு எழுதுகோல் உயர்ந்துவிடும். (அதாவது அவன் செய்யும் தவங்கள் கைகூடாது.) (9-வது) அவனை முனுபிகீன்களுடன் (நரகத்தின்) தாழ்ந்த தட்டில் போடப்படும். (10-வது) நபிபெருமான் (ஸல்) அவர்களின் மன்றுட்டத்தை அவனுக்கு(ஹராமாக)விலக்கப்பட்டதாக ஆக்கப்படும். மேலும் சகிக்கொணுத கஷ்டங்களை அநுபவிக்கநேரிடும். ஆனதால் சகோதரர்களே! நீங்கள் நேர்வழியில் நடப்பவர்களாயிருந்துகொள்ளுங்கள். அப்பொழுது ஆண்டவனது வாக்குறுதியை நிறைவேற்றினவர்களுடனும், அவனது வாக்குத்தத்தத்தை முறிக்காதவர்களுடனும் எழுப்பப்படுவீர்கள்.

பூமியின்கண் (அடிமையை) விடுவிப்பதைக்காண அல்லா(ஹ்)வுக்கு அதிகப்பிரியமான யாதொரு வஸ்துவையும் அல்லா(ஹ்)படைக்கவில்லை. மேலும் பூமியின்கண்(சரியான நியாயமின்றி) தலாகு சொல்லுவதைக்காண ஆண்டவனிடத்தில் அதிக கோபமுள்ளதாய் யாதொரு வஸ்துவையும் ஆண்டவன் படைக்கவில்லை. (ஹதீஸ்)

“ஆண்டவனிடத்தில் வாக்குத்தத்தம் செய்தபின்பு அவ்வாக்குறுதிக்கு மாற்றம் செய்பவர்களும், சேர்ந்துநடக்க ஆண்டவனது ஆக்ஞையிருக்க அதை மீறினவர்களும், இவ்வுலகின்கண் அதிக்கிரமம் செய்பவர்களும், இவர்கள்தாம் நஷ்டமடைபவர்கள். அல்லா(ஹ்)வுக்கு எவ்விதம் நீங்கள் மாறுசெய்கின்றீர்கள்! (தாதுவர்க்கம் முதலியவைகளில்) நீங்கள் உயிரில்லாதவர்களாயிருந்தீர்கள்; (தாய்வயிற்றில்)

உங்களுக்கு உயிர்கொடுத்தான். பின்பு (உங்களது ஆயுள் முடியும்பொழுது) உங்களுக்கு மரணத்தைக்கொடுப்பான், மறுதடவை (கப்ரில் கேள்விகணக்கு கேட்பதற்காக) எழுப்புவான், இறுதியில் அவனளவில் மீட்கப்படுவீர்கள்." (அல்—குர்ஆன், 2 : 27, 28.)

---

# ஜமாதில் ஆகிர் மாதம்,

# இரண்டாம் குத்பா.

சர்வ வல்லமைபொருந்திய தனது வல்லபத்தால் மலை கள் இடிந்து தகர்ந்து விடும்படியான அபாரசக்தியையுடை யவனும், தனது பயத்தினால் நெற்றிகள் தனக்கு சாஷ்டாங் கம் செய்யச் செய்யுந்தன்மையுடையவனும், மானிடர்களு டைய நிலைமைகளின் அந்தரங்கங்களையும், அடிமைகள் மறைத்து வைத்திருக்கின்றவைகளின் அரிய நுட்பங்களையும் அறிபவனும், தனக்கு வழிப்பட்டவர்களுக்கும் இஷ்டமா யின் வழிப்படாதவர்களுக்கும் நன்கொடையளிப்பவனு மாகிய அல்லா(ஹ்)வுக்கே முடிவடையாப் புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு நாயனில்லை; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், அவனே வானம் பூமிகளுக்கு அதிபதியானவனெனவும், நமது நாயகம் முகம்மது (ஸல்) அல்லா(ஹ்)வின் அடிமை யும் அவனின் திருத்தூதரும் ஆண்டவனால் படைக்கப் பட்ட எல்லா படைப்புகளிலும் மேன்மை பொருந்தியவர் களும், மானிடர்களுக்குள் சிறப்பிலும், நன்மதிப்பிலும், அதிக உயர்வானவர்களும் ஆவரெனவும் நிச்சயமாய் சாக்ஷி யம் கூறுகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்மீதும், அன்னாரின்

கிளைஞராதி. தோழர்களின்மீதும் சதா கருணையும், அள விறந்த சாந்தியும் அருள்புரிவானாக!

மானிடர்காள்! உங்களுக்கும் எனக்கும் அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளும்படி முதலாவதாக நல்லுபதேசம்செய்கிறேன். ஏனெனில், இவ்வகன்ற உலகங்களைப் படைத்தானுகின்ற அரசனுகிய அல்லா(ஹ்)வை பயப்படுவது அவனது ஆன்மையுண்டுபண்ணும். சகோதரர்காள்! ஆகிறத்திற்காக நீங்கள் பாடுபடுவதைவிட்டும் உறங்குகின்றீர்கள். எப்பொழுதுதான் உங்களுக்கு விழிப்பு ஏற்படுமோ? நீங்கள் சமீபத்தில் உயிரிழந்து பிரேதமாய் விடுவீர்கள். மவுத்தையும் ஹயாத்தையும் உண்டாக்கின ஆண்டவன் மகா தூய்மையுடையவன். ஜனங்கள் பாராதபடி மறைத்து பாபம் செய்பவனே! ஜனங்களின் பார்வை இல்லாவிட்டாலும் அப்பாவங்களை இறைவன் பார்த்துக்கொண்டிருக்கிறான். ஜனங்கள் தங்கள் கபர்களை (மண்ணறைகளை) விட்டு நிர்வாணிகளாகவும், காலுக்கு செருப்பற்றவர்களாகவும், மஹ்ஷர் மைதானத்தில் எழும்பி நிற்கும்பொழுது உன் கதியென்னவாகும்? அந்நாளானது மகத்துவமுள்ள நாளாகும். பாவஞ்செய்தவன் தன்னிருகரங்களால் செய்த பாவங்களைப்பற்றி பரிதாபப்பட்டு தான் அளவுகடந்து செய்த பாவத்தின்மீது எனது பரிதாபமே! மானக்குறைவே! என ஆண்டவன் சமுகத்தில் கூக்குரலிடுவான்.

சகோதரர்களே! அறிந்துகொள்ளுங்கள். எவ்வித நியாயமுமின்றி யாதொருவன் ஒரு ஜும்ஆ தொழுகையைவிட்டு விடுவானுகில், நிச்சயமாய் அவன் அல்லா(ஹ்)வைக் கோபமாக்கிவிட்டவனுவான். யாதொருவன் தன்முஸ்லிமாகிய

சகோதரனின் விஷபமாய் அவனுக்குச் சம்மதமில்லாத வார்த்தைகளைப் பேசுவானுகில் அவனுக்கு வாதி ஆண்டவனைத்தவிர வேறு யாரும் கிடையாது. யாதொருவன் (ஜகாத்தை) ஏழைவரியைக் கொடுக்காமலிருப்பானுகில் ஜஹன்னமென்னும் நரகத்தில் போடப்படுகிற பாலத்தின்மீது அவனை அல்லா(ஹ்) நடக்கவிட மறுத்துவிடுவான். யாதொருவன் விபசாரம் செய்வானுகில் அவனை அல்லா(ஹ்) அசிபமாய் தரித்திரனுக்கிவிடுவான். கள்குடியன், பொய்சாக்ஷி சொல்பவன், தாய்தந்தையர்களின் கோபத்திற்காளாயிருப்பவன், சட்டத்திற்குமீறி அக்கிரமமாய் உயிர்களைக் கொல்பவன், ஆகிய இவர்களின்மீது கியாமநாளையில் அல்லா(ஹ்) கிருபைக்கண்ணுற் பார்க்காமலிருப்பதுமன்றி அன்னவர்களைப் பாவத்தைவிட்டு விடுவிக்கவுமாட்டான், என இவ்விதமே நாயகத் திருமொழிகளைச் சொல்லுகிறவர் சொல்லியுள்ளார்.

"(1-வது) அல்லா(ஹ்)வுக்கு இணைவைக்குதல், (2-வது) சூனியஞ்செய்தல் (3-வது) ஆண்டவனல் ஹராமாக்கப்பட்ட உயிர்களைக்கொல்லுதல்; (4-வது) வட்டிவாங்குதல், (5-வது) அநாதைக்குழந்தைகளின் பொருளை அபகரித்தல், (6-வது) இஸ்லாத்திற்காக போர்புரியுங்கால் புறங்காட்டுதல், (7-வது) பதிவிரதையான மூமினுகிய பெண்களை அவதூறு கூறுதலாகிய பாவங்கள் மிகக்கொடியன; ஒருவனை நாசமாக்கக்கூடிய கொடிய இவ்வேழுபாவங்களைவிட்டும் தவிழ்ந்துகொள்ளுங்கள்'' என நபிபெருமானின் தோழர்களிலொருவர் சொன்னதாக இப்னுஅசாகிர் திருவுளமானுர்கள். (ஹதீஸ்.)

"விபசாரன் விபசாரம் செய்யும்பொழுது மூமினுயிருந்து அதைச்செய்வதில்லை; கள்ளன் களவு செய்யும்

பொழுது மூமினயிருந்து அதைச்செய்வதில்லை; கள்குடிப்பவன் கள்ளைக்குடிக்கும்பொழுது மூமினயிருந்து அதைக் குடிப்பதில்லை; பஹிரங்கமாய் அபகரிப்பவன் ஜனங்கள் பார்த்திருக்க அபகரிக்கும்பொழுது மூமினயிருந்து அபகரிப்பதில்லை; மோசக்காரன் மோசஞ் செய்யும்பொழுது மூமினயிருந்து அதைச்செய்வதில்லை; பயந்துகொள்ளுங்கள்! பயந்துகொள்ளுங்கள்!'' (அதாவது இக்கொடிய பாவங்களைச் செய்யும்பொழுது செய்பவனது ஈமான் அவனைவிட்டு நீங்கியிருக்கும்.) (ஹதீஸ்.)

"இப்பூவுலகில் அவர்கள் (ஜனங்கள்) பிரயாணஞ் செய்து பார்க்கவில்லையா? அவ்விதம் பிரயாணஞ் செய்வார்களாயின் அவர்களுக்கு முன்னுள்ளவர்கள் எவ்வித முடிவையடைந்தார்களென்பதைக் காண்பார்கள். சென்றவர்கள் இவர்களை (இருப்பவர்களை) விட சக்தி யதிகமானவர்களாயிருந்தார்கள்; வானம், பூமிகளில் யாதொரு வஸ்துவும் அல்லா(ஹ்)வினின்றும் விலகியிருக்கவில்லை; நிச்சயமாய் அல்லா(ஹ்) அறிபவனும், சக்தியுள்ளவனுமாயிருக்கிறான். மானிடர்கள் செய்த பாவத்தின் காரணமாய் அல்லா(ஹ்) அவர்களைப் பிடிப்பானகில், இவ்வுலகின்மீது யாதொரு ஜீவஜந்துக்களையும் விட்டுவைக்கமாட்டான். ஆனால் குறிப்பிட்ட தேதிவரை (கியாமநாள்) அவர்களைப் பிற்படுத்துகிறான். அவர்களது முடிவு வருமாகில் (அவர்கள் தப்பமாட்டார்கள்)நிச்சயமாய் அன்னவர்களை அல்லா(ஹ்)பார்த்துக்கொண்டிருக்கிறான்.'' (அல்—குர்ஆன், 35 : 44, 45.)

---

# ஜமாதில் ஆகிர் மாதம்,

# மூன்ரும் குத்பா.

தன் அடிமைகளான சர்வஜனங்களுக்கும் நேர்வழி காட்டும்பொருட்டு நான்குவேதங்களேயளித்து அவ்வேதங்களில் கடைசி வேதத்தை நமக்கு அருளிச்செய்து, அதில் செய்யத்தகுந்தவை தகாதவை இவையிவையெனப்பிரித்துக்கட்டி தன் பிரகாசத்தை ஜொலிக்கச்செய்தவனும், தன்னமைகளான சர்வா மானிடர்களேயும் சிருஷ்டித்து அவர்களே உயர்த்துபவனும், தாழ்த்துபவனும், கொடுப்பவனும், கொடாதுவிடுப்பவனும், பாவிகள் தாங்கள் செய்த பாவங்களேப்பொறுக்கும்படி பிரார்த்தித்தால் அன்னவர்களான தன் அடிமைகளது அப்பாவங்களேப் பொறுத்து இரக்ஷிப்பவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத்தவிர வேறு ஆண்டவனில்லே; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன் எனவும், நபிகள்பிரான் (ஸல்) அல்லா(ஹ்)வினது அடிமையும் தீர்க்கதரிசியும் திருத்தூதருமாவரெனவும், நிச்சயமாய் சாக்ஷியம் கூறுகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்மீதும், அன்னரின் கிளேஞராதி தோழர்களின்மீதும், சதா கருணேயும் அளவிறந்த சாந்தியும் அருள்புரிவாளுக!

சகோதரர்காள்! உங்களுக்கும் எனக்கும் அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளுமாறு நல்லுபதேசஞ் செய்கின்றேன். ஏனெனில் இவ்வகன்ற உலகங்களைப்படைத்தவனும், அதிபதியுமாகிய அல்லா(ஹ்)வை பயப்படுவது அவனது அன்பையுண்டுபண்ணும்.

மானிடனே! பாவங்களை எவ்வளவுதான் செய்து சேகரஞ்செய்துகொண்டே செல்வாய். ஹராமான் முதல்களையும், அக்கிரமமான பொருள்களையுந்தின்று உன்வயிறு இன்னும் நிறம்பவில்லை. அரிய உபந்நியாசங்களை உன்னிரு காதாற் கேட்டிருந்தும், விலகி நடக்கவேண்டியகைளை விட்டும் நீ உன் ஆத்மாவை விலக்கிக்கொள்ளவில்லை. உன்னிருதயம் கல்லைப்பார்க்கிலும் கெட்டியாயும், இரும்பைப்பார்க்கினும், உறுதியாயுமிருக்கிறதெனத் தோன்றுகிறது. இரும்பும் ஒருகால் இளகிவிடும். கல்லும் ஒருபோது கரைந்துருகும். ஆனால் உன்னிருதயமோ கரைவதில்லை துர்கருமங்களைச் செய்வதோடு உலகவாழ்க்கையில் ஈடுபட்டவனே! அளவு கடந்த பாவங்களைச் செய்பவனே! நீ உன் இரக்ஷகனின் வார்த்தைகளுக்குச் செவிதாழ்த்தவில்லையா? இவ்வுலக இச்சையில் சிக்குண்டு பாவஞ்செய்யத் துணிந்தவனே! இறைவனையும், அவனெதிரில் நீ நிற்கவேண்டியதையும் பயந்தழவேண்டிய கண்களை நீ படைத்திருக்கவில்லையா? நியமமாக பரலோகத்தில் சுகம்பெறுவதை இழந்தவனே! ஆண்டவனை பயப்படும் மனம் உனக்குண்டாயிருக்கவில்லையா! இவ்வுலகில் நீ நாடியபடி எவ்விஷயமும் நடைபெறாது. உன் இன்பங்களை அதிசீக்கிரம் மாற்றும்படியான இஸ்ராயீலென்னும் (மலக்கு) எமன் உன்னிடம் வந்து

விடுவார். அச்சமயம் அவரைவிட்டு தப்பித்துக்கொள்ள நீ எவ்வித சக்தியும் பெறமாட்டாய். உன்னுடைய (கப்ரில்) மண்ணறையில் தனியாய் நீ செய்த கருமங்களோடிருப்பாய். அப்பொழுது மண்ணறையில் முன்கர், நகீர் என்னும் பெயருள்ள இரு மலக்குகள் கேட்கும் கேள்விகளுக்கு அவசியம் நீ ஜவாபுசொல்லும்படி நேரிடும்.

அவர்களைக்கண்டமாத்திரத்தில் நீ திகிலடைந்து உன் மனம் திடுக்கிடும்படி நேரிடும். நீ தர்வேலைகளைச் செய்திருப்பாயாகில் உன் கப்ரானது உன் குடல்கள் அறுபட்டுத் துண்டு துண்டாய் விழக்கூடிய தன்மையையுடைய நரகத்தின் படுகுழிகளில் நின்றும் ஒரு படுகுழியாகிவிடும்; நீ நல்ல வேலைகளைச் செய்திருப்பாயாகில் ஆன்மாக்கள் இன்பங்களை அனுபவிக்கக்கூடிய சுவனத்தின் பூங்காவனத்தினின்றும் உன் கப்ரானது ஒரு பூங்காவனமாகிவிடும். கப்ரின் காரியங்கள் முடிவடைந்த பின் நீதி அநீதியைப் பற்றித் தீர்ப்புச்செய்வதற்காக உன்னை எழுப்பப்படும். அந்நாளில் உன் சம்பந்தமான தீர்ப்புகளை உனக்குச் சாதகமாக முடித்துக்கொள்ள யாதொரு பொருளும் அங்கு வந்துதவி உனக்குப்பயன்தராது. அந்நாளில் அங்கு நடைபெறும் அபார வேலைகளை மனிதர்கள் கண்டு திடுக்கிட்டவர்களாய்க் கண்ணீர்வடித்து அதிகம் அழ ஆரம்பிப்பார்கள். நபிமார்களான தீர்க்கதரிசிகள் அங்கு பயந்துகொண்டிருக்கும்பொழுது நமது நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் எழுந்தருளி அருஷின் கீழ் தங்கள் சிரசைவைத்து சாஷ்டாங்கஞ்செய்த மனவுருக்கத்துடன் தங்கள்மீது நம்பிக்கைவைத்த உம்மத்துகளுடைய இரட்

சண்யத்தைக்கோரி ஆண்டவனிடத்தில் குறையிரந்து வேண்டுவார்கள். அச்சமயம் "நீர் விண்ணப்பஞ்செய்யும் உமது விண்ணப்பத்தின்பிரகாரம் கொடுக்கப்படுவீர்; நீர் மன்றுடும், உமது மன்றாட்டத்தை ஒப்புக்கொள்ளப்படும்" என ஆண்டவன் சமுகத்திலிருந்து கூறுபவரான மலக்கு கூறுவார். அந்நேரம் நமது நாயகமவர்கள் உம்மத்துகளுக்காக மன்றுடுவார்கள். ஆதலால் அன்னவரின் ஷபா அத்து உனக்கு பிரயோஜனமாகும்பொருட்டு அன்னாரின் சலவாத்தை ஓதிவருவாயாக!

"சுவனலோகத்தின் பூங்காவனத்தருகில் நீங்கள் செல்லுங்கால் பயன் பெற்றுக்கொள்ளுங்களென நபிபெருமான் (ஸல்) அவர்கள் திருவாய்மலர்ந்தருளினார்கள். அப்பொழுது ஆண்டகையின் திருத்தூதரே! சுவனலோகத்தின் பூங்காவனமென்பதென்ன, அங்கு அடையும் பயனென்பதென்ன வென வினவியபொழுது, தொழும் ஸ்தலமாகிய பள்ளிவாயலும், சுப்ஹானல்லாஹி, வல்ஹம்துலில்லாஹி, வலாஇலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர், வலாஹவ்ல வலாகுவ்வத, இல்லாபில்லாஹில் அலிய்யில் அலீம், என்பனவாயிருக்குமென நபிநாயகமவர்கள் விடையளித்தார்கள். (ஹதீஸ்.)

சகோதரர்களே! சுவனத்திற்கொப்பான பள்ளிக்குள் புகுந்தால் மேற்காட்டிய துய்யகலிமாவையே முற்றிலும்ஓதி அதன்பயனைப்பெற்றுக்கொள்ளுங்களென்பதுதான்கருத்து.

"ஏ நம்பிக்கைகொண்டவர்காள்! கொரேமான வேதனையைவிட்டும் ஈடேற்றம் அளிக்கும் வர்த்தகம் உங்களுக்கு யான் அறிவிக்கட்டுமா? அல்லா(ஹ்)வின்மீதும் அவனது

திருத்தூதரின்மீதும் ஈமான்கொள்ளுவீர்களாக. மேலும் உங்களின் பொருள் ஆவிகளைக்கொண்டு அல்லா(ஹ்)வின் வழியில் போராடுவீர்களாக. மேற்கூறப்பட்ட நன்னம்பிக்கையும் போராடுதலும் உங்களுக்கு நன்மையைக்கொடுப்பனவாகும். நீங்கள் அறிவுபடைத்தோர்களாகவிருந்தால் அதன்படி செய்துகொள்ளுங்கள்.''

(அல்—குர்ஆன், 62 : 10, 11)

---

# ஜமாதில் ஆகிர் மாதம்,

# நான்காம் குத்பா.

நற்றவங்களைக் கடைப்பிடித்தொழுகி இறுதிநாளை எதிர் பார்த்தவர்களாய், தங்களிரு கால்களின்மீது நின்று அருந்தவம் செய்யும்பொருட்டு, அச்சப்பாடென்னும் தக்வாவை தன் நல்லடிமைகளின் ஆடையாக்கியவனும், அன்னவர்களைத் தன் சொந்த அடிமைகளாக்கி, அவர்கள் இன்ப வாக்கியங்களைச் செவியுறச் செய்தவனும் ஜும்ஆ, ஜமாஅத்து, முதலிய தவங்களைச்செய்து, முடிவுவரை நன்கொழுகும்படி நல்லருள்புரிந்தவனும், மூமின்களின் ஆன்மாக்களையும், பொருள்களையும் விலைக்கு வாங்கி அதற்கு உபகாரமாய் சுவனலோகமளிப்பவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கேபுகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை, அவன் தனித்தவன், இணைதுணையற்றவன் எனவும், நபிகள்பிரான் (ஸல்) அல்லா(ஹ்)வினது அடிமையும், அவனின் திருத்தூதரும் ஆவரெனவும், தீர்க்கதரிசியெனவும், நிச்சயமாய் சாக்ஷியம் கூறுகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்கள்மீதும், அன்னாரின் கிளைஞராதி தோழர்களின்மீதும் சதா கருணையும் அளவிறந்த சாந்தியும் அருள்புரிவானாக!

சகோதரர்காள்! உங்களுக்கும் எனக்கும் அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளுமாறு நல்லுபதேசம் செய்கிறேன். ஏனெனில் இவ்வகன்ற உலகங்களைப் படைத்தவனும் அதிபதியுமாகிய அல்லா(ஹ்)வை பயப்படுவது அவனது அன்பை யுண்டுபண்ணும்.

மானிடர்காள்! கியாமநாளென்னும் இறுதிநாள் சமீபித்துவிட்டது; தவங்களைச் சேகரிக்கும் நேரம் நெருங்கிவிட்டது; வாக்குறுதி செய்யப்பட்ட உண்மையான நாள் சமீபமாகிவிட்டது. என்னே உங்கள் அஜாக்ரதை! உங்களின் வாழ்நாட்கள் வீணாய்க் கழிந்துபோய்க் கொண்டிருக்கின்றன! நேரான வழியில் நடப்பதைவிட்டும் உங்கள் கண்கள் குருடாய்விட்டனவா? பிரதி வெள்ளிக்கிழமைதோறும் எத்தனையோ உறுதியான வார்த்தைகளைக் கேள்விப்பட்டிருந்தும், நீங்கள் ஆண்டவன்பால் திரும்பவில்லையே! கியாமநாளின் அடையாளங்கள் நிச்சயமாய் துயர்ந்து வந்துகொண்டிருப்பவைகளைக் கண்கூடாய்க் காணவில்லையா? வானம்பூமிகளை இடித்துவிடக்கூடிய கியாமநாளின் அடையாளங்கள் மறைவின்றி வெளிவந்துகொண்டிருப்பது உங்களுக்கு அச்சத்தைத்தரவில்லையா? கடலிலும் கரையிலும் அக்கிரமங்கள் பரவி வெளியாகவில்லையா? மிடிமையுடையோர்மீது அது மிகவும் மிகைப்பதைப் பார்க்கவில்லையா? தீனுக்குத் தூணாகியும் முக்கிய கடமையாயுமுள்ள தொழுகையை நீங்கள் பழுதாக்கிவிடவில்லையா? நிச்சயமாய் ஜகாத்தென்னும் ஏழைவரியை நீங்கள் கொடுக்காமலிருக்கவில்லையா? மேய்ப்பாளுகிய தலைவனும் மார்க்க சட்டதிட்ட நீதிசெலுத்துபவனுமாகிய இமாமும்இல்லாத ஜனங்களாய் இருக்கவில்லையா?

ஜனங்களுக்கிடையில் வீணான கொலை நடைபெறவில்லையா? இமாம்கள் அரசர்கள் தங்கள் குடிகளின்மீது அக்கிரமம் செய்யவில்லையா? நீதி ஸ்தலங்களில் சாக்ஷியங்களில் பொய் சொல்லுதல் மிகைபடவில்லபா? மதபோதகர்களாகிய உலமாக்கள் உலகை அழகாக்கிவைக்கும் இல்மைத் தேடவில்லையா? உங்களில் சிலர் சிலருக்கு அக்கிரமத்திற்கு உபகாரம் செய்யவில்லையா? ஆண்டவனை நீங்கள் தெரிந்துகொள்ளவில்லையா? தெரிந்திருந்தும் ஏன் நீங்கள் அவனுக்கு வழிப்படவில்லை. ஆண்டவனின் திருத்தூதரை நீங்கள் அறியவில்லையா? அறிந்திருந்தும் நீங்களேன் அன்னாரைத் தொடர்ந்து நடக்கவில்லை. முனிவுபெற்ற இப்லீஸ் உங்களுக்குப் பகைவனென்பதை அறியவில்லையா? அவனுக்கு ஏன் வழிப்பட்டீர்கள்? மார்க்கத்தில் அருவருக்கப்பட்டவைகள் உங்களிடத்தில் அருவருக்கப்படாதவைகளாகிவிட்டன; விலக்கப்பட்டவைகள் உங்களில் பஹிரங்கமாயிருக்கின்றன; விபசாரம் மலிந்துவிட்டது; இலஞ்சம் மிகுந்துவிட்டது; ஞாயத்தீர்ப்பைவிட்டு அநீதத்தீர்ப்பெடுக்கப்பட்டது. கெட்ட காரியங்களுக்கு உபகாரம் செய்யப்படுகிறது; நல்ல காரியங்களை யடக்கப்படுகிறது; ஜாஹில்களைப் புகழப்படுகிறது; ஆலிம்களை இகழப்படுகிறது; வீடுகளை உவக்கப்படுகிறது; பள்ளிவாயல்களை வெறுக்கப்படுகிறது. அல்லா(ஹ்)வுக்கு மாறு செய்யத் துணியப்படுகிறது; ஏழைகளின் காரியம் கஷ்டத்திற்கிடமாகிவிட்டது; மார்க்க பக்தியிலிருப்பவன் நெருப்புக் கங்கைப்பிடித்தவனுக் கொப்பாகிவிட்டான்.

நபிகள்நாயகம்(ஸல்), என்னுடைய உம்மத்தோர்களில் ஒரு கூட்டத்தாரை பூமி விழுங்காதவரை கியாமநாள்

மூடுகாதெனத் திருவுளமானார்கள். அப்பொழுது அல்லா (ஹ்)வின் திருத்தூதரே! அது எக்காலமென வினவப் பட்டது. கட்குடித்தல், பட்டு அணிதல், பாடும் தாசிகளை வைத்து நடித்தல், ஆண்கள் ஆண்களைக்கொண்டும் பெண் கள் பெண்களைக்கொண்டும் தமது இச்சைகளை நிறைவேற் றிக்கொள்ளுதல் ஆகிய இவைகள் நிகழும் காலத்திலேதான் விழுங்கப்படுமென பதிலளித்தார்கள். (ஹதீஸ்).

"ஏ நன்னம்பிக்கை கொண்டவர்காள்! உங்களின் ஆன் மாக்களையும், உங்கள் குடும்பத்தாரையும், நரகத்தைவிட்டுக் காப்பாற்றிக்கொள்ளுங்கள். அந்நரகத்தின் எரிகொள்ளி மானிடர்களும்(விக்கிரகங்களாகிய) கற்களுமாகும். அந்நர கத்தின்மீது கடுமையானவர்களும் இரக்கமற்றவர்களுமான, மலக்குகள் உண்டாயிருக்கிறார்கள்; அவர்கள் ஆண்டவன் ஏவியதற்கு மாறுசெய்யார்கள்; ஏவப்பட்டதைச் செய் வார்கள்.'' (அல்—குர்ஆன், 66 : 6 )

---

# ஜமாதில் ஆகிர் மாதம்,

# ஐந்தாம் குத்பா.

வானம் பூமிகளை சிருஷ்டித்து, அவற்றுள் எண்ணிறந்த ஜீவஜந்துக்களை உற்பத்திசெய்து, அவைகளுள் மானிட ஜன்மத்திற்கு நன்மை தீமையைப் பாகுபடுத்தி பிரித்தறியும்படியான பகுத்தறிவென்னும் மாணிக்கத்தை யளித்தவனும், இம்மானிட கோடிகளுள் நன்மை செய்தவர்களுக்கு அளவில்லா ஆநந்தத்தைக் கொடுக்கக்கூடிய சுவன உலகத்தையும், மார்க்கமறியாமல் தீமையைக்கைக்கொண்டவர்களுக்கு பொறுக்கொணாத துன்பத்தையும், மட்டிடற்கரிய விசனத்தையுந் தரக்கூடிய நரகத்தையும், உண்டுபண்ணிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன்; இணைதுணையற்றவன் எனவும், நபிகள்பிரான் (ஸல்) அல்லா(ஹ்)வினது அடிமையும், அவனின் திருத்தூதரும் ஆவரெனவும், தீர்க்கதரிசியெனவும், நிச்சயமாய் சாக்ஷியம் கூறுகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்மீதும், அன்னாரின் கிளைஞராதி தோழர்களின்மீதும் சதா கருணையும் அளவிறந்த சாந்தியும் அருள்புரிவாராக!

சகோதரர்காள்! உங்களுக்கும் எனக்கும் அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளும்படி நல்லுபதேசஞ் செய்கின்றேன்.

ஏனெனில் இவ்வகன்ற உலகங்களைப் படைத்தவனும், அதிபதியுமாகிய அல்லா(ஹ்)வை பயப்படுவது அவனது அன்பை யுண்டுபண்ணும்.

சகோதரர்காள்! அல்லா(ஹ்)வுக்கே இபாதத்தென்னும் தவத்தைச்செய்து நற்கதியை யடைவதற்காக தேக சுத்தியுடன் பள்ளிவாயலுக்கு வருகின்றீர்கள். உங்கள் எண்ணத்தைப்போல் ஆண்டவன் மெய்யாகவே உங்களுக்கு நற்பதவியைத் தருவான். எனினும் அந்நன்மையை பெறுவதற்கு முன் உங்களில் சில விஷயங்கள் காணப்படவேண்டியது அத்தியாவசியம். ஆண்டவன்மீது ஒவ்வொருவரும் (ஈமான்) உறுதிகொண்டிருக்கின்றீர்கள். இறைவன் உண்டென மனச்சாக்ஷியுடன் ஒப்புக்கொண்டிருக்கிறீர்கள் என்றாலும், நீங்கள் செய்துவரும் விஷயங்களால் இறைவனை ஒப்புக்கொண்ட பாவனையைப்போலல்லாது உண்மையாக உறுதிகொண்டவர்களைப்போல் காணப்படவில்லை. சற்று நிதானமாய் யூகித்துப்பாருங்கள். உலகத்தின்மீதும், அதற்குச் சம்பந்தமான வியாபார முதலியவைகளின்மீதும், மனிதர்களின்மீதும் உங்களுக்கிருந்துவரும் நம்பிக்கையைப் போல் ஆண்டவன்மீதில்லை. குறித்த நேரத்தில் ஒருவன் யாதொன்றைத் தருவதாகச்சொல்லி உங்களை வரும்படியாக அழைத்திருந்தால் அந்நேரத்துக்கு தவறாமல் ஆஜராகிறீர்கள். ஆனால் ஆண்டவன் சிலநேரங்களைக்குறித்து தொழுகச்சொல்லி அதற்கு மனிதனால் கொடுக்கமுடியாத பிரதிபலனாகிய நன்மைகளைத் தருவதாய் உங்களுக்கு வாக்களித்திருந்தும் உங்கள் எண்ணம் அதன்மீது செல்வதில்லை.

ஒருவன் மனிதன்மீதுவைத்திருக்கும் நம்பிக்கையளவு ஆண்டவன்மீதிருக்கிறதா? என சிந்தித்துப்பாருங்கள்;

மேலும் பள்ளிகளுக்கு தொழுகவென வருகிறீர்கள், அங்கு நடந்துகொள்ளவேண்டிய முறைகளாகிய உலக சம்பந்தமான பேச்சுக்களோ, வழக்குகளோ, அவன் பேசாதிருத்தல், உறங்காதிருத்தல், பள்ளியில் புகும்பொழுது வலதுகாலை முன் வைத்தல், திரும்பும்பொழுது இடதுகாலை முன்வைத்தல், வெளிச்செல்லும்பொழுது ஒருவரைத் தாண்டியோ, மிதித்தோ, செல்லாதிருத்தல் முதலிய அரிய விஷயங்களை கவனிப்பதில்லை. இன்னமும் ஜமாஅத்துடன் சேர்ந்து தொழும்பொழுது பாதங்களை நேராய் வைத்து (சப்பில்) ஒழுங்காய் நிற்பதில்லை. நபிகள்பெருமான் (ஸல்) அவர்கள் சப்பை அணிவகுத்து நிற்கும்படிசெய்வார்கள். தொழுகையைக் கடைப்பிடித்தொழுகிறீர்கள், என்றாலும் சில முக்கிய விஷயங்களை ஞாபகம் வைக்கவேண்டிய தவசியம். அதாவது தொழுகையில் எந்த இடத்தில் எந்த வாக்கியங்களை ஓதப்படுகின்றனவோ அவைகளின்மீதே ஞாபகத்தை நிலைநிறுத்தல் வேண்டும். அவற்றின் அர்த்தம் விளங்காவிட்டாலும் விளங்கிய பாவனையாய் அல்லா(ஹ்) வின் ஞாபகமாய் நிற்றல் வேண்டும்; பின்பு அதன் அர்த்தங்களை ஆலிம்களிடம் கேட்டறிந்து கொள்ளல்வேண்டும். வயது முதிர்ந்த பின்னரும் உலக விஷயங்களில் தெரியாதவைகளை விளங்கிக்கொள்ள கற்றவரிடம் செல்கிறதில்லையா? மார்க்க விஷயத்தில் அங்ஙனம் திரும்ப மனம் ஏன் இடங்கொடுக்கவில்லை? உலக விஷயங்களில் வெகு ஜாக்கிரதையுடன் ஒவ்வொன்றையும் கவனிக்கிறீர்களே? அதிலும் அதிகமாக மார்க்க விஷயத்தில் கவனத்தைச் செலுத்துங்கள். நாம் இறந்துபோவது நிச்சயம். நாம் செய்யும்

காரியங்களில் ஒவ்வொன்றுக்கும் இறைவனிடம் பதில்சொல்லியே தீரவேண்டும். அவன்பாற் சென்றபின் நீங்கள் பரிதாபப்படுவது பயன்தராது. இவ்வுலகில் ஜாக்கிரதையாயிருந்து அமல் செய்துகொள்ளுங்கள். கியாமநாளில் நீங்கள் சுகம்பெற்ற ஒவ்வொன்றைத்தொட்டும் கேட்கப்படுவீர்கள்.

பந்துக்கள் பொருள் அமல் ஆகியவைகள் இறந்தவனை பின்தொடர்ந்துசெல்லுகின்றன. அவைகளுள் அவன்செய்த அமல் மாத்திரம் அவனுடன் நிலைத்து நின்றுவிடுகிறது; பந்துக்களும் பொருளும் திரும்பிவிடுகின்றன. என நபிகள் பெருமான் அருளிச்செய்தார்கள். (ஹதீஸ்.)

"எவனொருவன் அணுவளவு நன்மை செய்திருப்பானாகில் அதையும் கண்டுகொள்வான்; எவனொருவன் அணுவளவு தீமை செய்திருப்பானாகில் அதையும் கண்டுகொள்வான். அதாவது இரண்டையும் அனுபவிப்பான்." (அல்—குர்ஆன், 101:7, 8.)

———

## ரஜபு மாதம்,

# முதலாம் குத்பா.

அளவிடற்கரிதான தனதறிவால் சர்வ வஸ்துக்களையு மறிந்து அவைகளடங்கலையும் எண்ணிக்கையால் மட்டுப் படுத்தியவனும், ரஜபுமாதத்தை மேன்மைப்படுத்தி அம் மாதத்தை நற்கருமங்களைப்புரிவதால் நம்மீது கௌரவப் படுத்தலை கடமைபாக்கினவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். அவனைத்தவிர வேறு ஆண் டவனில்லை; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், மனைவிமக்களற்றவன் எனவும், நிச்சயமாய் நமது நாயகம் முகம்மது(ஸல்) அவர்கள் ஆண்டவனின் அடிமையும் அவ னது திருத்துதரும் நேர்வழியையும் தெளிவான விஷயங் களையும் கொண்டுவந்து நமக்கு அருளிச்செய்தவர்களும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அன்ன வர்களின்மீதும், அன்னாரின் தோழர் கிளைஞராதிகள்மீதும், சதா கருணையும், ஈடேற்றமும், அளவிறந்த சாந்தியும் அருள்புரிவானாக!

ஆண்டவனின் அடிமைகளே! பரிபூரண அறிவடைந்த வல்ல அரசனாகிய அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளும்படி

உங்களுக்கும் முதலாவதாக எனக்கும் நல்லுபதேசஞ் செய்கின்றேன். ஹராமானவைகளை புசிப்பதைவிட்டும் உங்களையும், என்னையும் விலக்குகிறேன். அன்றியும் நன்மைகளையும் நேர்வழிகளையும் பெறுவதற்காக பாவச்செயல்களைவிட்டும் நீங்கள் விலகிக்கொள்ளும்படி உங்களுக்கு எச்சரிக்கை செய்கின்றேன்.

சகோதரர்காள்! இம்மாதமாகிறது ரஜபு மாதமாயிருக்கும். இம்மாதத்தை அல்லா(ஹுதஆலா) இஸ்லாத்துக்கு முன்னும் பின்னும் மிக மேன்மையாக்கிவைத்தான். இம்மாதத்தில் எவனொருவன் பத்துநாள் நோன்பு நோற்பானாகில் அல்லா(ஹ்) அன்னவனை நற்பாக்கியமுள்ளவர்களுள் ஒருவனாக ஏற்றுக்கொள்வான். ஆனதால் இம்மாதத்தில் அதிகமாய் நோன்பென்னும் உபவாசம் இருங்கள். ஜனங்கள் இரவுகாலங்களில் நித்திரைசெய்வார்கள்; அவ்விதம் நீங்கள் செய்யாமல் ஆண்டவனை வணங்கிக்கொள்ளுங்கள். இம்மாதத்தில் ஏழைகளுக்கு உணவளித்து பசியையாற்றுங்கள். ஒருவருக்கொருவர் சந்திக்கும்பொழுது சலாமை அதிகப்படுத்துங்கள். இம்மாதத்தில் தெண்டித்து (அமல்) தவஞ்செய்தவனுக்கே சோபனமுண்டாவதாக.

அழாதகண்கள் அழும்நேரம் முடுகவில்லையா? நற்போதனைகளைக்கேளாமல் செவிடாயிருக்கும் காதுகள் கேட்கும் நேரம் வரவில்லையா? கெட்டியான மனங்கள் ஆண்டவனை பயப்படும் நேரம்கிட்டவில்லையா? மரணமடுக்குமுன் நன்னம்பிக்கை கொண்டவர்களின் மனங்கள் ஆண்டவனது ஞாபகத்தில் பயப்படும் நேரம் வரவில்லையா? அங்ஙனம் மரணம் வந்துவிடுமாகில் மனிதர்கள் எக்காரணத்தையும் எடுத்துக்

காட்டி அதினின்றும் விலகிக்கொள்ளும் சக்தி யெற்றிருக்க மாட்டார்கள், ஏ! மானிடனே! உன் வயதெல்லாம் சென்று விட்டது. நீ (தவ்பா) பாவம் பொறுக்கப் பிரார்த்திக்காது தாமதிக்கின்றாய். உன்மீது காலங்கள் மாறி மாறி வரும் பொழுதெல்லாம் பின்வரும் காலங்களில் பிரார்த்தனை புரிய லாமென தவணைவைக்கின்றாய். நிச்சயமாய் ரஜபு மாதமா னது மேன்மைவாய்ந்த மாதங்களிலொன்றென் நீ அறியவில் லையா? இம்மாதத்தை அல்லா(ஹ்) நன்மைகளை அதிகப்படுத் தும் மாதமாக சிருஷ்டித்திருக்கிறான். அப்படியிருக்க ரஜ பாகிய இம்மாதம் வந்தால் அடுத்துவரும் ஷஅபானில் தவ் பாச்செய்யலாமென உனக்குள் எண்ணுகின்றாய். ஷஅபான் வருமாகில் ரமலான் மாதத்தை எதிர்பார்க்கின்றாய் இவ்வித மே ஒவ்வொரு மாதத்தையும் பிற்படுத்தி தவ்பாச் செய்யா மல் பாவத்தின்மீதே பிடிவாதமாக உன் காலத்தைக் கழிக் கின்றாய்.

ஏ! ஓதுகிறவனே! நீ ஓதுவதைக்கொண்டு உணர்ச்சி யைப்பெற்றுக்கொள். ஏ ஆலிமே! உன் கல்வியைக்கொண்டு ஆண்டவனளவில் முடுகிக்கொள். ஏ கற்றவனென வாதிப் பவனே! உன் கல்வியைக்கொண்டு தவஞ்செய்துகொள். பா வங்கள் நிவர்த்தியாகும் காலமும், மாதமும் வந்துவிட்டன, இனிப்பார்த்துக்கொள்ளலாமென நினைக்கவேண்டாம். இப் படி நினைத்துக்கொண்டிருக்கும்பொழுதே உன் ஆத்மா உன்னைவிட்டு நீக்கப்பட்டு மரணமடைந்தபின் இவ்வுலகத்தி லுள்ள யாவும் உனக்கு பயன்தரா.

நிச்சயமாய் சுவனவுலகத்தில் ரஜப்என்று ஓர்நதியுண்டு. அதன் நீர் பாலினும் வெண்மையும், தேனினும் இனிமையும்

உளது. எவனொருவன் ரஜபு மாதத்தில் மூன்று நாள் உபவாசம் இருப்பானாகில் ஆண்டவன் அவ்வாற்றினின்றும் அவனுக்கு நீரைப் புகட்டுவானென நமது பெருமான் (ஸல்) அவர்கள் திருவாய்மலர்ந்தருளியிருக்கின்றார்கள். (ஹதீஸ்.)

"எனதருமை நபியே! ஒருவன் தன் தாய், தந்தை, மனைவி, மக்கள், சகோதரனை விட்டோடும் நாளை (ஞாபகப் படுத்தும்) அந்நாளில் அவர்களி(மனிதர்களி)னின்றும் ஒவ் வொருவருக்கும் மற்றவர்களைவிட்டும் தேவையறும் அலுவல் களுண்டாயிருக்கின்றன. சில(ர்களின்) முகங்கள் அந்நாளில் கலக்கமற்றதாயும் சிரிப்புடையதாயும் சந்தோஷமடைந்த தாயுமிருக்கும்; சில(ர்களின்) முகங்கள் அந்நாளில் புழுதி படிந்ததாயும், விசனமுள்ளதாயுமிருக்கும். இம்முகத்தை யுடையவர்கள் தாம் கொடிய மாறுசெய்தலர்களாவார்கள்" (அல்—குர்ஆன், 80 : 34-37.)

---

# ரஜபு மாதம்,

# இரண்டாம் குத்பா.

பாவிகளை தண்டிக்காமல் பிற்படுத்திவைத்து அன்னவர்கள் விரும்பியபொழுதெல்லாம் விருப்பத்திற்குத் தக்கவாறு கொடுத்தருள்பவனும், இவ்வுலகின்கண் நம் பார்வைகளை விட்டு மறைந்தும், எக்கண்களாலும் அவனைப்பார்க்க சக்திபற்ற தன்மையுடையவனும், அவனுக்குப் பயந்து தக்வா செய்தவர்கட்கு மோட்சத்தையும், அவனுக்கு மாறுசெய்தவர்கட்கு நரகத்தையும் ஸ்தாபனஞ் செய்தவனும், அவன் மீது நன்னம்பிக்கைவைத்து தன் விஷயங்களை அவனிடத்தில் ஒப்புவித்தவனைக்காப்பாற்றி நேர்வழிகாட்டுபவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அவனைத்தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், மனைவி மக்களற்றவன் எனவும், நிச்சயமாய் நமது நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் ஆண்டவனின் அடிமையும் அவனது திருத்தூதரும், நேர்வழியையும், தெளிவான விஷயங்களையும், கொண்டுவந்து நமக்கு அருளிச்செய்தவர்களும் ஆவரெனவும், சாக்ஷியம் கூறுகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்களின்மீதும், அன்னாரின் தோழர் கிளைஞராதிகள்மீதும்,

சதா கருணையும் ஈடேற்றமும், அளவிறந்த சாந்தியும் அருள்புரிவானாக!

ஆண்டவனின் அடிமைகளே! பரிபூரண அறிவுடைந்த வல்ல அரசனாகிய அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளும்படி உங்களுக்கு முதலாவதாக உபதேசஞ்செய்கின்றேன். ஹறாமானவைகளைப் புசிப்பதைவிட்டும் உங்களையும், என்னையும் விலக்குகின்றேன். அன்றியும் நன்மைகளையும் நேர்வழிகளையும் பெறுவதற்காக பாவச்செயல்களைவிட்டும் நீங்கள் விலகிக்கொள்ளும்படி உங்களுக்கு எச்சரிக்கை செய்கின்றேன்.

மானிடனே! நீ இவ்வுலகில் காண்பவைகளைக்கொண்டு எமாந்துவிடவேண்டாம். உன்வயதுகள் அதிசீக்கிரம் முடிவையடைகின்றன. காலம் எவருக்கும் நியமமாயிருக்கவில்லை. இவ்வுலகினின்று எவரும் தம் எண்ணங்களைப் பூரணமாயடையவில்லை. அங்ஙனமிருக்க ஏன் தொழும் நேரங்களில் தொழாமல் சோம்பலாய் இருக்கின்றாய்? இறைவனை நீ பயப்படவில்லையா? முஸ்லிமுக்கும் முஸ்லிமல்லாதாருக்குமிடையில் தொழுகையைத் தவிர வித்தியாஸம் வேறில்லையென நமது பிரான் (ஸல்) அவர்கள் அருளிச்செய்திருப்பதை நீ கேள்விப்படவில்லையா? நிச்சயமாய் தொழுகையை விட்டவனைக் கண்டிக்கிறவனுக்கு ஆண்டவனிடத்தில் பதவியதிகமாய்க்கிடைக்குமென்பதை அறியவில்லையா? தொழுகையைவிட்டவன் உங்களிடத்தில் பெண்களைக்கேட்டால் அன்னவனுக்கு விவாகஞ் செய்துகொடுத்து அவனின் எண்ணங்களை நிறைவேற்றி வைக்கவேண்டாம். வேளாண்மை, வர்த்தகம், வமிசவிருத்தி, கால் நடைகளான ஆடு, மாடு, ஒட்டகை முதலியவைகளின் பால் பெருக்கம் ஆகிய

இப்பாக்கியங்கள் அபிவிருத்தியாக வேண்டுமாயின், ஒவ்வொரு கிராமமும், பட்டணமும், தொழுகையைவிட்டவனை அப்புறப்படுத்துவதவசியம். தொழுகையை விட்டவன் இறந்தபின் அவனை கப்ரிலடக்கஞ்செய்து அக்கப்ரின்மீது மண்ணைத்தள்ளப்படுமாகில் அக்கபர் நெருப்புப்பற்றிஎரியும். அந்நேரம் ஆஹ்! ஆஹ்! எனப் பரிதாபப்பட்டழுவான்.

ஆனால் யாதொன்றும் அங்ஙனம் பிரயோஜனம்தராது. அதற்குப்பின் ஷுஜா என்னும் மலக்கு அவனிடத்தில் வருவார். அவரின் இருகண்களும் நெருப்புப்பந்தங்களைப்போல் பிரகாசிக்கும். அவரின் சப்தம் கர்ஜிக்கும் இடியைப்பார்க்கிலும் அதிகக் கடுமையானதாயிருக்கும். அவரின் கரத்தில் இரும்புத் தண்டாயுதமொன்று உண்டாயிருக்கும். வானத்தையளாவிக்கொண்டிருக்கும் பாரிய உயர்ந்தமலையை அத்தண்டாயுதத்தால் அடிக்கப்படுமாகில், அந்த அடியின் கொடூரத்தால் அம்மலை இடிந்து தகர்ந்துவிடும். தொழுகையை விட்டவனுக்கு மேற்காட்டியவை போன்ற கடுமையான வேதனைகள் விதிக்கப்பட்டிருந்தும் நீங்கள் அதன்பால் கவனத்தைச்செலுத்தாமலிருப்பதின் காரணமென்ன? அந்தோ! மரணமாகமாட்டோமென நினைக்கின்றீர்களோ? அல்லது சுற்றத்தார், உறவினர் காப்பாற்றிவிடுவார்களென நம்பிக்கை வைத்திருக்கின்றீர்களோ? அல்லது இவ்வுலகில் சதா யிருந்துவிடுவோமென மனோராஜ்யம் பண்ணுகின்றீர்களோ? சகோதரர்காள்! உங்களுக்கு முன்னுள்ளவர்களாது கதியைச் சற்றுயோசித்து ஆராய்ச்சி செய்யுங்கள். அன்னவர்களின் முடிவு எவ்வாறாயிற்று? உலகத்தையாண்ட அரசர்களும், அவ்வரசர்களுக்கு ஆலோசனை சொல்லும்

மந்திரிகளும், அவ்வரசர்களைக் காப்பாற்றம்பொருட்டு வாள் தாங்கிநின்ற பலவகைச் சேனைகளும், அதற்காக முயற்சித் தவர்களுமெங்கே? ஜனங்களுக்கு அக்கிரமஞ்செய்தவர்க ளும், அநாதைக் குழந்தைகளின் முதலைப் புசித்தவர்களு மெங்கே? ஆண்டவனுக்கு மாறு செய்துவிட்டு ஆண்டவன் அவர்களை மறந்துவிட்டானென எண்ணினவர்களெங்கே? ஆண்டவன்மீது சத்தியமாக அல்லா(ஹ்) அன்னவர்களை இவ்வுலகிலேயே நிலைத்திருக்கும்படி விட்டுவிடவில்லை. ஆயி னும் தன்னைச் சந்திக்குங்காலம் வருமளவும் அவர்கள் ஆயுளைப்பிற்படுத்தினன். பின்னர் அவர்கள் இறந்தார்கள். ரஜபு மாதத்தில் துஆ கேட்டது ஒப்புக்கொள்ளப்படு மென நமது பெருமான்(ஸல்) அவர்கள் திருவாய்மலர்ந்த ருளியுள்ளார்கள். இரக்ஷகா! உன்னிடத்திலிருந்து ரஹ் மத்தென்னும் கருணைசெய்தருள்வாயாக. எங்களுடைய காரியங்களில் எங்களுக்கு நேர்வழி காண்பிப்பாயாக! ஆமீன்.

(நரகவாதிகள்) "நாம் (எச்சரிக்கைக்குச்) செவிசாய்த் திச்சிந்தனை செய்திருப்போமாயின் (இன்று) எரிநரகவாதி களுள் ஆயிருக்கமாட்டோம்" என்பார்கள். ஆகவே, அவர் கள் தங்கள் குற்றத்தை ஒப்புக்கொள்வார்கள்; எரிநரகவாதி களுக்கு (அல்லாஹ்வின்கருணை) தூரமானது. தமது இறை வனை மறைவிடத்தில் அஞ்சுவோர்களோவெனின், நிச்சய மாக அவர்கள் மன்னிப்பும் சிறந்த சன்மானமும் பெறுவார் கள்." (குர் ஆனின் வியாக்கியானம், 67 : 10, 11, 12.)

---

ரஜபு மாதம்,

# மூன்றும் குத்பா.

ஜீவஜந்துக்களை உற்பத்திசெய்து அவைகளில் ஒவ்வொன்றின் தேவைகளையும் நன்குணர்ந்து அவைகட்குத் தகுந்த நன்கொடையளிப்பவனும், அவைகளின் சௌகரியத்திற்காக இரவு பகலையும், கெட்டியான கற்களினின்று இன்பமான் நீரையும் சிருஷ்டிப்பவனும், சந்திரன், சூரியன் வானம், பூமி, கடல், முதலிய யாவற்றையும் தன் வசத்தில் வைத்து அடக்கியாள்வதுடன் கடிதான வேதனைசெய்ய சக்திபெற்றிருந்தும், பாவிகளின் பாவங்களைப் பொறுத்து தவ்பாவை ஒப்புக்கொள்பவனுகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். அவனைத்தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன்; இணைதுணையற்றவன், மனைவி மக்களற்றவன் எனவும், நிச்சயமாய் நமது நாயகம் முஹம்மது(ஸல்) அவர்கள் ஆண்டவனின் அடிமையும், அவனது திருத்தூதரும், நேர்வழியையும், தெளிவான விஷயங்களையும் கொண்டுவந்து நமக்கு அருளிச்செய்தவர்களும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்களின்மீதும், அன்னரின் தோழர் கிளைஞராதிகள்மீதும் சதா கருணையும் அளவிறந்த சாந்தியும் அருள்புரிவானுக!

ஆண்டவனின் அடிமைகாள்! பரிபூரண அறிவடைந்த வல்ல அரசனாகிய அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளும்படி உங்களுக்கு முதலாவதாக உபதேசஞ் செய்கின்றேன். ஹராமானவைகளைப் புசிப்பதைவிட்டும் உங்களையும் என்னையும் விலக்குகிறேன். அன்றியும் நன்மைகளையும் நேர்வழிகளையும் பெறுவதற்காக, பாபச்செயல்களைவிட்டும் நீங்கள் விலகிக்கொள்ளும்படி உங்களுக்கு எச்சரிக்கை செய்கின்றேன்.

மானிடர்காள்! அல்லா(ஹுதஆலா) தன் கருணையால் இந்த ரஜபு மாதத்தை மேன்மைப்படுத்தி அதில் ரஹ்மத்தை இறக்குகின்றான். ஆகிரத்திற்காக இம்மாதத்தில் வியாபாரஞ்செய்வது பல காரணங்களினாலும் மேலான தென்பதையுணர்ந்து நீங்கள் மரணமடையுமுன் ஆண்டவனிடத்தில் தவ்பாவென்னும் பாவம் பொறுக்குதலைத் தேடிக் கொள்ளுங்கள். நிச்சயமாய் அல்லா(ஹுதஆலா) தவ்பாச் செய்பவர்களின் தவ்பாவை ஒப்புக்கொள்வான். தவறின காரியங்களின்மீது பச்சாதாபப்பட்டுணர்பவன் ஜெயமடைவானாதலால் உங்கள் தவங்களில் தவறியவைகளின் மீதும், குறைவுபட்டவைகளின் மீதும் பச்சாதாபப்படுங்கள். அதைப் பூர்த்திசெய்யும் வழியைத்தேடுங்கள். பாவச்சுமைகளை இலகுவாக்கிக்கொள்ளுங்கள். வேலைக்காரர்கள், சம்பளக்காரர்கள்மீதும் பொதுவாக மனிதர்களடங்கலின் மீதும் இரக்கப்படுங்கள். ஏனெனில் இரக்கமுள்ளவனே ஜயமடைந்தவனாவான். சதகாவென்னும் தர்மம் முதலிய நன்மையான காரியங்களையே வியாபாரமாகச் செய்து கொள்ளுங்கள்.

ஆயுள் நாட்கள் குறைந்துகொண்டே செல்லுகின்றன. நமது அமல்களென்னுந்தவங்களை யெழுதப்படும் ஏடுகள் நன்மைகளுக்குப் பதிலாய் பாவங்களால் நிறைக்கப்படுகின்றன. (அதாவது பாவங்கள் அதிகப்பட்டுக்கொண்டே போகின்றன). நன்மைகளைச்செய்ய வயது போதாததாயிருக்கின்றது. ஆகவே தாமதிக்காது அதிவிரைவில் நன்மையைச் செய்துகொள்ளுங்கள்.

சகோதரர்காள்! இவ்வகன்ற உலகைவிட்டும் நெருக்கமான மண்ணறைக்குச்செல்ல பிரயாணமாகுங்காலம் வந்துவிட்டது. கியாம நாளில் எழுப்புவதையும் விசாரணைக்காக அங்குவருவதையும் இலேசாகக்காண்கிறீர்கள். “ஆண்டவனது அடிமைகளே! கேள்விகணக்கு கொடுக்கும் நாளாகிய கியாமநாளளவில் வாருங்கள் என” ஆண்டவன் ஆணைப்படி கூப்பிடுபவர் கூப்பிடுவார். நல்ல அமல்களை நாம் தேடாதிருக்கும் பொழுதே வயதுகள் சென்றுவிட்டன. உலக ஆசைகளிற் சிக்குண்டு, உபயோகமற்ற வழியில் இதைச் செய்வோம்அதைச்செய்வோமென்ற பேராவல்கொண்டு நாமிருப்பதால் பாவங்கள் நம்மீது குவிந்துவிட்டன. இரவும்பகலுஞ் சென்றுகொண்டிருப்பதினுல் உங்கள் வயது குறைவுதைக் கவனித்தாவது உணர்ச்சிபெறவேண்டாமா? கபர், சிராதுல் முஸ்தகீம் பாலம், கியாமநாளில் கணக்குக்கொடுத்தல், முதலியவைகளை மறந்துவிட்டீர்கள். தன்வயதினுல்பிரயோஜனம் பெறுமல் காலங்கழித்தவனது வீண்காலத்திற்குயாதுசொல்வேன்! தவமென்னுங் கட்டுச்சாதமின்றி நீண்ட பிரயாணத்தை நாடியவனது துர்ப்பாக்கியத்திற்கு யாது சொல்வேன்! வேதனைகளைவிட்டு தனது ஆத்மாவை ஈடேற்றமாக்குவதற்கு

பாடுபடாமல், கெடுதியைச் செய்வதையே வழக்கமாக்கிக் கொண்டவனது பரிதாபத்திற்கு யாதுசொல்வேன்!

அல்லா(ஹ்)வின்மீது சத்தியமாய் உங்களின் முதுகுகள் பாவத்தினாற் கனமாகிவிடும் காலம் சமீபித்துவிடப் போகிறது. உங்களின் பாதங்கள் சருகி நரகத்தில் வீழ்வீர்கள். எல்லாம் வல்ல அரசனாகிய அல்லா(ஹுதஆலா)வுக்கு அஞ்சி பயந்து ஆன்மாவை வேதனைக்குள்ளாக்காமல் விடுவித்தவனே ஜெயமடைந்தவனாவான்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பின்வருமாறு திருவுளமாயுள்ளார்கள்:- "ரஜபு மாதத்தில் வியாழன், வெள்ளி, சனி, (இம்)மூன்றுநாள் எவனொருவன் நோன்பு நோற்பானாகில் அல்லா(ஹ்) அன்னவனுக்கு தொளாயிரம் வருஷத்தின் வணக்கத்தை எழுதுவான்." (அனஸ்-றலி, ஹதீஸ்)

அல்லா(ஹுதஆலா)வை ஞாபகஞ்செய்வதினாலும் (திரு) குர்ஆனில் நின்றும் நாம் (சில வாக்கியங்களை) இறக்கிவைத்ததினாலும், ஈமான்கொண்டவர்களுக்கு அவர்களினிருதயங்கள் பயப்படும் நேரம் வரவில்லையா? இதற்குமுன் வேதத்தைக் கொடுக்கப்பட்டு (அவர்களுக்கும், அவர்களின், தீர்க்கதரிசிகளுக்குமிடையில்) நீண்டகாலஞ்சென்றதினால் அவர்களிருதயங்கள் வன்னெஞ்சாய் விட்டார்களே அவர்களைப்போல் (மூமினானவர்களும்) ஆய்விடாமலிருக்கும் நேரம் வரவில்லையா? அவர்களி (வேதத்தைக் கொடுக்கப்பட்டவர்களி)னின்றும் அநேகர் துர்நடத்தையுள்ளவர்கள். (அல்-குர்ஆன், 57:16.)

# ரஜபு மாதம்,

# நான்காம் குத்பா.

தன்னைப்பயப்படும்படி எச்சரித்து வசிய்யத்துச்செய்து, ஒவ்வொரு வஸ்துக்களையும் நன்கறிந்து மட்டுப்பத்தியவனும், மானிடர்களை எல்லாவற்றைப்பார்க்கினும் அழகிய வடிவத்தில் பூரண சிருஷ்டியாக சிருஷ்டித்து, அவர்களுள் நபிகள் நாயகம் முஹம்மது(ஸல்) அவர்களின் உம்மத்துகளை எல்லா உம்மத்துகளைப் பார்க்கினும் மேன்மைப்படுத்தியவனும், (இங்ஙனமே திருமறையிலும் அருள் செய்யப்பட்டிருக்கின்றது) தன் திருத்தூதராகிய நபிபெருமான் (ஸல்) அவர்களை மகா மேன்மைவாய்ந்த (பரிசுத்த ஸ்தலமாகிய) கஅபதுல்லாவினின்று பைதுல்முகத்தஸ் வரை இரவில் அழைத்துச்சென்றவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும் அவனைத்தவிர வேறு ஆண்டவனில்லை, அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், மனைவி மக்களற்றவன் எனவும்; நிச்சயமாய் நமது நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் ஆண்டவனின் அடிமையும் அவனது திருத்தூதரும், நேர்வழியையும், தெளிவான விஷயங்களையும் கொண்டு வந்து நமக்கு அருளிச்செய்தவர்களும் ஆவரெனவும் சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்களின்மீதும்,

அன்னாரின் தோழர் கிளைஞராதிகள்மீதும், சதா கருணையும், ஈடேற்றமும், அளவிறந்த சாந்தியும் அருள்புரிவானாக!

ஆண்டவனின் அடிமைகளே! பரிபூரண அறிவையுடைந்த வல்ல அரசனாகிய அல்லா(ஹ்)வைபயந்துகொள்ளும்படி உங்களுக்கு முதலாவதாக உபதேசஞ்செய்கின்றேன். ஹராமானவைகளைப் புசிப்பதைவிட்டும் உங்களையும், என்னையும் விலக்குகின்றேன். அன்றியும் நன்மைகளையும், நேர்வழிகளையும், பெறுவதற்காக பாவச்செயல்களைவிட்டும் நீங்கள் விலகிக்கொள்ளும்படி உங்களுக்கு எச்சரிக்கை செய்கின்றேன்.

மானிடர்காள்! உங்களின் இரக்ஷகனிடத்திலிருந்து உபந்நியாசமும், ஹிருதயங்களில் உதிப்பவைகளுக்கு பரிகாரமும்உங்களுக்கு வந்திருக்கின்றன. அதாவது திருமறையில் சொல்லிய பிரகாரம் உங்களின் நபியை மிஅராஜுக்கு அழைத்துச்சென்றதாகும். நபிகணபகம்(ஸல்) அவர்களோடு இந்தமிஅராஜில் எவரேனும் கூட்டாக இருக்கவில்லை. அந்நபியவர்கட்கு விரோதமாயும், அவர்களது நேரான வழியை விட்டு அப்புறப்பட்டவனாயு மிருப்பவனுக்கு தீங்குண்டாவதாக. நபி(ஸல்) அவர்களை மிஅராஜுக்கு கொண்டுசெல்லப்பட்ட இரவில் தங்கள் இரக்ஷகனின் அரும் பெருந்திருவஷ்டாந்தரங்களை எமது பிரான் கண்ணுற் கண்ணுற்றார்கள். அன்றியும் நபிபெருமான்(ஸல்) அவர்களை எல்லா மானிடர்களைப்பார்க்கினும் மகா மேன்மையாக்கிவைத்தான்.

பரிபூரண அறிவையுடைய வல்ல அரசனது ஆக்ஞைப்படி காரியாம்சங்களைஎழுதும் அமரர்களின் எழுதுகோலின் சப்தங்கள் காதில்கேட்குமிடம்வரை சென்றார்கள். மஅவா

என்னும் சுவனத்தட்புகுந்து முன்தஹா வென்னும் விரு க்ஷம்வரைசென்ருர்கள். அங்ஙனம்நெருங்கிச்சென்றதானது அல்லா(ஹ்)வுக்கு மிகசமீபமாயிருந்தது. (தன்னளவில் முடி கவைத்து சமீபத்திலாக்கிய இறைவனே மகாதூய்மையுடை யவன்) நமது நபிகள்நாயகம் (ஸல்) அவர்களின் உம்மத்துக ளின்மீது அந்த இரவில் ஐம்பது நேரத்தொழுகையைக் கட மையாக்கி, அத்தொழுகையை தன் மதஊழியத்தின் அஸ்தி வாரமாக்கினன். அதைக்கேட்டமாத்திரம் எமதுபெருமான வர்கள் இரக்ஷகனிடத்தில் தங்கள் உம்மத்துகளுக்கு தொழு கைகளை குறைக்கும்பொருட்டு, ஐம்பதுவேளையை ஐந்து வேளைத் தொழுகையாக்குமளவும் [மூசா (அலை) இருக்கு மிடத்திற்கு] திரும்பிவருவதும் செல்வதுமாக இருந்தார் கள்.

அல்லா(ஹ்)வினடிமைகளே! அல்லா(ஹ்)வை பயந்து தக்வாச் செய்துகொள்ளுங்கள். உங்களுக்கு ஐம்பது நேரத்தொழுகையை ஏற்படுத்திய கஷ்டத்தை நமது நபி பெருமான் (ஸல்) அவர்கள் நிவர்த்தி செய்ததை கவனித்து இவ்வைந்து நேரத்தொழுகையை கவனத்தோடு காப்பாற்றிக் கொள்ளுங்கள். அப்பொழுது இறைவன் உங்களின்மீது கருணைபுரிவான். நீங்கள் நற்காரியங்களைச் செய்துகொள் ளுங்கள். நிச்சயமாய் அமல்களில் மிகநன்மை வாய்ந்ததும் மேன்மையானதும் தொழுகையே. அத்தொழுகையை கடைப்பிடித் தொழுகுங்காலையில் அதற்குயிரான மனே அச்சத்தை உறுதியாய்ப் பிடித்துக்கொள்ளுங்கள். ஏனெ னில் உள்ளச்சமின்றி ஹிருதயங்கள் வேறுமுகமாயிருப்பவ னது தொழுகையை அல்லா(ஹுதஆலா) ஏற்றுக்கொள்ள

மாட்டான். அல்லா(ஹ ூதஆலா) தன் திருமறையில் எவர்களைப்பற்றி அச்சமுறுத்தி யறிவித்திருக்கின்றுனே, அன்னவர்களுடன் சம்மந்தப்படாமலிருப்பதைப்பற்றி உங்கள் மீதும் என்மீதும் பயப்படுகின்றேன். திருமறையின் அவ்வச்சமுறுத்துதலினுல் எவரது மனம் ஜீவசக்தியடைந்திருக்கின்றதோ அவரே உபந்நியாசபலனைப்பெறுவார். அதாவது அவர்க(சென்றுபோன சாலிஹீன்களாகிய தவத்தினர்க)ளுக்குப் பின் ஒரு கூட்டத்தினர் வருவார்கள். அன்னவர்கள் சோம்பேறித்தனமாயும் கவனக்குறைவாயும், தொழுகையை அறவே விட்டுவிடுவார்கள்; அன்றியும் தங்களுக்கிவ்ஷடப்பட்டவைகளை துயர்ந்து நடப்பார்கள். அன்னவர்கள் தாம் கையென்னும் நரகத்தைச் சந்திப்பவர்கள்.

நம்து நபிபெருமான்(ஸல்)அவர்கள் திருவுளம் பற்றியிருக்கின்றுர்கள், அவையாவன:- தொழுகையானது மதத்தின் தூணுகும்; எவனெருவன் தொழுகையை நியமமாகச் செய்துவருவானுகில், அவன் மதத்தை நிலைநிறுத்தியவனுவான். எவனெருவன் அதை விடுவானுகில் அவன் மதத்தை விட்டவனுவான். (ஹதீஸ்) மேலும் ஒருவனின் வாயலுக்கருகில் ஒரு நதியோட, ஒவ்வொரு தினமும் ஐந்துநேரம் அந்நதியில் ஸ்நானஞ்செய்வானுகில் அவனின் சரீரத்தில் அசுத்தங்களிருக்குமாவென அறிவியுங்களென நபிபிரான் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அப்பொழுது சஹாபாக்களாகிய தோழர்கள் "ஸ்நானஞ் செய்தவனின் சரீரத்தில் யாதொரு அசுத்தங்களுமிருக்காது" எனவிடைபகர்ந்தார்கள். அப்பொழுது நபிபெருமான் (ஸல்) அவர்கள் "அந்நதியாகிறது ஐந்து வேளைத்தொழுகையாகும்; அவைகளைக்

கொண்டு அல்லா(ஹ்) பாவங்களை அழித்துவிடுகிறான்"
என அருளிச்செய்தார்கள். (ஹதீஸ்)

"மேன்மை தங்கிய கஅபதுல்லாவினின்றும் வளம் பொருந்திய பைதுல்முகத்தஸ் வரை நமது (ஆண்டவனது) அற்புதங்களை காட்டுவதற்காக தன்னடிமையாகிய (முஹம்மது ஸல்) அவர்களைக்கொண்டுச் சென்ற அல்லா(ஹ்) மிக தூய்மையுடையவன் நிச்சயமாய் அவன் யாவற்றையும் கேட்பவனும் [நபிபெருமான் (ஸல்) அவர்களின் சொல் செயல்களை] அறிபவனுமாயிருக்கின்றான்." (அல்—குர் ஆன், 17 : 1.)

---

## ஷஃபான் மாதம்,

# முதலாம் குத்பா.

நமது நேத்திரங்களால் மட்டிடவும், எண்ணங்களால் கணிக்கவும், எவ்வித ஊசாட்டங்களாலும் மதித்தற்கரிய சக்தியுடையவனும்; அவனின் தன்மையையறிய முயன்ற அறிஞர்கள் திகைத்து, அவனின் துவக்கத்தை யோசிக்குங் கால், எவ்விதமிருந்தான், எப்பொழுதிருந்தான், எவ்விட மிருந்தானென்பதைச் சொல்லமுடியாத் தன்மையுடைய வனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், உண்டான வஸ்துக்களை உண்டாகுமுன் அறிந்தவனெனவும், நமது நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் ஆண்டவனின் அடிமையும் அவனின் திருத்தூதரும், தீர்க்கதரிசிகளென்னும் நபிமார்களையும், ரசூல்மார்களையும் சிறப்பிக்க வந்தவர்களும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்களின் மீதும், அன்னாரின் தோழர்கள் கிளைஞர்களின் மீதும், கிருபாகடாக்ஷமும், ஈடேற்றமும் அளவிறந்த சாந்தியும் சதா சொரிவானாக!

அல்லா(ஹ்)வினடிமைகளே! அடக்கியாளும் சக்தி வாய்ந்த இறைவனையஞ்சிஒழுகும்படி உங்களுக்கும்எனக்கும்

முதலாவதாக நற்போதனை செய்கின்றேன். உண்மையில் இறைவனையஞ்சி நடப்பதானது உச்சஸ்தானத்தையடைவதற்கும் அவனது கருணையைப் பெறுவதற்கும் காரணமாகும்.

சகோதரர்காள்! இறப்பென்னும் வழியில் நாமனைவோரும் நடந்தே தீரவேண்டும். அடிமை ஆண்டான் என்ற வித்தியாசமின்றி கற்றோர் முதல் கல்லாதார் ஈறாக எல்லோரையும் பிரதிதினமும் அவ்வழியாகிய மரணம் அழைக்கின்றது. வானம் பூமியிலுள்ள யாவரும் இவ்வழியில் நடப்பதில் வித்தியாசமில்லை. வானங்கள், அதில் வாசஞ்செய்பவர்களான வானவர்களை விட்டொழிந்ததாயும், பூமிகள், அதிலுண்டானவைகளை வீழ்த்தியதாயும், படைக்கப்பட்டவைகளடங்கலும் மண்ணறையில் புதைத்தவைகளாயும், இறைவன் காணும்படியான நாள் சமீபத்தில் வரும். அந்நேரம் யாவராலும் வணங்கப்பட்ட ஒருவனை அல்லா(ஹ்)வைத்தவிர வேறு எவரும் உண்டாயிருக்கமாட்டார்கள். அப்பொழுது வம்பர்களையடக்கியாளும் அரசனும், இரக்ஷகனுமாகிய அல்லா(ஹ்), "இன்றைபதினம் இராஜாங்கம் யாருக்குடையது?" என உரத்துச் சொல்லி பதிலுரைக்க யாருமின்றி, "தனித்த ஒருவனாகிய அல்லா(ஹ்)வுக்கன்றோ" என தானே பதிலுரைத்துக்கொள்வான். பின்பு இஸ்ராயீலென்னும் மலக்காகிய தேவதூதரிடம், வானங்களில் சப்தமிடும்படிக்கும் அவைகளை கிழிக்கும்படிக்கும், அவைகளிலுள்ள நக்ஷத்திரங்களை வீழ்த்தும்படிக்கும், முடிவாக அவைகளடங்கலையும் ஒடித்தெறியும்படிக்கும் உத்திரவிடுவான். அறிவுடையோர்களே! கடினமான

நோவினைச்செய்யும்படியான உங்களின் இரக்ஷ்ணை துசெயலை சற்று சிந்தித்து உங்கள் அறிவைக்கொண்டு ஆழ்ந்துயோசித்துப்பாருங்கள். கபர்களாகிய மண்ணறைகள் அந்நேரம் இழுத்துக்கட்டப்பட்ட கூடாரத்திற்கு ஒப்பாய்விடும். அதனுள் வல்லரசர்கள், சிற்றரசர்கள், தனவந்தர்கள், ஏழைகள் ஆகிய எல்லோரும் சமமாகவே தங்கியிருப்பார்கள்.

இவர்களில் முன்னோர் பின்னோர்களடங்கலையும் சேகரஞ்செய்து அல்லாஹுதஆலா கேள்வி கணக்குக்கேட்க நாடுவானாகில் அப்பொழுதுதான் கபர்களாகிய மண்ணறைகள் பிளக்கும். சிறியோர் பெரியோரடங்கலும் ஆண்டவனின் சமுகத்தில் எழுந்து நிற்பார்கள். அவ்விதம் நிற்கையில் இறைவன் உண்மையை அன்னவர்களின்பால் எடுத்துக்காட்டுவான். அவர்களினின்றும் சிலருடைய முகங்கள் வெண்மையானவைகளாயும் பிரகாசமுடையவைகளாயும், சிலமுகங்கள் கறுத்தவைகளாயும் காண்பீர்கள். அந்நாளில் சிறியோர்கள் பயத்தினால் நரைத்திருக்கவும், அடிமை ஆண்டானுடன் சமமாயிருக்கவும் பார்ப்பீர்கள். அந்நாளில்தான் ஹையுல் கையூமாகிய அல்லா(ஹ்) வெளித்தோற்றரவாகி நீதமுடையோனை அநீதமுடையோனைவிட்டும் ஈடேற்றம் பெறச்செய்வான்.

"ரஜபு மாதமாகிறது அல்லா(ஹ்)வின் மாதமாகும்: ஆண்டவன்; படைப்புகளடங்கலின்மீதும் தான் மேன்மையாயிருப்பதுபோல் மற்ற மாதங்களடங்கலின்மீதும் இம் மாதத்தை மேன்மையாக்கினான் ஷஅபான் மாதம் என்னுடைய மாதமாகும், நபிமார்களடங்கலின்மீதும் நான் மேன்மையாய் இருப்பதுபோல், மற்ற மாதங்களைவிட இம்

மாதத்தை மேன்மையாக்கினன். ரம்ஸான் என் உம்மத்து களின் மாதமாகும். மற்ற உம்மத்துகளடங்கலின்மீதும் என் உம்மத்துகள் மேன்மையாயிருப்பதுபோல், இம் மாதத்தை மற்ற மாதங்களின்மீது மேன்மையாக்கினன்'' எனவும், நிச்சயமாய் அல்லா(ஹ்) ஷஅபான் மாதம் நடு இரவில் தன் கருணையைச் சொரிகின்றான், தன் அடிமை களின் பாபங்களைப் பொறுக்கின்றான, அல்லா(ஹ்)வுக்கு இணை வைத்தவனையும், குபாடகுணம் படைத்தவனையுந் தவிர, (இன்னுமொரு றிவாயத்தில்) கொலை செய்கிறவனை யும், குபாடமுள்ளவனையுந்தவிர'' எனவும் நபிகள்பெரு மான் (ஸல்) அவர்கள் அருளிச்செய்தார்கள். (ஹதீஸ்.)

"ஹாமீம் (நன்மை தீமையை) விவரிக்கும்படியான வேதத்தின்மீது ஆணையாக பரகத்துச்செய்யப்பட்ட இர வில் (ஷஅபான் மாதம் 15-ம் இரவாகிய பராஅத்திரவில் லவ்ஹுல்மஹ்பூலிலிருந்து முந்திய வானத்தளவில்) நிச் சயமாய் அவ்வேதத்தை நாமிறக்கினோம். மெய்யாகவே (அவ்வேதத்தைக்கொண்டு மானிடர்களை) நாம் அச்ச முறுத்துகின்றோம். அந்த இரவில் நமது பூரண அறிவின் படி (ஒரு வருஷமுதல் மறு வருஷம்வரை நடைபெறவிருக் கும்) ஒவ்வொரு காரியங்களையும் பிரிக்கப்படும். நிச்சய மாய் நமது கருணையால் தீர்க்கத்தரிசிகளையனுப்பினோம். திட்டமாய் அல்லா(ஹ்) கேட்பவனும், அறிபவனுமாயிருக் கின்றான்.'' (அல்—குர்ஆன், 44:1-6.)

---

## ஷஃபான் மாதம்,

# இரண்டாம் குத்பா.

தயாளம், அன்பு, உபகாரம், கொடை, விசுவாசம் ஆகிய சற்குணங்களுக்குரிய வல்ல அரசனும், மனு ஜின்களாகிய இருவகுப்பினரைச் சிருஷ்டித்து, இவர்களுள் தன்னை ஞாபகஞ்செய்பவர்களைத் தானும் ஞாபகஞ்செய்பவனும், தன்னிடம் நன்றி பாராட்டுபவர்கள்பால் தானும் நன்றிபாராட்டுகின்றவனும், தன் மதத்திற்குபகாரஞ் செய்பவர்கட்குத் தானுமுபகாரஞ்செய்பவனும், தன்னிடத்திற் பாவம்பொறுக்கத் தேடுபவர்கட்குப் பாவம் பொறுப்பவனும், ஷஃபான் மாதமாகிய இம்மாதத்தில் நன்மைகளை நம்மீது சொரிபவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை, அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், உண்டானவஸ்துகளை உண்டாக்குமுன் அறிந்தவனெனவும், நமது நாயகம் முஹம்மது(ஸல்) அவர்கள் ஆண்டவனது அடிமையும், அவனின் திருத்தூதரும், தீர்க்கதரிசிகளென்னும் நபிமார்களையும், ரசூல்மார்களையும் சிறப்பிக்க வந்தவர்களும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்களின்மீதும், அன்னாரின் தோழர்கள் கிளைஞர்களின்மீதும்,

கிருபாகடாக்ஷமும், ஈடேற்றமும், அளவிறந்த சாந்தியும் சதா சொரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! அடக்கியாளும் சக்தி வாய்ந்த இறைவனையஞ்சி ஒழுகும்படி உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக நற்போதனை செய்கின்றேன். உண்மையில் இறைவனையஞ்சி நடப்பதானது உச்சஸ்தானத்தை யடைவதற்கும் அவனது கருணையைப் பெறுவதற்கும் காரணமாகும்.

சகோதரர்காள்! நிச்சயமாய் மவுத்து நமக்கதிக சமீபமாயிருக்கிறதென்பதையும், நம்மை சிருஷ்டித்த இரக்ஷகன் நம்மை நோக்கிக்கொண்டிருக்கிறானென்பதையும், நீங்கள் நன்கறிவீர்கள்; அங்ஙனமிருக்க நற்காரியங்களைப் பிந்திச் செய்வோமென தாமதஞ்செய்வதேன்? உங்களின் வயதுகள் குறைந்து நீங்கள் மரணத்தை எதிர்பார்த்தவர்களாயிருந்தும் கவனக்குறைவினால் விளையாடிக்கொண்டிருக்கின்றீர்கள். காதினால் எத்துணையோ உபந்யாசங்களைக்கேட்டும் வீண் வேலைகளை நீக்குவதளவில் உங்கள் கவனத்தைச் செலுத்துவதில்லை. சுற்றத்தார் குடும்பத்தார்களினின்றும் உங்களுக்கு முன்சென்றவர்களின் நிலைமைகளை நீங்கள் சற்று சிந்தித்துப்பார்க்கவேண்டாமா? உலககாரியங்கள், மனிதர்களின் நிலைமைகள், காலத்தின்போக்குகள் மாறுதலடைவதை நீங்கள் கவனித்து யோசிக்கவேண்டாமா? உங்களுக்கு முன்னுள்ளவர்கள் தாங்கள் தேடிய பொருள்கள்மீதும் சந்ததிகள்மீதும் தமது ஞாபகத்தைச்செலுத்தியது மெய்யாகவே அவர்களை ஏமாற்றிவிட்டது! எவ்வளவோ அபாரவேலைகளைச் செய்து முடிக்கலாமென்று எண்ணியிருந்தனர். அவ்

வேலைகள் பூர்த்தியடையுமுன் மரணத்திற்காளாகி மவுத்தென்னுங்குடிப்பையருந்தினர். அதேபோல் இப்புவியிலுள்ளோரனைவரும் மரணித்தேதீரவேண்டும் அறிந்துகொள்ளுங்கள்! நிச்சயமாய் ஷஅபான் மாதமாகிறது மேன்மைவாய்ந்த நாட்களுடனும், சன்மானம் நிறைந்த நேரங்களுடனும், உங்கள்மீது நிழலிட்டிருக்கின்றது. இம்மாதத்தில் மூன்றுநாள் நோன்பு நோற்றுவது இம்மாதத்தை மேன்மைப்படுத்துங்கள். தவங்களை அதிகமாய்ச்செய்து சிறப்பியுங்கள்; ஏழை எளியோர்கள், அனாதைகள், வஸ்திரமற்ற வறிஞர்கள் கேட்க வெட்கமடைந்து நாணும் உறவினர்கள், ஆகிய இன்னவர்களுக்கு இச்சிறந்த மாதத்தில் உங்கள் திரவியத்தால் மனமிரங்கிச் சகாயஞ்செய்யுங்கள். அல்லா(ஹ்)வினிடத்தில் உங்கள் பாவங்களுக்காக தவ்பாச் செய்யுங்கள். அப்படிச் செய்வீர்களாகில் உண்மையாக அல்லா(ஹ்) உங்கள் பாவங்களைப் பொறுத்துவிடுவான்; அதிசீக்கிரம் நம்மை ஏமாற்றிச் செல்லக்கூடிய, அழிந்துபோகக்கூடிய, அற்ப வாழ்வாகிய இவ்வுலக ஆசையால் ஏமாந்து விடாதீர்கள்; உயிருள்ளபொழுதே உங்களுக்காக நற்றவங்களை முற்படுத்திக்கொள்ளுங்கள்! சபிக்கப்பட்ட ஷைத்தானுலேற்படும் ஊசாடுதல்களுக்கு தலைசாய்த்து நடக்காதீர்கள். அறிந்து கொள்ளுங்கள்! இரவும் பகலும், செல்லும் அதிவேகத்தினால் எவ்வளவு தூரமானவைகளையும் சமீபமாக்கிவிடும். நீண்ட வயதுவரை யிருப்போமெனக் கருதவேண்டாம். உங்களெண்ணங்களை அடைவீர்களென நினைக்கவேண்டாம். மவுத்து உங்களின் உயிர் நரம்பைவிட உங்களுக்கு அதிக சமீபமாயிருக்கின்றது. ஜஹன்னமென்னும் நரகத்தின்

வேதனையை இறைவன் ஒவ்வொருநாளும் அதிகமாக்கிக் கொண்டே செல்லுகின்றான். பாவஞ்செய்தவர்கள் இவ்வுலகத்திலேயே தவ்பாச் செய்துகொள்ள வில்லையேல் ஆண்டவன் திருவடியை சந்திக்கும்பொழுது இவர்கள்மீது இறைவன் கோபமாகவே சந்திக்கநேரிடும். சகோதரர்காள்! உங்களுக்குமுன் சென்றவர்களில் அனேகர் இவ்வுலகை சதமாக நினைத்து உங்கள் செய்கைகளைப்போலவே செய்தார்கள்; உங்களைப்பார்க்கினும் சற்று அதிகமாகவே பிரியம் வைத்தார்கள்; நீண்டகாலமிருந்து சுகம்பெறலாமெனக் கருதினார்கள்; தங்களுக்குவேண்டிய பலசாதனங்களைச் சேகரித்தார்கள், சேகரஞ் செய்யவுமிருந்தார்கள்; அவர்களனைவருமெங்கே? முடிவாக மரண மடைந்தார்களன்றோ? அவர்கள் சம்பாதித்ததிலிருந்து கபனைத்தவிர யாதொன்றும் அவர்கட்குக் கிட்டவில்லையே! இவ்வுண்மையை கவனித்து உணர்ச்சிபெறுவீர்களாக.

"எவனொருவன் ஷஅபான் மாதத்தில் மூன்று நோன்பு நோற்பானாகில் கியாம நாளில் சுவனலோகத்தின் ஒட்டகைகளிலொன்றின்மீது அல்லா(ஹ்) அவனை ஆரோகணிக்கச் செய்வான். அவன் சுவனம்புகுதுமளவும் அவ்வொட்டகத்தின் மீதே நீங்காமலிருப்பான்" என நபிகள்பிரான் (ஸல்) அவர்கள் அருளிச்செய்துள்ளார்கள். (ஹதீஸ்)

"சூரென்னுங் குழலில்ஒரே ஊதுதலாக ஊதப்பட்டு, வானம் பூமிகளை (ஆண்டவன் சக்திபால்) உயர்த்தப்பட்டு, அவ்விரண்டையும் (ஒன்றோடொன்று அடித்து) உடைத்து சமமாக ஆக்கப்படுமாகில் அந்நேரந்தான் இறுதிநாளுண்டாகும்." (அல்—குர்ஆன், 69 : 13, 14.)

# ஷஃபான் மாதம்,

# மூன்றும் குத்பா.

எவருடைய ஆலோசனையும் உதவியுமின்றி மானிடரை சிருஷ்டித்தவனும், அன்னவர்களை தாய்வயிற்றினின்றும் ஒன்றுமறியாத நிலைமையில் வெளிப்படுத்தி, கேள்வி, பார்வை, அறிவு, முதலியவைகளாலுபசாரஞ்செய்து, தன்னதிகாரத்தின்கீழ் அடக்கிவைத்து, அவர்களின் ஐபுகளை மறைத்துவைப்பதுடன் பாவம்பொறுக்கத்தேடி தன்னளவில்மீளும் தருணத்தில் பாவங்களைப்பொறுப்பவனும், உலகத்திலுள்ள யாவற்றாலும் துதிக்கப்படுபவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத்தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன்; இணைதுணையற்றவன், உண்டான வஸ்துகள் உண்டாகுமுன் அறிந்தவனெனவும், நமது நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் ஆண்டவனது அடிமையும், அவனின் திருத்தூதரும், தீர்க்கதரிசிகளென்னும் நபிமார்களையும், ரசூல்மார்களையும் சிறப்பிக்கவந்தவர்களும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்களின் மீதும், அன்னாரின் தோழர்கள் கிளைஞர்களின்மீதும், கிருபாகடாக்ஷமும், ஈடேற்றமும், அளவிறந்த சாந்தியும் சதா சொரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! அடக்கியாளும் சக்தி வாய்ந்த இறைவனையஞ்சி ஒழுகும்படி உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக நற்போதனை செய்கின்றேன். உண்மையில் இறைவனையஞ்சி நடப்பதானது உச்சஸ்தானத்தை படைவதற்கும் அவனது கருணையைப் பெறுவதற்கும் காரணமாகும்

அல்லா(ஹ்)வினடிமைகாள்! உங்களின் செல்வப் புத்திரர்கள், தாய் தந்தைகள், சகோதர சகோதரிகளெங்கே? நம்ரூது ஷாத்தாது பிர்அவ்ன் ஆகிய வம்பர்களெங்கே? உங்களுக்குமுன் இவ்வுலகில் ஆட்சிபுரிந்த அரசர்களெங்கே? உலகமுழுவதிற்கும் ஒரே அரசராயிருந்த சுலைமான் (அலை) அவர்களின் இராஜாங்கமெங்கே? பொதுக்காரியங்களிலீடுபட்ட பெருந்தன்மை படைத்தோர்களெங்கே? ஆக எல்லோரும் தங்களுக்காக முற்படுத்திய நன்மை தீமையை மாத்திரம் சுமந்து சென்றுவிட்டனரன்றோ? அடக்கியாளும் வல்ல அரசனாகிய அல்லா(ஹ்) அன்னவர்களின் கர்வத்தையடக்கி அழித்துவிட்டானன்றோ? அங்ஙனம் அவர்களெல்லாம் அறிந்து மண்ணுக்கிரையானதைச் செவியுற்றும் நீங்கள் இவ்விஷயத்தில் ஆண்டவனளவில் தேவையற்றவர்களைப்போலிருக்கின்றீர்கள்.

நித்திரையில்தான் மறதியென்றாலோ நீங்கள் விழித்திருத்தலும் நித்திரைக்குச் சமமாகவேயிருக்கின்றது. மறதியும் கவனக்குறைவும் உங்களுக்குண்டாயிருக்கவில்லையேல் இவ்விஷயங்களை மெய்யாகவே நீங்கள் தெளிவாயறிந்து கொள்வீர்கள். தீமையான கருமங்களை சம்பாதிப்பதில் உங்கள் ஆயுள் முழுவதும் சென்றுவிட்டது. ஆனால் நன்மைகளில் யாதொன்றையும் சம்பாதிக்க நீங்கள் பாடுபடுவதாய்த்

தோன்றவில்லை. அறிவுள்ளோரடங்கலும் மேலான பதவி யையடைவதற்கு அரும்பாடுபடுகின்றார்கள். ஆனால் நீங்க ளோ யாதொன்றும் தேவையற்றவர்களைப்போல் நன்மை யைச் சம்பாதிக்காமல் வீண்காலங்கழிக்கின்றீர்கள். அறி ஞர்களடங்கலும் அல்லா(ஹ்)வினிடத்தில் ஈடேற்றத்தையும் நன்மதிப்பையும் பகாவென்னும் நியமமாயிருத்தலையும், லாப மாய்க்கருதுகின்றீர்கள். சகோதரர்காள்! காலங்கழிந்து உங் கள் வபதையழிப்பது இன்னும் உங்களை நித்திரையைவிட் டும் தட்டியெழுப்பவில்லையோ? உறவினர், சுற்றத்தார், அயல் வீட்டார்களாகிய இவர்கள் மரணமடைவது உங்களுக்கு இன்னும் எச்சரிக்கை செய்யவில்லைபோலும்! இவர்களடங் கலும் உங்களைப்பார்க்கிலும் உலகத்தளவில் அதிக பேராவல் வைத்திருந்தார்கள். பரிதாபம்! கடைசியாக அவர்கட்கு கபனைத்தவிர வேறுயாதொன்றும் கிட்டவில்லை. உலகத்தின் சுமைகளை இலேசாக்கினவர்கள் ஜெயமடைவார்கள். உலகை வெறுத்தவர்களும், அல்லா(ஹ்)வுக்காக தவஞ்செய்தவர்க ளும் தங்களின் மேலான ஸ்தலத்திற்குச்சேருவார்கள். நற் காரியங்களைச் செய்தவர்கட்கு நல்ல சன்மானமும் வெகுமதி யும் கிடைக்கும். "நன்மை செய்தவர்களின் சன்மானம் நன் மையைத்தவிரவேறில்லை" (அல்குர்ஆன்.) அல்லா(ஹ்)வினடி மைகாள்! அல்லா(ஹ்)வைபயப்படும்படிமீண்டுமொருமுறை உங்களுக்கு நற்போதனை செய்கின்றேன். ஏனெனில் அல்லா (ஹ்)வை பயப்படுவதுகொண்டு சுவனம்புகுத இடமுண்டு. மேலும் பாவங்களை விட்டகலும்படி உங்களை வற்புறுத்து கின்றேன். ஏனெனில் பாவங்களின் காரணத்தால் நரகம் புகுத நேரிடும். ஏ! மானிடனே! நல்லோரடங்கலும் இரவு

பகல் விழித்து தவஞ்செய்கின்றார்கள்; நீ இவ்வுலகமென்னும் காட்டில் பரிதவிக்கின்றாய். சிறு குழந்தைகளை நரைக்கச்செய்விக்கும் நாளாகிய கியாமநாளில், காலுங்கொன்றுமில்லாதவனையும், நிர்வாணியாயும், ஆண்டவன் சந்நிதானத்தில் நீ முன்னைக்குவதைத்தவிர வேறு யாதொன்றும் இவ்வுகில உனக்கு தரிபட்டிருக்கவில்லை யென்பதை நிச்சயமாயறிந்துகொள்

"ஒரு ஷஅபான் மாதத்திலிருந்து மறு. ஷஅபான் மாதம்வரையுள்ள சகலகாரியங்களையும் எழுதப்படுகின்றது; ஒருவன் விவாகஞ்செய்வான் அவனுக்கு குழந்தைகள் பிறக்குமென்பதுள்பட; ஆனால் அவனுடைய பெயர் இறந்தவர்களுள் எழுதப்பட்டதாயிருக்கும்'' எனநபிபெருமான்(ஸல்) திருவுளமானார்கள் "மேலும் எவனொருவன் பெருநாளிரவிலும், ஷஅபான் பதினைந்தாமிரவிலும் வணங்குவானாகில் ஹிருதயங்களிறந்துவிடும் நாளில் அவனது ஹிருதயம் இறக்கமாட்டாதெனவும் நபிகள்பெருமான் (ஸல்) அருளிச்செய்தார்கள்.'' (ஹதீஸ்.)

"நிச்சயமாய் நம்மை சந்திக்கவேண்டுமென்பதை ஆதரவுவைக்காமல் இந்த தாழ்ந்த உலகத்தைக்கொண்டு பொருந்தி அதைக்கொண்டே சமாதானமடைந்தவர்களும், மேலும் நம்முடைய திருஷ்டாந்தரங்களைவிட்டும் கவனக்குறைவாயிருந்தவர்களும், இவர்கள் சம்பாதித்ததன் காரணமாக இவர்களுக்கே வாசஸ்தலம் நரகமாகும்.''

(அல்—குர்ஆன், 10:7, 8.)

---

# ஷஃபான் மாதம்,

# நான்காம் குத்பா.

இவ்வகன்ற கோளத்தையும், அதிலுண்டானவைகளை டங்கலையும், யாதொரு முன்மாதிரியின்றி சிருஷ்டித்தவ னும், படைக்கப்பட்ட வஸ்துக்கள் யாவும் வணங்கப்படத் தகுதியற்றதாயிருக்க, அவனே அதற்குத் தகுதியானவனுயி ருப்பவனும், தன்பூரண வர்ணனைகளைக்கொண்டு தனக்கு நிகரில்லாத்தூய்மையானவனும், நியமமாகிய சக்தியும், அழி வில்லாத பெருமையும், முடிவில்லாத தரிபாடும் உடைய வனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியன வாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்ட வனில்லை; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், உண் டானவஸ்துக்களை உண்டாகுமுன் அறிந்தவனெனவும், நமது நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் ஆண்டவனின் அடிமையும் அவனின் திருத்தூதரும், தீர்க்கதரிசிகளென் னும் நபிமார்களையும், ரசூல்மார்களையும் சிறப்பிக்க வந்தவர் களும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அன்னவர்களின்மீதும், அன்னாரின் தோழர்கள் கிளைஞர் களின்மீதும், கிருபாகடாக்ஷமும், ஈடேற்றமும் அளவிறந்த சாந்தியும் சதா சொரிவானாக !

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! அடக்கியாளும் சக்தி வாய்ந்த இறைவனையஞ்சி ஒழுகும்படி உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக நற்போதனை செய்கின்றேன். உண்மையில் இறைவனையஞ்சி நடப்பதானது உச்சஸ்தானத்தையடைவதற்கும் அவனது கருணையைப் பெறுவதற்கும் காரணமாகும்.

சகோதரர்காள்! பொய், புறம், நம்பிக்கைத்துரோகம், பிறர்தூஷணை முதலிய துர்குணங்கள் உங்களிருதயங்களைக்கவர்ந்துகொண்டிருக்கையில், இவ்வற்பவுலகில் நீங்கள் எவ்வித எண்ணங்களை நிறைவேற்றிக்கொள்ள ஆவல்கொள்ளுகின்றீர்கள்? எவ்வித வாக்குறுதி நிறைவேறுமெனக்கருதுகின்றீர்கள்? ஒன்றும் நிறைவேறாது. ஒவ்வொருவனும் தான் எவ்விதமாய் மனிதர்களுடன் புழங்குகின்றானோ அவ்விதமே அவனுடனும் புழங்கப்படும். இம்மாய உலகின் பித்துக்களை எவ்விதத்தாலும் மறக்கமுடியுமா? முடியாது. தவிர முஸீபத்தினால் நீங்கள் பிடிக்கப்பட்டிருப்பதற்குக் காரணம் உங்கள் கரங்களால் சம்பாதித்த பாவங்களன்றோ? கியாமநாளின் அடையாளங்களை நீங்கள் கண்கொண்டு பார்த்திருந்தும், இன்னமும் அதன் கஷ்டங்கள் நடைபெறுங்காலம் வெகுதூரமென நினைக்கின்றீர்கள். இறுதி நாளின் காரியங்கள் மறைவாயும் பஹிரங்கமாயும் வெளியாகிக்கொண்டிருந்தும் உங்கள் இருதயங்களில் சற்றும் அதைப்பற்றிய சிந்தனையைக் காணோம். அறிந்துகொள்வீர்களாக! நிச்சயமாய் நீங்கள் பத்தாவது நூற்றாண்டைக் கடந்துவிட்டீர்கள். மெய்யாகவே உங்களுக்கு முன்னுள்ளவர்கள் இக்காலத்தை அதிகமாய்ப் பயந்துகொண்டு

இருந்தார்கள். இறுதிநாளின் அடையாளங்களில் சில வற்றை ஈண்டு எடுத்துரைப்போம். இக்காலத்தில், நமது சன்மார்க்கமாகிய வேதத்தினல் ஹராமாக்கப் பட்ட அநேக வஸ்துக்கள் ஹலாலேனக்கருதப்படுகின்றன. பாவங்கள் பஹிரங்கமாய்ச் செய்யப்படுகின்றன. கரையிலுங் கடலிலுஞ் சாதாரணமாய் அக்கிரமங்கள் நடைபெறுகின் றன. இக்காலத்தில் நீதம் அநீதமாயும், மார்க்கத்தில் ஏவப் பட்ட கருமங்கள் அருவருக்கப்பட்டதாயும் காணப்படுகின் றன. தொழுகையை கோழி கொத்துவதற்கொப்பாய் முடித் தும், ஹஜ்ஜை வியாபாரத்திற்கொப்பாய்ச் செய்தும், தனம் படைத்தால் பெருமை பாராட்டியும், வறுமை யுண்டானல் குப்ரையும் பொருட்படுத்தாது துணிந்துபேசியும் நடக்குங் காலமாகிவிட்டது. ஜாக்கிரதை! இவ்விதம் நடைபெறு வதின் காரணத்தால் பூமியின் மேல்பாகத்தைப்பார்க்கினும் அதனுள் பாகம் உங்களுக்கு அதிக நன்மையானதாகும். எத்தனையோ செய்யவேண்டிய உண்மையான கருமங்களைச் செய்யாமலிருக்கின்றீர்கள். ஆனல் நாளதுவரை அதை நிவர்த்திசெய்யத் தேடினீர்களில்லை. எத்தனையோ தொழு கைகளைப் பழுதாக்கிவிட்டீர்கள். இதுவரை அவைகளை நிவர்த்திசெய்யும் வழியை தேடினீர்களில்லை. உங்களிடத் தில் ரக்ஷிப்பைத்தேடிய எத்தனையோ ஏழைகளை எவ்வித உபகாரத்தைக்கொண்டும் நீங்கள் ரக்ஷித்தீர்களில்லை.

சகோதரர்காள்! இரக்ஷகனின்கிருபைவாய்ந்த இவ்விரு மாதங்களும் உங்களைவிட்டும்சென்றுவிட்டன. அவைகளின் பால் உங்கள்கவனத்தைச்செலுத்தாமல் வீண்காலங்கழித்து விட்டீர்கள். இதோ! உங்களுக்குமுன் அல்லா(ஹ்)வின்

அன்பும் கருணையும் நிறைந்த ரமலான்மாதம் வரப் போகின்றது. சென்றுபோன உங்களின் குறைகளை நிவர்த்தி செய்வதற்கு இதுவே தகுந்ததருணம். அதற்காக வேண்டிய பலசாதனங்களை இப்பொழுதிருந்தே தயார்செய்து கொள்ளுங்கள். உங்களின் பாவங்களைப் பொறுக்கத்தேடி அல்லா(ஹ்)விடத்தில் கண்ணீர் சொரிந்தழுங்கள். இரவும் பகலும் விழித்து உங்களுக்கு வேண்டிய நலங்களைச் செய்து கொள்ளுங்கள். காலத்தைத்தவறவிட்டுப் பரிதாபப் படுவது பயன்தராதென்பதை நீங்கள் உணரவேண்டும்.

ஏ! இரக்ஷகா, பெருமைவாய்ந்த இரண்டு மாதங்களுக்கிடையில் என்னைப்படைத்தாயே! அதனால்எனக்கென்ன பயனிருக்கின்றதென ஷஃபான் மாதம் ஆண்டவனிடத்தில் விண்ணப்பித்துக்கொண்டது. அப்பொழுது திருவேதமாகிய குர்ஆனை உன்னில் ஓதும்படி கட்டளை செய்திருக்கின்றேனென இறைவன் சொல்லியுள்ளானென்று நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் திருவாய்மலர்ந்தருளினார்கள். (மஅமர், ரஸீ-ஹதீஸ்)

"(எனதருமை நபியே!) நீர் சொல்வீராக! "ஏ நம்பிக்கையற்றவர்காள்! நீங்கள் (உங்களிஷ்டப்படி எதையுஞ்) செய்யுங்கள். அல்லா(ஹ்)வும், அவனது திருத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களும், நன்னம்பிக்கை கொண்டவர்களும், (உங்களின் அமல்களை) இனிப்பார்த்துக்கொள்வார்கள். மறைந்தவஸ்துக்களையும், வெளியான வஸ்துக்களையும், அறிபவனாகிய அல்லா(ஹ்) அளவில் (உங்களெல்லோரையும் இனியெழுப்புவதுகொண்டு அவ்வுலகத்திற்கு) மீட்கப்படுவீர்கள். அப்பொழுது நீங்கள் செய்த கருமங்களைத்தொட்டும் உங்களுக்கு அல்லா(ஹ்) கூலி கொடுப்பான்.'' (அல்—குர்ஆன், 9 : 105.)

# றமலான் மாதம்,

# முதலாம் குத்பா.

திருவேதமாகிய குர்ஆன்ஷரீபை இந்த றமலான் மாதத்திலிறக்கிவைத்து இம்மாதத்தின் மேன்மையை யதிகப்படுத்தி நமக்கு நன்மைகளைக் கொடுத்தருளியவனும், நரகலோகத்தை மூடும்படி உத்திரவுசெய்து சுவனலோகத்தை திறந்துவைத்து இம்மாதத்தை ஜொலிக்கும்படி செய்து தன் உபகாரங்களை பூரணமாக்கிபவனும், கருணையையதிகப்படுத்தி பிழைகளைப்பொறுத்து இம்மாதத்தில் தன்னடிமைகளுக்கு உபகாரஞ் செய்பவனும், ஷைத்தான்களையடக்கி விலங்கிட்டு மற்ற மாதங்களைவிட இம்மாதத்தை சிறப்பித்தவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை, அவன் தனித்தவன், இணைதுணையற்றவன் எனவும், நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வினடிமையும் அவனது திருத்தூதரும், திருத்தூதராயவதரித்த யாவருக்கும் தலைவரும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும், அவர்களின் கிளைஞராதி தோழர்கள் இவர்களின்மீதும் நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீதும், அளவிறந்த கிருபாகடாக்ஷமும் ஈடேற்றமும் சாந்தியும் அருள்புரிவானாக!

அல்லா(ஹ்)வினடிமைகளே! முதலாவதாக எல்லாம் வல்ல இரக்ஷகனையஞ்சி நடந்துகொள்ளும்படி உங்களுக்கும் எனக்கும் நற்போதனை செய்கின்றேன். ஏனெனில் இஸ்லாத்தின் தாத்பரியமும், மூலமந்திரமாகிய கலிமாவின் உட்பொருளுமிதுதான்.

மானிடர்காள்! அருமைவாய்ந்த ஷஃபான் மாதம் உங்களைவிட்டும் தவறிவிட்டது. உங்களிலெவரேனும் அம்மாதத்தில் தவஞ்செய்து அம்மாதத்தை மரியாதையுடன் அனுப்பியவர்களுண்டா? இல்லை; இதற்கடுத்து றமலான் மாதம் வந்திருக்கின்றது. உங்களிலெவரேனும் தன்னிருதயத்தைவிட்டு பாவங்களை அப்புறப்படுத்துபவர்களுண்டா? அறிந்துகொள்ளுங்கள்! நிச்சயமாயிது சிறப்பான மாதமாகும். ஆ! இதன் சிறப்பைப்பற்றி யாதுசொல்வேன்! இம்மாதத்தின் மகிமையைச் சற்று கேளுங்கள். இம்மாதத்தில் நாம் செய்யும் அமல்களை அதிசீக்கிரம் ஒப்புக்கொள்ளப்படும். நமது எண்ணங்கள் கோரிக்கைகள் நிறைவேறும். நிலைமைகள் சீர்திருத்தமடையும். பாவங்களைப் பொறுப்பதுகொண்டு நம்மீது அல்லா(ஹ்)வின் கருணையதிகமாகும். இம்மாதத்தை சிறப்பிப்பதற்காக சுவர்க்கத்தை திறந்துவைக்கப்படுகின்றது. நரகத்தை மூடப்படுகின்றது. பாவங்களைப் பொறுக்கப்படுகின்றது. அல்லா(ஹ்)வை பயப்படும் ஒவ்வொருவனுக்கும் அல்லா(ஹ்)வின் கருணையையும் நன்கொடையையுமளிக்கப்படும். இம்மாதமானது திருகுர்ஆனை இறக்கிவைத்து நம்மை பாவங்களைவிட்டும் சுத்தமாக்கி இறைவன் தன்னுபகாரங்களை அதிகப்படுத்திய மாதமாகும். அளவில்லா மேன்மைகளும், கணக்கிடற்கரிய

அழகும், மட்டிடற்கரிய இகபரசுகங்களுடன் அமைந்திருக்கும் மாதமாகுமிது. அல்லா(ஹ்)வுக்காகவே நோன்பு நோற்று, நற்றவங்களைச் சேகரஞ் செய்யக்கருதி அழுது இறைஞ்சி, இம்மாதத்தில் தவஞ்செய்வதையே அத்தியாவசியமாக எண்ணி, அமல்களை ஆண்டவனிடத்தில் முற்படுத்திவைத்தவனது நற்பாக்கியத்திற்கு யாதுசொல்வேன்! விலக்கப்பட்ட கருமங்களாகிய துர்க்காரியங்களைச்செய்து பாவங்களை சேகரஞ்செய்து ஏமாந்து, பின்புதான் அறியாமல் திடீரென மரணம் வந்து சம்பவிக்கும்பொழுது, எவ்வித துணிபுடைய மல்லனாயிருந்தபோதிலும் அம்மரணத்தை தன்னைவிட்டு நீக்க இயலாதவனாகி, தன் வயது முழுதும் சம்பாதித்த அமல்களில் யாதொன்றும் உதவாதவனாகி விடுபவனின் துர்ப்பாக்கியத்திற்கு யாதுசொல்வேன்! சகோதரர்காள்! நன்றுபுணர்ந்து கொள்வீர்களாக! எவனொருவன் நல்ல அமல்கள் செய்வானாகில் அல்லா(ஹ்) அவனுடன் பிரியப்படுவதுடன் சுவர்க்கத்தையும் அவன் ஒதுங்கும் தானமாக்கிவிடுவான். எவனொருவன் தீய அமல்களைச் செய்வானாகில் அல்லா(ஹ்) அவன்மீது கோபமாகுவதுடன் நரகத்தையும் அவன் ஒதுங்கும் தானமாக்கிவிடுவான்.

ரமலான் பிறை பிறந்துவிடுமாகில் அர்ஷு, குர்ஸி, இவைகளினிடையிலுண்டானவைகள் அடங்கலும் சப்தமிட்டுச் சொல்லுவதாவது:- முஹம்மது (ஸல்) அவர்களின் உம்மத்துகளுக்கு ஆண்டவனிடத்தில் மேன்மைகளுண்டாயிருக்கின்றன. ஆதலால் அன்னவர்கட்கே சோபனமுண்டாகுவதாக. இரவு, பகல், சந்திர சூரியன், நக்ஷத்திரங்கள், பறவைகள், மச்சங்கள், முடிவாக ஷைத்தான்களைத்

தவிர உயிருள்ள வஸ்துக்களடங்கலும் அவர்களுக்கு பாவம் பொறுக்கத்தேடுகின்றன; அவர்கள் நோன்புவைத்து விடியற்காலம் எழுந்திருப்பார்களாகில் அல்லா(ஹ்) அவர்களிலெவரையும் சும்மாவிடுவதில்லை, பாவம் பொறுத்தே யொழிய. தவிர வே! என் மலக்குகளாகிய வானவர்காள்! இம்மாதத்தின் உங்களுடைய நோன்பு, துதித்தல், ஆகியவைகளின் சன்மானத்தை முஹம்மது (ஸல்) அவர்களின் உம்மத்துகளுக்கு கொடுத்து விடுங்களென அல்லா(ஹ்) அருள்செய்வானென நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் திருவாய்மலர்ந்தார்கள். (இப்னுஉமர், ரலி, ஹதீஸ்.)

நேர்வழி காட்டுகிறதற்காகவும், நேர்வழி காட்டும்படியானவைகளிலிருந்தும், நன்மை தீமையை பிரித்தறிவிக்கும்படியானவைகளிலிருந்தும், தெளிவானவைகளாகவும் திருகுர்ஆனை இந்த ரமலானிலிறக்கப்பட்டது. உங்களில் ஒருவன் இம்மாதத்தில் பிரயாணத்திலில்லாமலிருப்பானாகில் அவன் நோன்பு வைக்கவும்; ஒருவன் நோயுற்றோ அல்லது பிரயாணத்திலோ யிருப்பானாகில், அந்நாள்களுக்கு பதிலாய் வேறுநாள்களில் நோன்பு நோற்கவும்; அல்லா(ஹ்) உங்களுக்கு இலகுவை நாடுகின்றான், கஷ்டத்தை நாடவில்லை. (அல்—குர்ஆன், 2 : 185.)

மஸ்அலா.

நிய்யத்துச்செய்தல், கிழக்கு வெளுத்ததுமுதல் சூரிய அஸ்தம்வரை யாதொன்றைப் புசிக்காமலும் குடிக்காமலும், புணராமலும் இருத்தல் ஆகிய இவ்விரண்டும்(பர்ளுகள்)முக்கிய கடமைகள். சஹர் செய்தல், அதை பிற்படுத்திச்செய்

தல், நோன்பு திறத்தல், பேரீத்தம் பழத்தைக்கொண்டு நோன்புதிறத்தல் ஆகிய இவைகள் நோன்பின்சுன்னத்துகள்.

யாதொன்றை எவ்வழியாலும் புசித்தல், குடித்தல், புணருதல், வேண்டுமென்று வாந்திசெய்தல் ஆகிய இவைகள் விலக்கப்பட்டவைகள் (நோன்பை முறிப்பவைகள்.)

---

# றமலான் மாதம்,

# இரண்டாம் குத்பா.

எல்லா மாதங்களைவிட றமலான்மாதத்தை மேன்மைப் படுத்தி, இம்மாதத்தில் தவ்ராத் இன்ஜீல் ஸபூர் வேதங்களை இறக்கிவைத்ததுபோல் திருவேதமாகிய குர்ஆனையும் இறக்கி வைத்தவனும், சுவன உலகத்தில் பணிவிடைக்காக சிறுவர் களையும், சுகந்தரும்படியான வஸ்துக்களையும் சிருஷ்டித்து, அதன் வாயல்களை இம்மாதத்தின் சிறப்பிற்காக திறந்து வைத்தவனும், நம்பிக்கை வைத்தவர்களைவிட்டும் நரகத்தை மூடி, நம்பிக்கையற்றவர்களுக்காக அதை தயார்செய்தவ னும், இம்மாதத்தின் நோன்பை நம்மீது கடமைப்படுத்தி அதில் நோன்பு வைத்தவர்களின் கூலியை அதிகப்படுத்தி, அதில் நின்றுவணங்குவதை மேன்மையாக்கி, அதற்கு அள வில்லாச்சன்மான மளிப்பவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன், இணை துணையற்றவன், எனவும், நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வினடிமையும், அவனது திருத்தூதரும் திருத்தூதராயவதரித்த யாவருக்கும் தலை வரும் ஆவரெனவும் சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும், அவர்களின் கிளைஞராதி தோழர்கள்,

அவர்களின்மீது நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீதும் அள விறந்த கிருபாகடாக்ஷமும், ஈடேற்றமும், சாந்தியும் அருள் புரிவானாக !

அல்லா(ஹ்)வினடிமைகாள்! முதலாவதாக எல்லாம் வல்ல இரக்ஷகனையஞ்சி நடந்துகொள்ளும்படி உங்களுக்கும் எனக்கும் நற்போதனை செய்கின்றேன். ஏனெனில் இஸ்லாத் தின் தாத்பரியமும், மூலமந்திரமாகிய கலிமாவின் உட் பொருளுமிதுதான்.

சகோதரர்காள்! நிச்சயமாய் உங்களிடத்தில் வந்திருக் கும் இம்மாதமாகிறது பரகத்தும் சந்தோஷம் நிறைந்த மாத மாகும்; நன்மைகளால் நிறைந்ததும், சன்மானத்தால் அதிக மானதுமான மாதமாகும்; துஆவை ஒப்புக்கொள்ளப்படும் மாதமாகும்; தவ்பாச் செய்தவனது தவ்பா நிறைவேறும் மா தமாகும்; ஆகிரத்திற்காக வியாபாரஞ் செய்தால் நஷ்டமேற் படாத மாதமாகும். நோன்பு நோற்பதின் கடமைகளையும், அதன் மஸ்அலாக்களையும் நன்கறிந்து நோன்பு நோற்பவ னுக்கே சோபனமுண்டாவதாக! இம்மாதத்தில் நின்று தவஞ்செய்வதின் கடமைகளையுணர்ந்தவனுக்கே சோபனம்! யாவற்றையும் அறிபவனும் வல்ல அரசனுமாகிய அல்லா(ஹ்) வுக்காகவே தவஞ்செய்தவனது நற்பாக்கியமே நற்பாக்கியம். நிச்சயமாய் வல்லமைபொருந்திய அல்லா(ஹ்) பாவங்களைப் பொறுப்பவனும் நற்கூலி கொடுப்பவனுமாயிருக்கின்றான்.

அல்லா(ஹ்)வினடிமைகாள்! அல்லா(ஹ்)வை பயந்து அவன் ஒப்புக்கொள்ளும்படியான அமல்களை அதிகப்படுத் திக்கொள்ளும்படி உங்களுக்கு நற்போதனை செய்கின்றேன். அறிந்துகொள்ளுங்கள்! பொய், புறம், கோள், பொய்ச்சத்

தியம், பிறர்தூஷணை, நயவஞ்சகம், சூது முதலியனவற்றால் உங்கள் நோம்புகளை நாசமாக்காமலிருக்கும்படி உங்களை விலக்குகின்றேன். எத்தனையோ பசித்திருப்பவர்கள் பாவஞ்செய்வதனல் தங்களின் ஆன்மாக்களைப் பசிக்கும்படி செய்ததல்லாது வேறு யாதொரு பலனும் பெறுவதில்லை. எத்தனையோ நின்று தவஞ்செய்பவர்கள் தவஞ்செய்யும் முறையறியாமல் யாதொரு பிரயோஜனமுமின்றி தவத்தை அதிகப்படுத்துகின்றார்கள். இவ்விரு வகுப்பினரும் தங்கள் தங்கள் தவஞ்செய்யுமுறைகளையறிதல் எவ்வளவு அத்தியாவசிய மென்பதை யுணர்வதில்லை. (ஹறாமான)விலக்கப்பட்டவைகளால் நோன்பு திறப்பவனே! நோன்புவைப்பதும், திறப்பதும் எதற்காகவென்பதை நீசெவ்வனே உணர்ந்தாயில்லை. ஆண்டவனை வணங்குவதில் ஏமாற்றமடைந்தவனே! யாது காரணத்தால் நீ இவ்வித ஏமாற்றத்திற்குள்ளானுய்? இச்சையென்னும் காட்டில் திரிபவனே! ஆண்டவனை வணங்காத காரணத்தால் உன் கபர் இருளடையுமென்பதை நினைந்து ஏன் நீ பயப்படவில்லை? நபி பெருமான் (ஸல்) அவர்களின் காலத்திலில்லாத அநேக பித்அத்தான காரியங்களையும் பாவங்களையும் செய்பவனே! அல்லா(ஹ்) எல்லாரைப்பார்க்கிலும் மிக உரோஷமுடையவனென்பதை நீ உணரவில்லையா? அவனது கோபம் கடுமையானதென்பதை நீ ஆராயவில்லையா? “நிச்சயமாய் உன் இரக்ஷகனதுபிடிப்பு மிக கடுமையானது” என திருமறை கூறும் வாக்கியத்தை நீ கவனிக்கவில்லைபோலும்! இவ்வற்ப உலகின் நாகரீகத்தில் மூழ்கினவனே! இவ்வுலகம் ஏமாற்றக்கூடியதென்பதை நீ அறியவில்லையா? நேரான பாதையைவிட்டும் திரும்பினவனே! நம்மனைவோரையும் எழுப்பும் நாள் உண்டென்றெண்ணி எப்பொழுதுதான்

நீ நேர்வழி பெறுவாய்? அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்! அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்!! உயிருள்ளபொழுதே உன்னுலியன்ற அமல்களைச்செய்துகொள்!

நபிபெருமான் (ஸல்) தங்களின் உபந்நியாசங்களில் ஒன்றில் அருளிச்செய்தார்கள்; அது வருமாறு:— ஒருவன் இம்மாதத்தில் நோன்பு நோற்றவனுக்கு நோன்பு திறக்க யாதொன்றை கொடுப்பானுகில் அவ்வீகை அவனுடைய பாவங்கள் பொறுக்கப்படுவதற்கும், நரகத்தைவிட்டும் அவனை விடுவிப்பதற்கும் காரணமாகிவிடும். ஒருவன் இம்மாதத்தில் நோன்பு நோற்றவனுக்கு யாதொன்றை அருந்தக்கொடுப்பானுகில் ஹவ்லுல்கவ்தர் என்னும் ஆற்றிலிருந்து சுவர்க்கம் புகுதுமளவும் எந்நாளும் தாகத்தைக்கொடுக்காத குடிப்பை அவனுக்கு அல்லா(ஹ்)புகட்டுவான். மேலும் புசிக்க அல்லது அருந்தக்கொடுத்த ஒருவன் ஒரு அடிமையை விடுவித்தவனுக்கொப்பாகவுமாவான். (ஹதீஸ்.)

அல்லா(ஹ்)வை பயந்து நடந்தவர்களை சுவர்க்கத்தளவில் கூட்டங்கூட்டமாய்க் கொண்டு செல்லப்படும் அதன் வாயல்கள் திறக்கப்பட்டதாயிருக்கும் நிலைமையில் அவர்கள் (அஞ்சிநடந்தவர்கள்) சுவர்க்கத்தளவில் வருவார்களாகில் சுவர்க்கத்தின் அதிபதிகளாகிய மலக்குகள் அன்னவர்கட்குச் சொல்லுவார்கள் “உங்கள் மீது (ஆண்டவனின்) ஈடேற்றமும், சாந்தியுமுண்டாவதாக! நீங்கள் சுகம் பெற்றீர்கள். இதனுட்புகுந்து அழிவில்லாதகாலம் இருப்பீர்களாக” என (அப்பொழுது) அவர்கள் (சுவர்க்கம் புகுதுகிறவர்கள்) சொல்லுவார்கள்:—“தன் வாக்குறுதியை

நிறைவேற்றி சுவனவுலகத்தை எங்களுக்கு பாத்தியமாக்கிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும்'' என். சுவர்க்கத்திலிருந்து நாம் நாடியவிடத்தை (அவர்களுக்கு) ஒதுங்கும் தானமாக்குவோம். அமல் செய்தவர்களின் சன்மானம் மிக நல்லதாய்விட்டது. (அல்- குர் ஆன், 39 : 73, 74.)

---

# றமலான் மாதம்,

# மூன்ரும் குத்பா.

றமலான் மாதத்தை மற்றெல்லா மாதங்களைவிட மேலானதென்று குறிப்பிட்டு, நல்லவேலைகளும் அதிக நன்மைகளும் உற்பத்தியாகும் காலமாக ஆக்கிவைத்து இம்மாதத்தின் கவுரவத்தை நிரப்பமாக்கி, அதில் திருக் குர்ஆனை, மானிடர்களுக்கு நேர்வழிகாட்டியாயும், உபந் நியாசமாயும், அவர்களினிருதயங்களின் பாவங்களுக்கு பரிகாரமாயும் இறக்கிவைத்த அல்லா(ஹ்)வுக்கே புகழ னைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன், இணை துணையற்றவன் எனவும், நமது பெருமான் முகம்மது(ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வினடிமையும், அவனது திருத் தூதரும், திருத்தூதராயவதரித்த யாவருக்கும் தலைவரும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர் களின்மீதும், அவர்களின் கிளைஞராதி தோழர்கள் அவர் களின்மீது நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீதும் அள விறந்த கிருபாகடாக்ஷமும், ஈடேற்றமும் சாந்தியும் அருள் புரிவானுக.

அல்லா(ஹ்)வினடிமைகாள்! முதலாவதாக எல்லாம் வல்ல இரக்ஷகனையஞ்சி நடந்துகொள்ளும்படி உங்களுக்

கும் எனக்கும் நற்போதனை செய்கின்றேன். ஏனெனில் இஸ்லாத்தின் தாத்பரியமும், மூலமந்திரமாகிய கலிமாவின் உட்பொருளுமிதுதான்.

அல்லா(ஹ்)வினடிமைகாள்! எவனொருவன் ஆண்டவனை வணங்குவதில் தன் ஆன்மாவுக்கு சிரமத்தை யுண்டு பண்ணுவானாகில், உண்மையில் அது சிரமமன்று. அப்படிச் செய்வது தன் ஆன்மாவை சௌக்கியத்திற்குள்ளாக்குவதாகும். மார்க்கத்தில் ஏவப்பட்டவைகளை எடுத்து நடப்பதுகொண்டும், விலக்கப்பட்டவைகளை தவிர்வது கொண்டும், எவனொருவன் தன் ஆன்மாவை விலங்கிடுவானாகில், அப்படிச்செய்வது விலங்கிடுவதல்ல, உண்மையில் அவ்வான்மாவுக்கு பரலோகத்தில் சுகம்பெற வழிதேடுவதாகும். உங்களில் எவனொருவன் சுவன உலகம்புகுத நாடுவானாகில் அதிசீக்கிரம் தன்னுடைய பாவ நிவிர்த்திக்காக தவ்பாச்செய்து கொள்ளவும். ஏனெனில் இம்மாதத்தில் தவ்பாச் செய்வது சுவனலோகத்தின் திறவுகோலாகும். அல்லா(ஹ்)வினடிமைகாள்! அல்லா(ஹ்) நீங்கள் செய்பவைகளை நன்கறிபவனாதலால் அவனைப்பயந்து நடந்து கொள்ளுங்கள். சிறப்பாகிய இம்மாதத்தில் நோன்பு நோற்று, நின்றுவணங்கி, சதகாவென்னும் தர்மங்களைச்செய்துகொள்ளுங்கள். பந்துக்களுடன் சேர்ந்து அவர்களையுபசரித்து, அனாதைகட்கும், ஏழைகட்கும் உங்கள் சகாத்தென்னும் மார்க்ககடமையாகிய தர்மத்தைச் செய்துகொள்ளுங்கள். ஏழைகளுக்கும் பந்துக்களில் சம்பாதிக்க இயலாதவர்களுக்கும் பசியாற்றி முஸ்லிம்களுக்கிடையில் சலாமை அதிகப்படுத்திக்கொள்ளுங்கள். இரவு பகல் நியமமாக

குர்ஆனை ஓதிக்கொள்ளுங்கள். இம்மாதத்தில் சுவன லோகத்தின் வாயல்கள் திறக்கப்பட்டு நரகலோகத்தின் வாயல்கள் மூடப்படுகின்றன. இம்மாதத்தில் அல்லா(ஹ்) நம்மை பாவங்களைவிட்டு துப்பரவாக்கி தனது கிருபையைக் கொண்டு பகாரஞ்செய்கின்றான். மானிடர்காள்! கோள் சொல்லுவதுகொண்டும், புறம்பேசுவதுகொண்டும், தன் சகோதரனாகிய 'ஒரு' முஸ்லிமுக்கு தொந்திரவுகொடுப்பவன் எதற்காக நோன்பு வைக்கவேண்டும்? அப்படிச்செய்வதினால் நோன்பு கூடாதென்பதை கண்டிப்பாயுணரவேண்டும். தொழுகையில் ஆன்மா ஓரிடத்திலும் சரீரம் ஓரிடத்திலும் வைத்துக்கொண்டு தொழுபவன் எதற்காக தொழவேண்டும்? அவ்விதம் தொழுவதில் கிட்டவேண்டிய பயன் கிட்டாதென்பதை நன்கறிதலவசியம். ஹராமில் சம்பாதித்த சொத்தினால் எதற்காக தர்மம்செய்யவேண்டும்? அப்படி ஒருவன் செய்யும் தர்மத்தினால் எவ்வித பலனுமில்லாததினால் அது தான் நிர்வாணமாயிருக்க பிறருக்கு ஆடையுடுத்துவதுபோலல்லவா ஆகின்றது? மார்க்க சட்டதிட்டங்களையும், பொதுஸ்தாபனங்களுக்குச் சம்பந்தமான மஸ்அலாக்களையும், அறியாத ஒருவன் பொது ஸ்தாபனங்களில் ஏன் ஈடுபடவேண்டும்? அப்படிச்செய்வதினால் தன்னையறியாமல் அனேக பாபங்கள் வந்து சம்பவிக்குமென்பதை உணருதலவசியம். "இவ்வுலகில் எவர்களது முயற்சி வழி தவறினதாயிருக்கின்றதோ அவர்கள் தாங்கள் செய்யும் வேலைகளை நன்மையாக கருதுகின்றார்கள். இவர்கள் தாம் தமது இரக்ஷகனின் முகாந்தரங்களும், அவனை சந்திப்பதும் பொய்யென்று கருதினவர்கள்; அப்படிப்பொய்யாககருதின காரணத்தினால் அவர்களின் அமல்கள் அழிந்துவிட்டன.

இறுதிநாளையில் அல்லா(ஹ்)வினிடத்து அவர்களது அமல்களுக்கு எவ்வித மதிப்புமிராது'' என்பதாக அல்லா(ஹ்) தன் திருமறையில் அருள்செய்திருப்பதை இவர்கள் உய்த்துணர்ந்திருக்கவேண்டாமா?

"நோன்பு வைத்தவனது நித்திரையானது வணக்கம்; அவனது வாய் மூடியிருத்தல் தஸ்பீஹ்; அவனது அமல்களின் சன்மானம் இரட்டிப்பாக்கப்படும்; அவன் ஆண்டகையிடத்தில் இறைஞ்சுவது ஒப்புக்கொள்ளப்படும்; அவனது பாவங்கள் பொறுக்கப்படும்'' என நபிகள் திலகம் முஹம்மது(ஸல்) அவர்கள் அருளிச்செய்தார்கள். (ஹதீஸ்)

நிச்சயமாய் நாம் குர்ஆனை சிறப்பாகிய இரவில் இறக்கி வைத்தோம். சிறப்பான இரவு யாது? என்பதை (நபியே) நீர் அறிவீரா? சிறப்பான இரவானது ஆயிரம் மாதங்களைப்பார்க்கிலும்மேலானது அவ்விரவில் ஜிப்ரயீலும் மலக்குகளும் தமது இரக்ஷகனது ஆக்ஞையினால் எல்லா விஷயங்களையுங்கொண்டு இறங்குகின்றார்கள்; கிழக்கு வெளுக்கும்வரை இவ்விதமாய் மலக்குகள் இறங்குவது சாந்தியே ஒழிய வேறல்ல. (அல்—குர்ஆன், 97 : 1, 5.)

---

## றமலான் மாதம்,

# நான்காம் குத்பா.

தான் அழிவற்று பிறரையழிக்குஞ் சக்தியுள்ளவனும், சந்திரன் பூரணமானபின் அதை குறையும்படிக்கும் மறையும்படிக்கும் செய்பவனும், அவ்விதமே உலகமுழுவதையும் அதிலுண்டானவைகளையும் அதனதன் காலக்கிரமப்படி அழிப்பவனுமாகிய, அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன் எனவும், நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வினடிமையும், அவனது திருத்தூதரும் திருத்தூதராயவதரித்த யாவருக்கும் தலைவரும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின் மீதும், அவர்களின் கிளைஞராதி தோழர்கள், அவர்களின் மீது நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீதும் அளவிறந்த கிருபாகடாக்ஷமும் ஈடேற்றமும் சாந்தியும் அருள்புரிவானாக!

அல்லா(ஹ்)வினடிமைகாள்! முதலாவதாக எல்லாம் வல்ல இரக்ஷகனையஞ்சி நடந்துகொள்ளும்படி உங்களுக்கும் எனக்கும் நற்போதனை செய்கின்றேன். ஏனெனில்

இஸ்லாத்தின் தாத்பரியமும், மூலமந்திரமாகிய கலிமாவின் உட்பொருளுமிதுதான்.

அல்லா(ஹ்)வினடிமைகாள்! றமலான் மாதத்தில் பெரும்பாகம் சென்றுவிட்டதென்பதை நீங்களறிவீர்கள் ஷவ்வால் மாதம் வருவதற்கு சொற்ப நாள் தாமிருக்கின்றன. இந்த றமலான்மாதம் வந்தும் வாராததுபோலவே சென்றுவிட்டது. இம்மாதத்தை ஆதரிக்காமலும் கவனியாமலும் கெடுதிகள் செய்தவன்மீது கெடுதியைக் கொண்டும், கவனித்து நன்மைகளைச் செய்தவனுக்கு நலவைக் கொண்டும், இம்மாதம் ஆண்டவனிடத்தில் சாக்ஷிபகரும். ஆனதால் இம்மாதத்தில் வணங்குவதுகொண்டு சம்பாதித்துக் கொள்ளுங்கள். சகோதரர்காள்! மனப்புழுக்கம், பொறுமை, மோசஞ்செய்தல், ஆகியவைகளைவிட்டும் பயப்படுங்கள். இம்மாதத்திலிருந்து எஞ்சியிருக்கும் நாட்களில் முயற்சித்து நன்மையைப் பெற்றுக்கொள்ளுங்கள். பிரியம் வைக்கவேண்டிய இம்மாதத்தின் பிந்திய நாட்களை பெருஞ் செல்வமாக நினைத்து இறுதி நாளுக்காக அதில் வேண்டியதை சம்பாதியுங்கள். அறிந்து கொள்வீர்களாக! நிச்சயமாய் அந்நாளாகிறது கடுமையாக பயமுறுத்தும்படியான நாளாகும். இம்மாதத்தை, சிநேகிதர்களை பயணமனுப்புவதுபோல் பயணமனுப்புங்கள் மேலும் சொல்லுங்கள்:—

“ஏ தவாபுடைய மாதமே! பாவங்கள் பொறுக்கப்படும் மாதமே! குர்ஆன் இறங்கின மாதமே! நின்று வணக்கம் புரியப்படும்மாதமே! அனாதைகள் இரக்ஷிக்கப்படும் மாதமே! தராவீஹின் மாதமே! நன்மைகள் அதிகமாகும் மாதமே! திக்ரு, தஸ்பீஹ்களின் மாதமே! பாவங்கள் அழிந்துவிடும்

மாதமே! அல்லா(ஹ்) எங்களின் இருதயங்களை உன்னை விட்டு பிரளும்படி செய்யாமலிருப்பானாக! உன்னுடைய நாட்கள் எங்கள்மீது நியமமாக இருக்கவேண்டிற்றே! எங்கள் பள்ளிகள் உன்னால் நன்மைகளைக்கொண்டு நிரம்பியிருந்தன. எங்கள் தீபங்கள் உன்னால் பிரகாசங்களைக்கொண்டு ரம்மியமாயிருந்தன. எங்களுடைய பாவங்கள் உன்னால் பொறுக்கப்பட்டன. நீயவதரித்த காரணத்தினால் எவனது நன்மைகள் ஒப்புக்கொள்ளப்பட்டதோ அவனுக்கே சோபனமுண்டாவதாக!'' அறிந்துகொள்ளுங்கள்! இதோ உங்களுக்குமுன் பெருமை வாய்ந்த இரவு வரப்போகின்றது; இவ்விரவு ஆயிரம் மாதங்களைப்பார்க்கினும் மேலானது. இவ்விரவில் நின்று வணங்குபவர்களின் சன்மானம் அளவிட முடியாது; இவ்விரவில் தவ்பாச் செய்பவன் பாவங்கள் முழுவதும் கரிந்துபோம்; மன்னிப்புத்தேடுபவர்களின் குற்றங்கள் நிவர்த்தியாகும். ஆகையால் நீங்கள் உங்களின் வயதில் அறிந்தும் அறியாமலும் செய்த குற்றங்களை ஆண்டவனிடத்தில் அழுது மன்னிக்கத்தேடுங்கள். அவைகளுக்கு பதிலாய் நன்மைகளைத் தேடிக்கொள்ளுங்கள். அடுத்த வருஷம் இம்மாதம் வரும்வரை நாமிருப்போமென்பது நிச்சயமல்ல. உங்கள் பொருள்கள் அழியாமலிருக்கும் பொருட்டும், அபிவிருத்தியடையும் பொருட்டும், விகிதப்படி தகுதியானவர்களுக்கு ஜகாத்தைக் கொடுத்து உங்கள் கடமையைத் தீர்த்துக்கொள்ளுங்கள்.

நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் அருளிச்செய்துள்ளார்கள்:- றமலான் மாதத்(தின் வணக்கத்)தை வானம் பூமிக்கிடையில் தொங்கவிடப்படும்; பித்தருடைய சதகாவை

கொடுக்காதவரையில் அது உயர்த்தப்படமாட்டாது'' என. மேலும் அருளிச்செய்தார்கள்:- "றமலான் மாதத்தினுள் அடங்கியிருக்கும் நன்மைகளை எனது உம்மத்துகள் அறிந்திருப்பார்களாகில், வருஷ முழுவதும் றமலானுயிருக்கக் கோருவார்கள்'' என. மேலும் அருளிச்செய்தார்கள்:- "றமலானின் ஒவ்வொரு இரவிலும் நரகத்தைவிட்டு ஆயிரப்பேர்களை அல்லா(ஹ்) விடுதலை செய்கின்றான் றமலான் கடைசி இரவில் சென்ற இரவுகளடங்கலின் எண்ணிக்கையுடைய அவ்வளவு பேர்களை விடுதலை செய்கின்றான். அல்லா(ஹ்) வானங்களைப் பேசும்படி உத்திரவு செய்வானுகில், "றமலானில் நோன்பு வைத்தவனுக்கு சுவர்க்கமுண்டு'' என (அவ் வானங்கள்) சாக்ஷிபகர்ந்துவிடும். (ஹதீஸ்)

"நின்றவர்களாகவும், இருந்தவர்களாகவும், படுத்தவர்களாகவும் அல்லா(ஹ்)வை ஞாபகஞ்செய்யும்படியான அறிஞர்களுக்கு, வானம் பூமிகளை சிருஷ்டித்ததிலும், இரவு பகல் மாறி மாறி வருவதிலும், திருஷ்டாந்தரமுண்டாயிருக்கின்றது. மேலும் வானம் பூமிகளை உண்டுபண்ணினதில் அவர்கள் சிந்தனை செய்வார்கள் (பின்பு சொல்லுவார்கள்) "ஏ எங்களின் இரக்ஷகா! இவைகளை நீ வீணாக சிருஷ்டிக்கவில்லை, நீ மிக தூய்மையுடையவன், ஆனதால் நரகத்தின் வேதனையைவிட்டும் எங்களை நீ காப்பாற்றுவாயாக.'' (அல்—குர்ஆன், 3: 189, 190.)

---

# ஈதுல் பித்ர், என்னும்
# நோன்புப் பெருநாள் குத்பா.

பொறுமை, சக்தி, பாவங்களை மறைக்குதல் ஆகிய குணங்களையுடைய வல்ல அரசனும், தனது ஆதிக்கோர் ஆரம்பமும், அந்தத்திற்கோர் முடிவுமில்லாதவனும், சர்வ சக்தியையுடையவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத்தவிர வேறு ஆண்டவனில்லை. அவன் தனித்தவன், இணைதுணையற்றவன் எனவும், நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வினடிமையும், அவனது திருத்தூதரும் திருத்தூதராயவதரித்த யாவருக்கும் தலைவரும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும், அவர்களின் கிளைஞராதி தோழர்கள், அவர்களின்மீது நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீதும், அளவிறந்த கிருபா கடாக்ஷமும், ஈடேற்றமும், சாந்தியும் அருள்புரிவானாக!

அல்லா(ஹ்)வினடிமைகளே! முதலாவதாக எல்லாம் வல்ல இரக்ஷகனையஞ்சி நடந்துகொள்ளும்படி உங்களுக்கும் எனக்கும் நற்போதனை செய்கின்றேன். ஏனெனில் இஸ்லாத்தின் தாத்பரியமும், மூலமந்திரமாகிய கலிமாவின் உட்பொருளுமிதுதான்.

மானிடர்காள்! இன்றையதினம் பெருமைவாய்ந்த நாளாகும். சிறப்புற்ற பெருநாளாகிய இன்றையதினத்தில் புசிப்பதை அல்லா(ஹ்) உங்களுக்கு ஆகுமாக்கினான். இன்றையதினத்தில் நோன்பு வைப்பதை ஹராமாக்கினான். சிறப்புற்ற றமலானை இந்த நாளைக்கொண்டு முடித்தான். அல்லா(ஹ்)வின் மேன்மைவாய்ந்த வீட்டளவில் ஹஜ்ஜை செய்வதற்குள்ள மாதங்கள் பிறந்துவிட்டன. ஆகையால் இன்றையதினமானது அல்லா(ஹ்)வை நீங்கள் தூய்மைப் படுத்துதலென்னும் தஸ்பீஹ், துதித்தலென்னும் தஹ்மீத், ஓர்மைப்படுத்துதலென்னும் தஹ்லீல், பெருமைப்படுத்துத லென்னும் தக்லீம், கண்ணியப்படுத்துதலென்னும் தம்ஜீத் செய்யும்நாள். உங்கள் இரக்ஷகனை இன்று நீங்கள் தஸ்பீஹ் செய்துகொள்ளுங்கள். அவனை மென்மைப்படுத்தி அவனளவில் தவ்பாச் செய்து பாவம் பொறுக்கத்தேடுங்கள். அறிந்துகொள்ளுங்கள்! நிச்சயமாய் இஸ்லாமிய மாதமாகிய இம்மாதத்தை அல்லா(ஹ்) உங்களுக்கு உவப்புடன் அளித்தான். இதைக்கொண்டு உங்களுக்கு உதவி புரிந்து முஸ்லிம்களென உங்களுக்கு நாமமுஞ்சூட்டினான். அல்லா(ஹ்)வின் தக்வாவென்னும் கயிற்றை ஒருவன் உறுதியாய்ப் பிடிப்பானாகில், அவன் மிகுதமான நன்மையைக் கொடுக்கப்பட்டவனாவான். ஒருவன் நன்னப்பிக்கை வைத்தவனாய் ஆகிறத்தைக் கருதி அதற்கென்றே முயற்சி செய்வானாகில் அவன்தான் அவனுடைய முயற்சிக்குத் தகுந்த கூலி கொடுக்கப்பெற்றவனாவான். எனவே அல்லா(ஹ்) நம்மீது கடமையாக்கின அவனுடைய ஏவல்களை எடுத்து நடப்பதளவில் விரைவாகச் செல்லுங்கள். பித்ருடைய சதகாவை நிறைவேற்றுங்கள். அதை நிறை

வேற்றுவதில் சிரத்தை எடுத்துக்கொள்ளுங்கள். சிறுபாவம் பெரும்பாவம், அறிந்தறியாமல்செய்தபாவங்களை விட்டுவிலகி சுத்தமாக சம்பாதித்தமுதலிலிருந்து உங்களின் சம்ரக்ஷணைக் குட்பட்ட ஆண், பெண், குழந்தைகளுக்காக பித்ராக் கொடுங்கள். அவ்விதம் கொடுப்பதானது, அல்லா(ஹ்) நாடுவானாகில் உங்களுடைய பாவங்களுக்கு பரிகாரமாகவும், உங்களுடைய நோன்புகள் ஒப்புக்கொள்ளப்படுவதற்கு காரணமாகவும் ஆகிவிடும். ஹனபீ இமாமாகிய அபூஹனீபா (ரஹி) அவர்களின் மத்ஹபின்பிரகாரம், கோதுமை, அதன் மாவு, திராக்ஷைப்பழம் இவைகளிலிருந்து (இராக்தேசத்தின்) படியால் அரைப்படியும், பேரீத்தம்பழம் தொலிக்கோதுமை இவைகளிலிருந்து ஒரு படியும் கொடுக்கவேண்டும். ஹனபி மத்ஹப் பின் பிரகாரம் ஒருவனின் மனைவியும், அவனின் பாலிகான (பருவமடைந்த) குழந்தைகளும் தவிர, தனக்காகவும், தன் சிறுகுழந்தைகளுக்காகவும், அடிமைகளுக்காகவும், பித்ராக் கொடுப்பது வாஜிபு (கடமை). மேல் சொல்லிய வஸ்துக்கள் புழக்கமில்லாத நம்தேசத்தில் அதன் கிரயத்தை ஏழைகளுக்கு கொடுத்து விடவேண்டும். (ஆனால் இவ்விதம் பித்ராக் கொடுப்பது வாஜிபென்பது சொத்துக்கு மீறின் கடனில்லாமல், இருக்கும் வீடும், உடுத்தும் ஆடையும், தொழிலாளியாயிருந்தால் அவன் தொழிலுக்குரிய சாமான்களும், ஏறுவாகனமும் நீங்கலாக ஜகாத் கொடுப்பது கடமையாகும் படியான 200 திரஹம் (இங்கிலீஷ் ரூபாய்க்கு 38ம் சில்லரையும்) ஐவேஜ் உள்ளவனுக்குத்தான்). ஒருவன் இவ்விதம் பித்ராக் கொடுப்பானாகில் அவன் நேரானவழியில்நடந்தவனாவான். ஷாபியீமத்ஹபின்பிரகாரம் மேல் சொன்னவைகள் போல் குடியிருக்கும்வீடு, ஏறும்

வாகனம் தொழிலாளிகள் சாமான் நீங்கலாக, கடன் முதலி யவைகளில்லாமல் அன்று இரவு பகல் சாப்பாட்டுக்கு மேல் பட்ட ஐவேஜுள்ள ஒவ்வொருவனும், தனக்காகவும், தன் குழந்தைகளில் சிறவர்களுக்காகவும், அடிமைகளுக்காகவும், மனைவியின் வேலையாளுக்காகவும், தன் சம்ரக்ஷணையிலிருக் கும்படியான தாய் தந்தை பெரிய குழந்தைகளுக்காகவும், அவரவர் தேசத்தில் தின்னக்கூடியவைகளிலிருந்து மிகுந்து புழக்கமுள்ள தானியத்திலிருந்து, உமி, பதர், முதலிய நீக்கும்படியான வஸ்துக்கள் நீக்கப்பட்ட, நான்கு சிரங்கை தானியம் கொடுக்கவேண்டும். இப்படிச் செய்பவன் மீது அல்லா(ஹ்) தன் கிருபையையும், உபகாரத்தையும், அருள்புரிவானாகை.

நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் திருவாய்மலர்ந்தரு ளினார்கள். "ஒருவன் றமலான் மாதம் நோன்பு நோற்று அதனுடன் ஷவ்வால் மாதத்தின் ஆறு நோன்புகளையும், நோற்பானாகில், வருஷமுழுதும் நோன்பு பிடித்தவனைப்போ லாவான்,'' என. மேலும் அருளிச்செய்தார்கள்:- ஒருவன் பெருநாளன்று அல்லா( ஹ் )வுக்கு மாறுசெய்வானாகில், கியாம நாளன்று அல்லா( ஹ் )வுக்கு மாறுசெய்தவனுக் கொப்பாவான்'' என. (ஹதீஸ்.)

மஸ்அலா. பெருநாளன்று ஸ்நானஞ்செய்வதும், மிஸ் வாக்குச்செய்வதும், வாசனைபூசுவதும், தன்னிடத்திலுள்ள வஸ்திரங்களில் நல்லதை அணிவதும், சுர்மாபோடுவதும், பெருநாள் தொழுகை தொழுமுன் பேரித்தம்பழத்தை ஒற் றையாக தின்பதும், தொழுமுன் பித்ராவைக்கொடுப்பதும், முஸ்தஹப்பு. குறிப்பு:— தொழுதபின் கொடுத்தாலும் கூடும். கொடுக்காவிட்டால் அவனைவிட்டும் அக்கடன்தீராது.

## ஷவ்வால் மாதம்,

# முதலாம் குத்பா.

ஆற்றல், அன்பு, பாவம் பொறுத்தல், கூலி கொடுத்தல், விஷயங்களை யோசனைசெய்தல், ஆகிய குணங்களையுடைய வனும், வானம் பூமிகளையும், ஒளிவு இருளையும் சிருஷ்டித்த வனும், ஹஜ்ஜுடைய மாதங்களுக்கு துவக்கமாக இம்மா தத்தையாக்கி மேன்மைப்படுத்தியவனுமாகிய அல்லா(ஹ்) வுக்கே புகழனைத்தும்உரியனவாகும். நிச்சயமாய்அல்லா(ஹ்) வைத்தவிர வேறு ஆண்டவனில்லை, அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், எனவும்; நமது பெருமான் முஹம் மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வினடிமையும் அவனது திருத்தூதரும், திருத்தூதராயவதரித்த யாவருக்கும் தலை வரும் ஆவரெனவும், சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும், அவர்களின் கிளைஞராதி தோழர்கள், அவர்களின்மீது நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீதும், அளவிறந்த கடாக்ஷமும், ஈடேற்றமும், சாந்தியும் அருள் புரிவானாக!

அல்லா(ஹ்)வினடிமைகாள்! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நல் லுபதேசம் செய்கின்றேன். ஏனெனில், அல்லா(ஹ்)வைப்

பயப்படுவது நமது கடமையாயும் நம்மை மேலான நிலைமைக்குக் கொண்டுவரும்படியானதாயும் இருக்கின்றது.

மானிடர்காள்! அல்லா(ஹ்)வினால் நமக்களிக்கப்பட்ட உபகாரங்களுக்காக அவன்பால் நன்றி செலுத்துங்கள். அல்லா(ஹ்)வை ஞாபகஞ்செய்வதில் உங்களின் நாவுகளை உபயோகித்துக்கொள்ளுங்கள். ஏனெனில், அவனை ஞாபகஞ்செய்பவனை நற்பாக்கியமுள்ளவனாவான் உங்களுக்கு தேவையானவைகளை தேடுவதில் அல்லா(ஹ்)வையே நாடுங்கள். ஏனெனில், அவன் கேட்காமல் கொடுப்பவன், அவனை நாடிய பேர்களை ஏமாற்றத்திற்கு உள்ளாக்குபவனன்று என்று அல்லா(ஹ்)வை பெருமைப்படுத்துங்கள். அல்லா(ஹ்) அதிக அன்புள்ளவன். அவனைப் பெருமையாக்குபவர்களை நரகத்திலிட்டு வேதனை செய்வதில்லை. முன்னெற்றியின் உரோமங்களையும், கால்களையும் பிடிக்கப்பட்டு நரகத்திலிடும்படியாகிய அந்நாளை பயந்துகொள்ளுங்கள். றமலான்மாதம் சென்றுவிட்டதென சொல்லவேண்டாம். அப்பொழுது ஹராமான வேலைகளை ஹலாலென கருதிவிடுவீர்கள். எந்த மாதத்திலும் அல்லா(ஹ்)வுக்கு மாறு செய்பவனை அவன் பிரியப்படுவதில்லை. எக்காலத்தும், எந்நேரத்தும் அவனுக்கு வழிப்படுபவனையே அல்லா(ஹ்) பிரியபப்டுகிறான். அல்லா(ஹ்)வை பிரியமாக்கிவைக்கும் செய்கைகளால் இம்மாதத்தை வரவேற்புச்செய்யுங்கள். சதகா கொடுப்பதனால் அல்லா(ஹ்) அளவில் சமீபித்துக்கொள்ளுங்கள். அறிந்துகொள்ளுங்கள். அழிவே அதிகமாயிருக்கின்றது. நிலைபாட்டிற்கு எவ்வித வழியுமில்லை. கலா என்னும் கற்பனை முடிவடைந்துவிட்டது. அதில் எவ்வித

பேதகமுமில்லை. மரணமென்னும் கடல் அலைவீசிக்கொண்டிருக்கிறது. எனவே அதில் நமது அறிவிற்கெட்டக்கூடிய ஆதாரங்களொன்றும் செல்லுவதில்லை ஒரு உத்தமன், அல்லது ஒரு சிறந்த வம்சத்தைச் சார்ந்தவன், அல்லது ஒரு மதிப்பையுடையவன், அல்லது ஒரு அழகிய முகத்தையுடையவன் மரணத்தைவிட்டும் தப்பியிருத்தல்கூடுமாயின், பூரண வேதத்தையளித்த நமது பெருமான் முகம்மது(ஸல்) அவர்கள் அம்மரணத்தைவிட்டு தப்பித்திருக்க விசேஷ உரிமைபெற்றவர்களாக இருந்தார்கள். ஆனால் அவர்களும் மரணத்தை அநுபவித்தார்கள்.

அபூஹுறைரா (றலி) அவர்கள் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் அருளிச்செய்ததாய் சொன்னார்கள் :—"மானிடர்காள்! உங்கள்மீது ஹஜ்ஜை அல்லா(ஹ்) விதியாக்கி இருக்கின்றான்" என. அப்பொழுது ஒருவர் அல்லா(ஹ்)வின் திருத்தூதரே! ஒவ்வொரு ஆண்டிலுமா? என வினவினர். அப்பொழுது அம்மனிதர் (இவ்வார்த்தையை) மூன்று தடவை சொல்லும்வரை நபிபெருமான் (ஸல்) அவர்கள் மௌனமாயிருந்தார்கள். பின்பு அருளிச்செய்தார்கள். "ஆம், என்பதாக(உமக்குச்) சொல்லிவிடுவேனாகில் உங்கள் மீது ஹஜ்ஜு (பிரதி வருஷமும்) கடமையாகிவிடும். ஆனால் நீங்கள் அதற்கு சக்திபெறமாட்டீர்கள்" என. (முஸ்லிம்) மேலும் நபிபெருமான் (ஸல்) அவர்கள் அருளிச்செய்தார்கள். கொல்லனின் உலையானது இரும்பின் அழுக்குகளை நீக்கிவிடுவதுபோல் ஹஜ்ஜும், உம்ராவும், வறுமையையும், பாவங்களையும், நீக்கிவிடும்" என. மேலும், அருளிச்செய்தார்கள் :—"ஹஜ்ஜு செய்பவன் போகும்

பொழுதும் மீண்டுவரும்பொழுதும், அல்லா(ஹ்)வின் பாது காவலில் இருக்கின்றான் என. (ஹதீஸ்)

மாறுசெய்தவர்கள், அன்னவர்கட்கு ஜஹன்னமென்னும் நரகமுண்டாயிருக்கின்றது. அவர்கள்மீது (மவுத்தை) ஏற்படுத்தப்படுவதில்லை அப்படிச்செய்வோமாகில், அன்னவர்கள் இறந்துவிடுவார்கள். நரகத்தின்வேதனையையும் அவர்களைவிட்டு லேசுபடுத்தப்படமாட்டாது. ஒவ்வொரு மாறு செய்பவர்களுக்கும் இவ்விதமாகவே கூலி கொடுப்போம். அவர்கள் நரகத்தில், "எங்களின் இரக்ஷகா எங்களை வெளிப்படுத்துவாயாக! இனி நாங்கள் செய்துகொண்டிருந்ததை விட நல்ல அமல்களைச்செய்வோம்" என சப்தமிடுவார்கள். (அப்பொழுது பதில்கிடைக்கும்) சிந்திக்கக்கூடியவன் அதில் (உலகில்) சிந்திக்கப்போதுமான அவ்வளவு சாவகாசத்தை உங்களுக்கு நாம் வயதாககொடுத்திருக்கவில்லையா? மேலும் உங்களிடத்தில் அச்சமுறுத்தும்படியானவர் வரவில்லையா? ஆதலின் அனுபவியுங்கள். ஏனெனில் அக்கிரமக்காரர்களுக்கு (இங்கு) உதவிபுரிவோரில்லை.

(அல்-குர்ஆன், 35 : 36, 37.)

---

ஷவ்வால் மாதம்,

# இரண்டாம் குத்பா.

லவ்ஹு, கலம், மனிதர் முதலியவைகளை சிருஷ்டித்த வனும், தன் அடிமைகள் தங்களின் தவறுகளையுணர்ந்து விசனித்து கெஞ்சிக் கேட்கும் நேரத்தில் பொறுக்கும்படி யான பொறுமையுடையவனும், தன் அரசாக்ஷியில் பெரு மையுடையவனும், தன் அடிமைகளின் கஷ்டங்களை அவர் கள் முறையிடும்பொழுது அவர்கள்மீது உட்கிருபை செய் யும் கொடையாளனும், தன்னுடையமேன்மையாக்கப்பட்ட வீட்டளவில் ஹஜ்ஜு செய்வதைக் கடமையாக்கிய பரா பரனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவா கும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவ னில்லை; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன் என வும், நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல் லா(ஹ்)வினடிமையும், அவனது திருத்தூதரும், திருத்தூத ராயவதரித்த யாவருக்கும் தலைவரும் ஆவரெனவும், சாக்ஷி யம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும், அவர் களின் கிளைஞாதி தோழர்கள் அவர்களின்மீது நன்னம் பிக்கை வைத்தவர்களின்மீதும் அளவிறந்த கிருபாகடாக்ஷ மும், ஈடேற்றமும் சாந்தியும் அருள்புரிவானாக!

மானிடர்காள்! அறிந்துகொள்வீர்களாக! நிச்சயமாய் உங்கள்மீது கடமையாக்கப்பட்டதைச் செய்யும்படி உங்களை அழைக்கிறேன். ஆதலால் மரணத்திற்குமுன் அவ்வேலைகளை விரைந்து செய்யுங்கள். மரணித்தபின், வருந்துவது பயன் தராதென்பது நீங்கள் நன்கறிந்த விஷயம். நன்மை தீமை சிறியதாயினும் பெரியதாயினும் நீங்கள் கூலி கொடுக்கப்பெறுவீர்கள். இச்சைப்பட்டு இன்பம் அநுபவிக்க விரும்பிச்செய்த ஹறாமான (விலக்கப்பட்ட) காரியங்களுக்காக வேதனை செய்யுப்படுவீர்கள். ஒருவன் ஹஜ்ஜு செய்வதற்காக ஒரு திர்ஹம் (ஏறக்குறைய காலணு) செலவு செய்வானுகில் அவன் ஆயிரம் திர்ஹம் செலவு செய்தவனுக்கொப்பாவான். ஹஜ்ஜாகிறது இஸ்லாத்தின் மூல கருமங்களில் ஒன்றென்பதை நீங்களறிவீர்கள். மேலும் நபிபெருமான் (ஸல்) அவர்கள் அருளிச்செய்திருக்கிறார்கள். அதாவது, "மேன்மையான கஅபத்துல்லாவுக்குப் போகக்கூடிய வாகனத்தையும், பொருளையும் ஒருவன் வைத்துக்கொண்டு ஹஜ்ஜு செய்யாமலிருப்பானுகில், ஹஜ்ஜை விட்டதின் பேரில் அவனை நரகத்திலிட்டு வேதனை செய்யப்படும்," என. ஹலாலான (பரிசுத்தமான) முதலினின்றும் ஹஜ்ஜு செய்பவனது கற்பாக்கியத்திற்கு யாது சொல்வேன்? அல்லா(ஹ்) திருமறையில் அருளிச்செய்த பிரகாரம் ஹஜ்ஜாகின்றது சக்திபெற்றவன்மீது பர்லாகும் (அவசியமான கடமையாகும்.) யாதொருவன் இயலாதகாரணத்தால சக்தி பெறுமலிருக்க, சுவால்செய்து பொருள் சேகரித்துக்கொண்டு ஹஜ்ஜு செய்யவேண்டியது அவசியமில்லை. ஏனுனல் சுவால் செய்து வாங்கின பொருளைக்கொண்டு ஹஜ்ஜு செய்வதை அல்லா(ஹ்) ஒப்புக்கொள்வதில்லை. யாதொருவன் சுவால்

செய்து வாங்கின ஹறாமான பொருளைக்கொண்டு ஹஜ்ஜு செய்து, பின்பு லப்பைக்க அல்லாஹும்ம லப்பைக்(இஃது ஹஜ்ஜுசெய்யும் காலங்களில் அடிக்கடி ஆண்டவனுக்குத் தன் வழிப்படுதலை வெளியாக்கும்பொருட்டு சொல்லக்கூடிய வார்த்தை. இதன் பொருள்:— அடிபணிந்தேன், ஆண்டவா! அடிபணிந்தேன், என்பதாகும்.) எனச்சொல்லுவானாகில், லப்பைகவுமில்லை ஸஅதைகவுமில்லை, உன்னுடைய இந்த ஹஜ்ஜை ஒப்புக்கொள்ளாமல் உன்மீதே திருப்பப்படும், என அல்லா(ஹ்)வின் புறத்திலிருந்து சப்தமிடப்படும். யாதொருவன் ஹறாமான முதலைச்சேகரஞ் செய்வானாகில் சமீபத்தில் துயரப்படுவான். புறம், கோள், விபசாரம், பொய் பழிப்புக்கிடமான காரியங்கள், பழைய புதிய பித்அத்துகள் ஆகியவைகளைப் பயந்துகொள்ளுங்கள். (பித்அத்தென்பது நபிபெருமான் (ஸல்) அவர்களின் காலத்திலும், அவர்களின் தோழர்களில் மூன்று தலைமுறை வரையிலுள்ளவர்களின் காலத்திலும் நடைபெறாத சொல், செயல், முதலியவைகளி லுண்டான புதிய நடப்புகள். இதைப்பற்றி ஹதீஸுகளில் "புதிய வழக்கங்களைச்செய்பவன் நரகவாதி'' என வந்திருக்கின்றது.) இதைக் கவனியாமல் அநேக உலகவழக்கங்களி லும் மார்க்க விஷயங்களிலும், தொழுகையிலுங்கூட, "இதுதான் வழக்கம், இப்படித்தான் பெரியோர்களின் வழமை'' என வற்புறுத்தி, பல நூதன வேலைகள் செய்து பாவத்திற்கு ஆளாகிறீர்கள். நல்வான வேலைகளடங்கலையும் செய்துகொள்ளுங்கள். ஹஜ்ஜு செய்யும் நேரத்தில் நன்மைகளைக் கொள்ளைகொள்ளும் எவ்வளவோ இடங்க ளிருக்கின்றன. ஹஜ்ஜுக்காக நடக்கும்பொழுது முஸ்லிம் களின்மீது இரங்குங்கள்; பெரியார்களுக்கு மரியாதை

செய்யுங்கள்; சிறியோர்கள்மீது இரக்கப்படுங்கள்; எல்லாம் வல்ல அல்லா(ஹ்)வை அஞ்சி நடந்துகொள்ளுங்கள். எவனொருவன் இரக்கமுள்ளவனாயிருக்கின்றானோ அவன் மீது ஜனங்களும் இரங்குவார்களென நாயகவாக்கியத்தில் வந்திருக்கின்றது. அன்புள்ளவர்களின்மீது தயாளமுள்ள அல்லா(ஹ்)வும் அன்பாயிருப்பான்.

பூமியிலுள்ளவர்களின்மீது அன்பாயிருங்கள், உங்கள் மீது வானவர்கள் அன்பாயிருப்பார்கள், என நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் அருளிச்செய்தார்கள். (ஹதீஸ்.)

ஹஜ்ஜாகின்றது (அதன் காலங்கள்) நன்கறியப்பட்ட சில மாதங்களாகும் (ஷவ்வால், துல்அகஅதா, துல்ஹஜ்ஜின் பத்து நாட்கள்). இம்மாதங்களுள் ஒருவன் (ஹஜ்ஜு செய்வதாய் நிய்யத்துச்செய்வதனால்) தன்மீது ஹஜ்ஜை விதியாக்கிக்கொள்கிறான். ஹஜ்ஜில் யாதொரு துர்விஷயமுமில்லை; யாதொரு பாவங்களுமில்லை, சண்டை சச்சரவுமில்லை (அதாவது இவ்விஷயங்கள் செய்யத்தகாதவைகளென்றறிக). நலவினின்றும் நீங்கள் செய்வதை அல்லா(ஹ்) அறிவான். தயாரித்துக்கொள்ளுங்கள், நிச்சயமாய் தயாரிப்பவைகளில் தக்வா மிக நன்மையானது; அறிவுடைத்தோர்காள்! நீங்கள் என்னை (அல்லா(ஹ்)வைப்) பயந்துகொள்ளுங்கள். (அல்—குர்ஆன் 2, 197.)

---

# ஷவ்வால் மாதம்,

# மூன்றும் குத்பா.

தனக்கு வழிப்பட்டு தனது பிரியத்திற்கிணங்கினவர்கட்கு வெகுமதியையும், தனக்கு மாறுசெய்து சுய இச்சையைத் துயர்ந்தவர்கட்கு வேதனையையும் அளிப்பவனும், தன் அடிமைகள் மறைத்து வைப்பதையும் வெளிப்படுத்துவதையும் அறிபவனும், அவர்களது உணவுகளுக்கு பொறுப்பேற்று, அன்னவர்களில் எவரையும் விட்டுவிடாமலும் மறக்காமலும் இருப்பவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன் எனவும், நமது பெருமான் முஹம்மது(ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வினடிமையும், அவனது திருத்தூதரும் திருத்தூதராயவதரித்த யாவருக்கும் தலைவரும் ஆவரெனவும், சாக்ஷிபம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும் அவர்களின் கிளைஞராதி தோழர்கள், அவர்களின்மீது நன்னம்பிக்கை வைததவர்களின்மீதும், அளவிறந்த கிருபாகடாக்ஷமும் ஈடேற்றமும் சாந்தியும் அருள்புரிவாஞக.

அல்லா(ஹ்)வின் அடிமைகாள்! உங்களுக்கும்எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நல்

லுபதேசம் செய்கின்றேன். ஏனெனில், அல்லா(ஹ்)வைப் பயப்படுவது நமது கடமையாயும் நம்மை மேலான நிலைமைக்குக் கொண்டுவரும்படியானதாயும் இருக்கின்றது.

மானிடர்காள்! பரலோகத்திற்குப் பிரயாணமாகும் காலம்சமீபமாகிவிட்டது; ஆனால் நீங்கள் அல்லா(ஹ்)வுக்கு இபாதத்துச் செய்வதை மறந்தவர்களாயிருக்கின்றீர்கள். உங்களின் வயதுகள் சென்றுவிட்டன, ஆனால் நீங்கள் பாவங்களின்மீதே நிலைத்திருக்கின்றீர்கள். கியாமநாளின் அடையாளங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் வந்துகொண்டிருக்கின்றன, ஆனால் நீங்கள் அக்கிரமங்களில் பிரவேசிப்பவர்களாகவே இருக்கின்றீர்கள். இவ்வுலகில் இருந்து வாழ்வதின் மீதும், உங்கள் ஆன்மா உடலில் சதா இருப்பதின்மீதும் நம்பி இருக்கின்றீர்களோ? அல்லது அல்லா(ஹ்)வுக்கும் உங்களுக்கும் இடையில், நீங்கள் சதாவாக இவ்வுலகிலிருந்து வாழ்வதாக உடன்படிக்கை செய்யப்பட்டிருக்கின்றதா? அப்படியல்ல, அல்லா(ஹ்)வின்மீது சத்தியமாக நிச்சயமாய் நீங்கள் இவ்வுலகைவிட்டு பிரயாணமாய்விடுவீர்கள். இவ்வுலகின் இன்பங்களையும் சுகங்களையும்விட்டு பிரிந்துவிடுவீர்கள். இறந்தவர்களாக உங்களுக்குமுன் சென்றவர்களை நினைந்து நீங்கள் உணர்ச்சிபெறவேண்டாமா? இவ்வகன்ற வானங்களைப்படைத்த இரக்ஷகனின் சந்நிதானத்தில் நீங்கள் செல்லும்படி நேரிடுமென்பதை பயப்படவேண்டாமா? கியாமநாளின் அடையாளங்கள் நெருங்கிவருவதை நீங்கள் பார்க்கவில்லையா? ஹிருதயங்களில் சில, சிலவற்றைவிட்டும் பொறாமையின் காரணத்தால் விரண்டோடுவதைக் கவனிக்கவில்லையா? கெடுதிகள் பகிரங்கமாய் நடைபெறுவதை நோக்க

வில்லையா? நல்மான காரியங்களைச் செய்வதற்கு தைரியம் குறைந்துபோயிருப்பதை பார்க்கவில்லையா? பித்அத்துகள் (நபிநாயகத்தின் காலத்திலில்லாத செய்கைகள்) எங்கும் மிகுந்து பரவுகிறதைக்காணவில்லையா? பித்னக்கள் மிகைத்து வருவதையும், அமானத்துகள் மோசஞ் செய்யப்படுவதையும் காணவில்லையா? மரணத்தின்பால் அழைக்கும்படியானது உங்களை அழித்துவிடும். மேலும் உங்களைத் திடீரென நீங்கள் அறியாதவிதமாய் மவுத்து பிடித்துவிடும். (ஆகையால்) மவுத்து வந்தடுக்குமுன் எச்சரிக்கையாய் இருந்துகொள்ளுங்கள். அல்லா(ஹ்) உங்கள்மீது கருணை புரிவானாக! நீங்கள் இவ்வுலகைவிட்டுத் தவறுமுன்னும், அல்லா(ஹ்)வினிடத்தில் உங்கள் தவங்களை எடுத்துக்காட்டுமுன்னும், இரகசியங்கள் வெளியாகுமுன்னும், விடுதலை பெறுவது கஷ்டமாகுமுன்னும், பதிலுக்குபதில் வாங்கும்படியான நாள் வருமுன்னும், சிரசுகளின்மீது சூரியன் (ஒரு பாகம் உயரமளவு சமீபமாக) முடுகுமுன்னும், உயிர்களும் ஆன்மாக்களும் கஷ்டமடையுமுன்னும், ஆகிரத்திற்காக நன்மைகளைச் சம்பாதித்துக்கொள்ளுங்கள். வயதை வீணாக்காதீர்கள்; சென்ற வயது திரும்ப வராது.

அல்லா(ஹ்)வையஞ்சி அழாமல் கண்கள் கெட்டியாயிருத்தலும் (ஈயாமல், இரங்காமல்) வன்னெஞ்சாயிருத்தலும், பேராவலும் மேலெண்ணமும் (நாளுக்குநாள்) மிகைத்தலும், ஆக இந்நான்கு காரியங்களும் துற்பாக்கியமானவைகளென நபிகள்பிரான் (ஸல்) அவர்கள் அருளிச்செய்தார்கள். மேலும், ஒரு கூட்டத்தில் சீமானாகவிருந்து வறுமையடைந்தவன், ஒரு கூட்டத்தில் மதிக்கப்பெற்று மதிப்பை இழந்த

வன், ஜாஹில்களால் பரிகசிக்கப்படுகிற பகீஹ் (புத்தியுடையவன்) ஆகிய இம்மூன்று பெயரின்மீதும் இரக்கப்படுங்களென நபிகள்பிரான் (ஸல்) அவர்கள் அருளிச்செய்தார்கள். (ஹதீஸ்.)

ஆதமின் (அலை) புத்திரர்காள்! ஷைதானுக்கு நீங்கள் வழிப்படவேண்டாம், ஏனெனில் நிச்சயமாய் அவன் உங்களுக்கு பகிரங்கமான பகைவன்; மேலும் என்னையே வணங்குங்கள்: என(நபிமார்களின் வாயிலாக)உங்களிடத்தில் நான் அல்லா(ஹ்) அறுதி வாங்கவில்லையா? இதுவே நேரானவழியாகும்; உங்களிலிருந்து அனேக ஜனங்களை அவன் (ஷைதான்) வழிகெடுத்துவிட்டான். நீங்கள் (அவன் வழிகெடுத்ததை) அறிந்திருக்கவில்லையா? (மேலும் வழிகெடுக்கப்பட்டவர்கட்கு ஆகிரத்தில் சொல்லப்படும்.) இதுதான் உங்களுக்கு வாக்களிக்கப்பட்டிருந்த ஜஹன்னம்: மாறுசெய்த காரணத்தினால் இன்று இதில் நீங்கள் புகுதுங்கள்! (அல்—குர்ஆன், 36 : 60—64.)

---

# ஷவ்வால் மாதம்,

# நான்காம் குத்பா.

தன் இராஜாங்கத்திலும், நியமமாயிருப்பதிலும், தனிமையுடையவனும், என்றென்றும் தூய்மையாயிருப்பதுடன் கல்களுக்கு தோற்றுதவனும், தன் அடிமைகளின்மீது அதிகாரம் செய்பவனும், அவனது உத்திரவை மறுக்கவும் அவனது தீர்ப்பை விலக்கவும் எவராலும் இயலாத அவ்வளவு வன்மையுள்ளவனும், தன் அடிமைகளுக்கிடையில் அவர்களின் உணவுகளையும் அவரவர்களின் ஆயுளின் முடிவுகளையும் கற்பிப்பவனும், கொடுக்கவும், தடுக்கவும், எவரையும் நற்பாக்கிய துற்பாக்கியமுள்ளவர்களாக ஆக்கவும் சக்தியுடையவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத் தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன் எனவும் நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வினடிமையும், அவனது திருத்தூதரும், திருத்தூதராயவதரித்த யாவருக்கும் தலைவரும் ஆவரெனவும் சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும், அவர்களின் கிளைஞராதி தோழர்கள், அவர்களின்மீது நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீதும் அள

லிவிருந்த கிருபாகடாக்ஷமும், ஈடேற்றமும், சாந்தியும் அருள் புரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகாள்! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நல்லுபதேசம் செய்கின்றேன்; ஏனென்னில் அல்லா(ஹ்)வைப் பயப்படுவது நமது கடமையாயும் நம்மை மேலான நிலைமைக்குக் கொண்டுவரும்படியானதாயும் இருக்கின்றது.

சகோதரர்காள்! அல்லா(ஹ்)வை அஞ்சும்படி மீளவும் நற்போதனை செய்கின்றேன்; ஏனென்னில் அவனையஞ்சினவனே ஜயமடைவான். பாவங்களைவிட்டும் விலகிக்கொள்ளும்படி உங்களுக்கு அச்சமூட்டுகின்றேன்; ஏனென்னில் தன் எஜமானனுக்கு மாறுசெய்பவனே துர்ப்பாக்கியமுள்ளவனாவான். அல்லா(ஹ்)வுக்கு வழிப்படுவதை பத்திரமாய்ப் பிடித்துக்கொள்ளுங்கள்; அல்லா(ஹ்)வுக்குத் தொண்டுபுரிவதில்தான் அவனுக்கு பிரியமுண்டாயிருக்கின்றது. கெட்ட இச்சைகளுக்கு வழிப்படுவதைவிட்டும் உங்களை விலக்குகின்றேன். அவ்விச்சைகளுக்கு வழிப்பட்டவன் நிச்சயமாய் வழிதவறினவனாவான். உங்களது ஆயுள் முடியுமுன் தவ்பாவை தீவிரமாக்கும்படி உங்களை ஏவுகின்றேன். அறிந்து கொள்வீர்களாக! அல்லா(ஹ்)வின் அடிமைகாள்! எவனொருவன் அல்லா(ஹ்)வை ஞாபகஞ்செய்கின்றானோ அன்னவனை அல்லா(ஹ்)வும் ஞாபகம் செய்கின்றான். உங்களின் ஆன்மாவுக்காக நன்மையான வேலைகளிலிருந்து எதை நீங்கள் செய்கின்றீர்களோ அதன் பலனை நீங்கள் அவ்விடத்தில் பெற்றுக்கொள்வீர்கள். உங்களது இந்த பிந்தின காலத்தைப்பந்துகொள்ளுங்கள். காரணமாவது: நன்மைகள்

குறைந்து விட்டன; நோய்கள் மலிந்துவிட்டன; ஒரு வருக்கொருவர் தொந்தரவு கொடுப்பது அதிகமாய் விட்டது; நம்மில் ஒவ்வொருவரும் இவ்வற்ப உலகின் சம்பாத்தியத்தின்மீதே ஞாபகமாய் இருக்கிறார்கள். மவுத்தை மறந்தவர்கள் அதை நினைப்பதேயில்லை. (வலாஹவ்ல வலாகுவ்வத இல்லாபில்லாஹி) மார்க்கம் அதன் ஆரம்பத்திலிருந்ததுபோலவே ஏழையாகிவிட்டது. ஆந்தோ! பகீதாயும், ஹிருதயங்கள் செய்த குற்றங்கள் வெளியாகும் அந்நாளையில் நீங்கள் என்ன தந்திரம் செய்வீர்களோ! அந்நாளையில் நமது அவயவங்கள் நம்மீது சாக்ஷிபகரும். அந்நாளின் அதிகாரி அல்லா(ஹ்)வாயிருப்பான் அந்த நாளில் ஒரு ஆன்மாவுக்கு மற்றொரு ஆன்மா எந்த வஸ்துவையும் அளிக்காது. அந்நாளின் விஷயங்கள் அல்லா(ஹ்)வுக்கே சொந்தமானவைகளாகும்.

சகோதரர்காள்! எத்தனையோ உபந்நியாசங்களை நீங்கள் காதினால் கேட்டிருந்தும், அவைகளை வாசித்துணர்ந்திருந்தும், கவனக்குறைவினாலோ, அல்லது மனங்கள் இறுகிக் கல்லைப்போல் கெட்டியாய்விட்டதனாலோ, அதன் பிரகாரம் நடப்பது அபூர்வமாயிருக்கின்றது. உங்கள் குறைகளை நிவர்த்தித்துக்கொள்ள நீங்கள் எவ்வித முயற்சியும் தேடிக்கொள்ளுவதில்லை. தொழுகையில் சப்புகளை நேராக நிற்கும்படி அதற்கென பல ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தும் கோணலாகவே நின்று சாதிக்கின்றீர்கள். சப்புகளை நேராக்கும் விஷயத்தில் நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் எவ்வளவோ சிரமமெடுத்துக்கொண்டதாக ஹதீஸுகளில் வந்திருக்கின்றது. அதையேனும் இனி உணருவீர்களாக!

ஹதீஸ் :—நிச்சயமாய் காலமாகிறது வானம் பூமிகளை சிருஷ்டித்த அன்று இருந்ததுபோலவே சுற்றிக்கொண்டிருக்கின்றது. வருஷத்திற்கு பன்னிரண்டு மாதம், அதினின்றும் தொடர்ந்துவரும்படியான துல்கஅதா, துல் ஹஜ்ஜு, முஹற்றம் ஆகிய இம்மூன்று மாதங்களும், ஜமாதுல் ஆகிருக்கும் ஷஅபானுக்கும் இடையிலுள்ள ரஜபுமாதமும், ஆக இந்நான்கு மாதங்களும் சிறப்புவாய்ந்த மாதங்களாம். (புகாரீ, முஸ்லிம்) "மேலும் காலம் செல்லச் செல்ல கல்வி குறைகின்றது, உலோபித்தனம் தரிபட்டுவிடுகின்றது, பித்னாக்கள் வெளியாகிக்கொண்டிருக்கின்றன, ஹராஜ் மிகுதமாகின்றது" என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அருளிச்செய்தபொழுது, ஹராஜ் என்பதென்ன? அல்லா(ஹ்)வின் திருத்தூதரே! என வினவினார்கள். (அப்பொழுது) கொலை செய்வது என நாயகம் (ஸல்) அருளிச் செய்தார்கள். (புகாரீ.)

அல்லா(ஹ்)வின் பகைவர்களை நரகத்தளவில் எழுப்பப்படும்நாளை, (நபியே! ஞாபகப்படுத்துவீராக.) அந்த நரகத்திற்கு வருமளவும் அன்னவர்கள் இழுக்கப்படுவார்கள். அவர்களுக்கு (பிரதிகூலமாக) அவர்களின் செவிகளும், கண்களும், தோலிகளும் அவர்கள் செய்ததை சாக்ஷி பகரும். மேலும், அவர்கள் ஏன் சாக்ஷி சொன்னீர்களென தங்களது தோலிகளுக்குச் சொல்லுவார்கள். ஒவ்வொரு வஸ்துக்களையும் பேசும்படி செய்பவனாகிய அல்லா(ஹ்) எங்களை பேசும்படி செய்தானென (அவயங்கள்)சொல்லும். மேலும் அவன் ஆரம்பத்தில் உங்களைச் சிருஷ்டித்தான். அவன்பால்தாம் நீங்கள் மீட்கப்படுவீர்கள். உங்களின்மீது

உங்களது கேள்விகளும், பார்வைகளும், தோல்களும், சாக்ஷி பகருவதைவிட்டும் (பாவங்களைச் செய்யும்போது) நீங்கள் மறைத்தவர்களாயிருக்கவில்லை. எனினும், நீங்கள் செய்வதில் மிகுந்ததை அல்லா(ஹ்) அறியமாட்டானென எண்ணிக்கொண்டீர்கள்."

(அல்—குர்ஆன், 41 : 19-22)

---

## துல்கஅதா மாதம்,

# முதலாம் குத்பா.

இனங்களில் பெரிய இனமாகிய இஸ்லாமிய மதத்தை நமக்குக்கொடுத்தருளி தன் கிருபையினால் உபகாரஞ்செய்தவனும், நீதமாக அதிகாரம் செய்வதுடன் அன்பென்னும் குணத்தைக்கொண்டு வருணிக்கப்பெற்றவனும், ஓரிடத்தை விட்டுத் திரும்புதல், நீங்குதல், முதலிய குணங்களை விட்டும் தூய்மையானவனும், எவ்விதத்திலும் வருணிக்கமுடியாதவனும், தனது அறிவை லவ்ஹுல் கலம் முதலிய எவ்வஸ்துவும் அடக்கிக்கொள்ள முடியாத வருணையுள்ளவனுமாகிய அல்லாஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத்தவிரவேறு ஆண்டவனில்லை. அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், மானிடர்களை சிருஷ்டித்து அவர்களின் உணவுகளை திட்டப்படுத்தியவனெனவும் நிச்சயமாய் நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதரெனவும், மானிடகோடிகளுக்கு ஆண்டகையின் தூதராய் அனுப்பப்பட்டு, தீமையினின்றும் அச்சமூட்டி, நன்மையைக்கொண்டு நன்மாராயம் சொன்னவர்களெனவும் சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும், அன்னவர்களின் கிளைஞராதிதோழர்கள்மீதும்.

அவர்களின்மீது நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீதும், கிருபையையும், அளவிறந்த ஈடேற்றமும், சாந்தியும் எந் நாளும் அருள்புரிவாளுக!

மானிடர்காள்! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப்பயந்து நடக்கும்படி நற்போதனைசெய்கின் றேன். அவனைப்பயந்து நடப்பது அவனின் அன்பைப் பெருக்கி அவனது திருவடியில் மகிழ்ச்சியுறச் சேர்ப்பிவிக் கும். மேலும் தீயகன்மங்களைவிட்டும் விலகிக்கொள்ளும்படி உங்களுக்கு ஏவுகின்றேன். அப்படி விலகி நடப்பதானது அவனது ஆனந்தத்திற்குள்ளாக்கிவிடும்.

அல்லா(ஹ்)வின் அடிமைகாள்! நம்மையும் உங்களை யும், அல்லா(ஹ்) கெடுதிகளையும் வேதனையையும் விட்டு காப்பாற்றுவாளுக. தன் அழகினுல் இவ்வுலகம் உங்களை யேமாற்றிவிடவேண்டாம். ஏனெனில் அதன் முடிவு அழிவா யிருக்கும். இவ்வுலகம் உங்களை முன்னேக்குமானுல் ஒரு சமயம் பிற்காட்டவும்செய்யும்; தெளிவடையுமானுல் களங் கமுடையதாக ஆக்கவுங்கூடும்; இன்பமாக தோன்றுமாகில் கசப்புடையதாகவும் ஆகிவிடும்; நம்பினுல்மோசஞ்செய்யவும் கூடும்; ஏவ்வித வாக்குறுதியையும், சொல் நாணயத்தையும் காப்பாற்றினதல்ல. இவ்வுலகத்தை நாம் சமீபிப்பது தூர மாகுவதாயும், அதை இலேசாக நினைப்பது கஷ்டமாயும், அதன் இன்பம் கசப்பாயும், அதன் சுவாத்தியம் வியாதி யாயும் வந்து சம்பவிக்கும். இவ்வுலகம் எத்தனையோ பெயர்களுக்கு தனத்தைக்கொடுத்து ஏழையாக்கிவிட்டது! எத்தனையோ பேர்களை சிரிக்கவைத்து அழச்செய்து விட்டது! உம்மத்துகளினின்றும் அநேகம் பேர்களை நாச

மாக்கிவிட்டது! மானிட பிதாவாகிய ஆதம் (அலை) அவர்களெங்கே! சக்திவாய்ந்த அரசர்களெங்கே? வம்பர்களான இராஜாக்களெங்கே? ஜனங்களிடையில் அதிக்கிரமஞ் செய்தவர்களெங்கே? பிர்அவன், ஹாமான், இன்னும் நாகரீகமான பேச்சையுடையவர்களெங்கே? இவ்வுலகைத் தேடி ஜெயமடைந்தவர்களெங்கே? அதிகாரஞ்செய்து நியமமாயிருப்போமெனக்கருதிபவர்களெங்கே? அல்லா(ஹ்) வின் மீதாணையாக இவர்களை சிருஷ்டித்த அல்லா(ஹ்) அழித்துவிட்டான். இன்னவர்களை இவ்வுலகின்கண் சேகரஞ்செய்தவன் சின்னபின்னமாக்கிவிட்டான். மரணத்தின் குடிப்பை இவர்களுக்கு புகட்டிவிட்டான். மவுத்தாகி அழிந்தபின் இனி அவர்களை திரும்ப எழுப்புவான். இவ்வுலகம் ஏறுபவனது ஏறுவாகனத்திற்கொப்பாகும். வாகனம் சவாரிசெய்பவன் நாடியவிதமாய்ச் செல்லும், எனினும் இவ்வுலகமாகிய ஏறுவாகனமாகிறது. தன்மீதேறுபவர்களை தனது இஷ்டப்படி திருப்பும் வல்லமையுள்ளது. இவ்வுலகில் சிக்குண்டு பாவங்களைச்செய்பவர்காள்! நீர் சொரிந்தழுங்கள், இரகசியங்களை அறிபவனாகிய அல்லா(ஹ்) வின்பக்கம் திரும்புங்கள், கலப்பற்ற எண்ணத்தோடு கண்ணீர் சொரிவதனாலும், துயரப்படுவதனாலும் உங்களது ஆன்மாக்களை பாவங்களைவிட்டும் கழுவிச் சுத்தஞ்செய்யுங்கள். அக்கிரமஞ்செய்யப்பட்டவனது துஆவை பயந்து கொள்ளுங்கள்! ஏனெனில், நிச்சயமாய் அவனது துஆவைக் கேட்டு அல்லா(ஹ்) கோபமாகுவதுடன் அவன் கேட்பதே போல் உத்திரவளித்தும் விடுவான்.

அபூபக்கர் (ரலி) அவர்கள் தாங்கள் செய்த உபந்நியாசங்களில் ஒன்றில் திருவுளமானார்கள்: — மானிடர்காள்!

நீங்கள், “ஏ! நம்பிக்கைகொண்டவர்காள்! உங்களின் ஆன் மாக்களை கவனித்துக்கொள்ளுங்கள்; வழிதவறினவன் உங் களை யாதொரு தொந்தரவும் செய்வதில்லை, நீங்கள் நேர் வழியிலிருப்பீர்களாகில்” என்ற இந்த ஆயத்தை ஓது கிறீர்கள்: எனினும் இதற்கு தப்பான விபாக்யானம் (அதா வது ஒருவன் செய்த பாவம் நம்மை பாதிக்காதென) செய் கின்றீர்கள்: நபிபெருமான் (ஸல்) அவர்கள் சொன்னதை நிச்சயமாய் கேள்விப்பட்டிருக்கிறேன்:— “ஒருவன் ஒரு பாவத்தைச் செய்யாமல் அருவருக்துக் கொண்டிருக்கும் பொழுது அவனுலிருக்கும் ஒரு கூட்டத்தார் அப்பா வத்தை செய்வதில்லை; அல்லா(ஹ்) தன்பாலிருந்து வேதனை யைக்கொண்டு இவர்களனைவரையும் (அருவருத்தவனுள் பட) அழித்தேயொழிய” என. ஆகவே ஒருவனது பாவம் நம்மை ஒன்றும் பாதிக்காதென நினைப்பது தவறெனவும், அவர்களுள் இவன் கலந்து உறவாடுங்காலமெல்லாம் இவனையும் அவர்களுக்கிறங்கும் வேதனை சாருமெனவும் உணர்க!

இவ்வுலகம் ஏமாற்றக்கூடியதாகவே ஒழியவேறு இல்லை. உங்கள் இரக்ஷகனினின்றும் உண்டாகும் பாவம் பொறுக் குதலளிலும், வானம் பூமியைப்போலும் (அவ்வளவு விஸ் தீரணமாயுள்ள) சுவனலோகத்தளவிலும் முந்துங்கள். அல்லா(ஹ்)வின்மீதும், அவன் திருத்தூதர்களின்மீதும், நம்பிக்கைவைத்தவர்களுக்காக அந்த சுவர்க்கம் தயாரிக்கப் பட்டிருக்கின்றது: அஃது அல்லா(ஹ்)வின் அருள்; அதை தான் நாடியபேர்களுக்குக்கொடுப்பான். அல்லா(ஹ்) மஹா அருளுடையவனுயிருக்கின்ருன்.

(அல்-குர்ஆன், 57: 20-21.)

துல்கஅதா மாதம்,

# இரண்டாம் குத்பா.

மெய்யான எண்ணத்துடன் தன்மீது நம்பிக்கை வைத் தவர்களை காப்பாற்றுபவனும், ஷரீஅத்தைத் தழுவி தன்பால் சேர ஒருவன் விருப்புவானுகில் அவனை சமீபத்திலாக்கிக் கொள்பவனும், ஒருவன் கலப்பற்ற துஆக்களைக்கொண்டு கேட்கும்பொழுது ஜவாபுகொடுத்து அதன்படிசெய்பவனும் பகையர்களின்மீதும், பொறுமைக்காரர்களின்மீதும், தன் னிடத்தில் உதவி தேடும்பொழுது உதவி புரிவோனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சய் மாய் அல்லா(ஹ்)வைத்தவிர வேறு ஆண்டவனில்லை, அவன் தனித்தவன் இணைதுணையற்றவன், மானிடர்களை சிருஷ் டித்து அவர்களின் உணவுகளை திட்டப்படுத்திபவனெனவும், நிச்சயமாய் நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதரெனவும்,மானிடகோடிகளுக்கு ஆண்டகையின் தூதராய் அனுப்பப்பட்டு, தீமையினின்றும் அச்சம்பூட்டி நன்மையைக்கொண்டு நன்மாராயம் சொன்ன வர்களெனவும் சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்க ளின்மீதும், அன்னவர்களின் கிளைஞாதி தோழர்கள்மீதும், அவர்களின்மீது நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீதும்,

கிருபையும், அளவிறந்த ஈடேற்றமும், சாந்தியும், எந் நாளும் அருள்புரிவானாக.

மானிடர்காள்! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நற்போதனை செய்கின்றேன். அவனைப்பயந்து நடப்பது அவனின் அன்பைப் பெருக்கி அவனது திருவடியில் மகிழ்ச்சியுறச் சேர்ப்பிக்கும். மேலும் தீயகன்மங்களை விட்டும் விலகிக்கொள்ளும்படி உங்களுக்கு ஏவுகின்றேன். அப்படி விலகி நடப்பதானது அவனது ஆனந்தத்திற்குள்ளாக்கிவிடும்.

அல்லா(ஹ்)வின் அடிமைகாள்! அல்லா(ஹ்)வின் பேரில் நன்னம்பிக்கை வையுங்கள்; ஏனெனில் அவன் கற்பித்ததும், நடத்தியதும்தவிர உங்களுக்கு வேறொன்றுமில்லை. அவனது சம்மதத்தளவிலேயே சேருங்கள். நம்முடைய நாட்டம் அதைத்தவிர வேறில்லை. உலகத்தின் சுகவாழ்க்கைகளில் உங்களைப்பார்க்கினும் தாழ்ந்தவர்களை நோட்டமிடுங்கள். அப்பொழுதுதான் அல்லா(ஹ்)வின் நன்கொடைகளுக்கு நன்றிசெய்வீர்கள். இவ்வுகில் அல்லா(ஹ்) பாக்கியம் கொடுத்தவர்களில் உங்களைவிட மேலானவர்களை நோட்டமிடாதீர்கள். நிச்சயமாயது முஸ்லிமின் பேரில் பொறாமை கொள்ளல், கோபப்படுத்தல், பகைத்தல், அவனை தொந்தரவுசெய்தல், ஆகியவைகளில் உங்களைச் சேர்ப்பிக்கும். பொறாமைப்படுவதின் முடிவுயாதென அறிவீர்களோ? மெய்யான அல்லா(ஹ்)வை அக்கிரமஸ்தன் எனச்சொல்லுவதும், அவனிட்ட ஆக்ஞைகளில் அவனைக் குறைகூறுவதுமேயாகும் இப்லீஸ் காபிராய்ப் போனதற்கும், அவன் அல்லா(ஹ்)வின் அருளைவிட்டு அப்புறப்

படுத்தப்பட்டதற்கும், தாழ்மையடைந்ததற்கும் காரணம், நமது பிதாவாகிய ஆதம் (அலை) அவர்களின்பேரில் பொறுமைப்பட்டது, தன் எஜமானனாகிய அல்லா(ஹ்)வை எதிர்த்துக்கேட்டதுமேயொழிய வேறில்லை என்பதை நீங்கள் உணரவேண்டும். இதினின்றும் பொறுமை மகா கொடியதென்பதை நன்குணரலாம். பொறுமையுடையவன், அவன் எவ்வளவு மேலான பதவியையும் சிறப்பையும் பெற்றிருந்த போதிலும், தலைமை வகிக்கமுடியாது. எனவே உங்களில் ஒவ்வொருவரும் தனக்கு வேண்டாததை விட்டுவிட்டு வேண்டுமானதின்பேரில் ஞாபகத்தைச்செலுத்தவும். உங்களில்ஒருவர் மற்றொருவர்மீது அக்கிரமம்செய்யவேண்டாம். ஏனெனில் அல்லா(ஹ்) அக்கிரமம் செய்பவர்களை நாசமாக்கிவிடுவான். உங்களின் எண்ணங்களில் பெரும்பாலானதை இவ்வுலக விஷயத்திலேயே ஆக்கிவிடவேண்டாம். உலக இச்சையில் சிக்குண்டு வழிப்பட்டவர்களில் அனேகரை இவ்வுலகம் நஷ்டமடையும்படி செய்துவிட்டது. உங்களின் எண்ணங்களை பெரும்பாலும் ஆகிரத்தின்பேரில் திருப்பிக்கொள்ளுங்கள். அதுவே நிலையானதும், நித்தியமானதுமான வீடாகும். அறிந்துகொள்ளுங்கள்! உலகத்தைத் தேடினவன் ஆகிரத்தின் பலனில் கொஞ்சத்தையோ அல்லது முழுவதையுமோ இழந்துவிடுவான். அதனுடன் இவ்வுலகத்தினின்றும் அவன் நாடி இச்சித்ததையும் பெற்றுக்கொள்வதில்லை. ஆகிரத்தை தேடினவனோ அப்படியல்ல; தான் இச்சித்ததையும் பெற்றுக்கொள்ளுவதுடன், செய்த நன்மைகளுக்கு இவ்வுலகிலேயே சன்மானமும் கொடுக்கப்படுவான்.

“நெருப்பு விறகைத்தின்பதேபோல் பொறாமை நன்மைகளைத்தின்றுவிடும். மேலும் தண்ணீர் நெருப்பை அவிப்பதைப்போல் சதகா (தர்மம்) பாவங்களை அழித்துவிடும். மேலும் தொழுகையானது மூமினுக்கு பிரகாசமாயும் நோன்பு அவனை நரகத்தைவிட்டும் தப்புவிக்கும்படியான பரிசாகவுமிருக்கின்றது.” என, நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் அருளிச்செய்தார்கள் (ஹதீஸ்.)

ஏ! நன்னம்பிக்கை கொண்டவர்காள்! அல்லா(ஹ்)வின் ஞாபகத்தைவிட்டும், உங்களுடைய சந்ததிகளும், உங்களுடைய பொருள்களும், உங்களை வீண் பாரக்கிலாக்கிவிடவேண்டாம். (அப்படி) அதைச்செய்வார்களாகில் அவர்கள் தாம் நஷ்டமுடையவர்கள். உங்களிலொருவனுக்கு மரணம் வந்து, அவன் “எனது இரக்ஷகா! சமீபகாலம்வரை என்னை நீ பிற்படுத்திவை, அப்பொழுது யான் தர்மம்செய்து நல்லோர்களில் ஆகிவிடுவேன்” என சொல்லுவதற்குமுன், உங்களுக்கு நாம் கொடுத்த பொருளிலிருந்து செலவு செய்துகொள்ளுங்கள். முடிவுகாலம் வந்துவிடுமாயின் யாதொரு ஆன்மாவையும் அல்லா(ஹ்) பிற்படுத்தமாட்டான். அல்லா(ஹ்) நீங்கள் செய்பவைகளை மிக அறிபவன். (அல்—குர் ஆன், 63 : 9-11.)

---

# துல்கஅதா மாதம்,

# மூன்றும் குத்பா.

தனியாயிருத்தல், அடக்கியாளுதல், கொடைகொடுத்தல், பொறுக்குதல், முதலிய குணங்களையுடையவனும், இணை துணையை விட்டும் தூய்மையானவனும், அவன் நாடியதை ஆக்கவும் அழிக்கவும்வல்லமைபொருந்தியவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும்உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத்தவிர வேறுஆண்டவனில்லை, அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், மானிடர்களை சிருஷ்டித்து அவர்களின் உணவுகளை திட்டப்படுத்தியவனெனவும், நிச்சயமாய் நாது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதரெனவும் மானிடகோடிகளுக்கு ஆண்டகையின் தூதராய் அனுப்பப்பட்டு, தீமையினின்றும் அச்சம் பூட்டி நன்மையைக்கொண்டு நன்மாராயம் சொன்னவர்களெனவும் சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும், அன்னவர்களின் கிளைஞராதி தோழர்கள் மீதும், அவர்களின்மீது நன்னம்பிக்கை வைத்தவர்களின் மீதும், கிருபையும், அளவிறந்த ஈடேற்றமும் சாந்தியும், எந்நாளும் அருள்புரிவானாக.

மானிடர்காள்! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப்பயந்து நடக்கும்படி நற்போதனைசெய்கின்

றேன். அவனைப்பயந்து நடப்பது அவனின் அன்பைப் பெருக்கி அவனது திருவடியில் மகிழ்ச்சியுறச் சேர்ப்பிவிக்கும். மேலும் தீயகன்மங்களைவிட்டுப் விலகிக்கொள்ளும்படி உங்களுக்கு ஏவுகின்றேன். அப்படி விலகி நடப்பதானது அவனது ஆனந்தத்திற்குள்ளாக்கிவிடும்.

மானிடர்காள்! உங்களின் ஆயுள் சென்றுகொண்டே இருக்கின்றது. கூடிய சீக்கிரம் இவ்வுலகைவிட்டு நீங்கள் பிரிந்து, யாதொரு சிநேகிதனும், யாதொரு அயல் வீட்டானும், உங்களுக்கு கிடைக்காத ஓரிடத்தைச் சேரும்படி நேரிடும். நதிகளின் இன்பமான நீரைப்பருகி, உயர்ந்த மாளிகைகளிலிருந்ததற்கு பதிலாய், கபர்களாகிய மண்ணறைகளில் குடியிருப்பீர்கள். அக்குழிகள் சுவர்க்கத்தின் பூங்காவனங்களினின்றும் ஒரு பூங்காவனமாகவோ அல்லது நரகலோகத்தின் குழிகளினின்றும் ஒரு குழியாகவோ ஆகிவிடும் பின்பு அங்கிருந்து பார்வைகள் மேல்நோக்கி நிற்கும்படியான ஓர் ஸ்தானத்தின்பால் நீங்கள் இழுக்கப்படுவீர்கள். அங்கு உங்கள் இரகசியங்களை எல்லாம் வெளிப்படுத்தப்படும். கஅபுல் அஹ்பார்(ரலி) அவர்கள் சொல்லியிருக்கின்றார்கள்—"ஜனங்கள் (இறுதிநாளின் மைதானத்தில்) எழுபதினாயிரம்வருடம் யாதொன்றையும் புசிக்காமலும் அருந்தாமலும் நிற்பார்கள்; மேலும் அல்லா(ஹ்)வும் அவர்களை இரங்கிப் பார்க்கமாட்டான். மழை பெய்வதற்கொப்பாக கண்ணீர் சொரிந்தழுவார்கள். அப்படியழுதபின் கண்ணில் நீரில்லாமலாகிவிடும். அப்பொழுது இரத்த நீராக அழுவார்கள்." மேலும் சொல்லப்பட்டிருக்கிறது:—அல்லா(ஹ)வின் தூதரே! ஆண்களும் பெண்களும், நிர்வாணிகளாகவும், செருப்பற்றவர்களாகவும்

(அந்த இறுதிநாளையில்) நிற்பார்களா? என ஆயிஷா (ரலி) அவர்கள் வினவினர்கள். அப்பொழுது மெய்தானென நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அருளிச்செய்தார்கள். "வெட்கமே! மானக்குறைவே! இரக்ஷகா! நரகத்தின் வேதனையை விட்டும் (எங்களை) காப்பாற்றுவாயாக" என ஆயிஷா (ரலி) அவர்கள் சொன்னர்கள். (அதாவது அந்நாளின் கஷ்டத்தை நினைத்து உள்ளமுருகினர்கள்) அப்பொழுது நபிகள்நாயகம் (ஸல்) அவர்கள் அருளிச்செய்ததாவது:— அபீ குஹாபா (அபூபக்கர் ரலி) அவர்களின் மகளே! அந்த நாளைப்பற்றி நீ விசனிக்காதே. அல்லா(ஹ்) பொறுப்பவன், பின்னங்களை மறைப்பவன், அந்நாளில் மானிடர்களிலிருந்து ஒவ்வொருவரும் பிறரைவிட்டும் தேவையறும்படியான ஒவ்வொரு காரியத்தை உண்டுபண்ணிவிடுவான். மேலும் அந்நாளில் பார்வைகள் பார்க்கக்கூடிய நிலைமையில் இருக்கமாட்டா. அப்பொழுதுதான் (தன்வயதை) வீணுக்கினவன் வெட்கமடைந்தவனும், துயரப்பட்டவனும், ஜவாபு சொல்வதைவிட்டும் ஆண்டவன் சமுகத்தில் திகைத்தவனும் நிற்பான். எனினும் அவன் திகைத்து நிற்பவனல்ல. அவனது அவயவங்களெல்லாம் அயர்ந்துபோய்விடும். அவனின் இருகன்னங்கள் மஞ்சணித்துவிடும். நாவுகளின்பேரில் முத்திரையிடப்படும். ஒருசமயம் ஏமேற்றமடையவும் கூடும். அப்பொழுது (பெயரைச்சொல்லி) இன்னன் மகன் இன்னன் நற்பாக்கியமடைந்தானென கூப்பிடுபவர் சப்தமிடுவார். ஒரு சமயம் அவனை (தான்செய்த பாவங்களுக்காக) பிடிக்கப்படும். அப்பொழுது இன்னனுடைய மகன் இன்னன் துற்பாக்கியமுடையவனய்விட்டான், என கூப்பிடுவார்.

அலி(ரலி)சொன்னார்கள், நபிகள்நாயகம்(ஸல்)திருவாய் மலர்ந்தார்கள்:—இறுதிநாளின் பயங்கரமான செய்கைகளை நினைந்து நான் அழும்வரை என்னை ஜிப்ராயீல் (அலை) பய முறுத்தினார்கள். அப்பொழுது ஏ! ஜிப்ராயீலே! (அலை) என்னுடைய முந்தின பிந்தின பாவங்களை என்னுடைய ரப்பு (ஜல்) எனக்கு பொறுத்துவிடவில்லையா? என ஜிப்ராயீலை (அலை) நோக்கி வினவினார்கள். அதற்கு ஜிப்ராயீல் (அலை) உங்களின் பிழை பொறுக்கப்பட்டதோ அல்லவோ என்று நீங்களே சந்தேகிக்கிற அளவு அமளிகளை நீங்கள் பார்ப்பீர்கள், என பதிலுரைத்தார்கள் (ஹதீஸ்.)

நபியே! உங்களைச் சேகரஞ்செய்யும்படியான நாளை ஞாபகஞ்செய்வீராக. அந்நாளாகிறது (ஜனங்கள்) ஏமாற்றமடையும் நாளாகும். ஒருவன் அல்லா(ஹ்)வின்மீது ஈமான் கொண்டு நல்ல அமல்களைச் செய்வானாகில் அவனது பாவங்களை அல்லா(ஹ்) மன்னித்திடுவான். மேலும் அதன்கீழ் நதிகள் ஓடும்படியான சுவர்க்கலோகத்தில் அவனைப் புகுத்துவான். அதிலவர்கள் நியமமாயிருப்பார்கள். இதுவே பெரும்பாக்கியம். (அல்—குர்ஆன், 64:9.)

---

## துல்கஅதா மாதம்,

# நான்காம் குத்பா.

எக்காலத்திலும் புகழப்படுபவனும், நியமமாக வணங்கப்படுபவனும், அவனுக்கு வழிப்பட்டவர்களுக்கு கொடையையும் உபகாரத்தையும் மிகுதமாக்குபவனும், பாவங்களைப் பொறுத்து, பின்னங்களை மறைத்து, கஷ்டங்களை நிவர்த்தி செய்பவனும், மூமினனவர்களுக்கு ஒதுங்குமிடமாயுள்ளவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத்தவிர வேறு ஆண்டவனில்லை; அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், மானிடர்களை சிருஷ்டித்து அவர்களின் உணவுகளை திட்டப்படுத்தியவனெனவும், நிச்சயமாய் நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதரென்வும், மானிடகோடிகளுக்கு ஆண்டகையின் தூதராய் அனுப்பப்பட்டு, தீமையினின்றும் அச்சம்பூட்டி நன்மையைக்கொண்டு நன்மாராயம் சொன்னவர்களெனவும் சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும், அன்னவர்களின் கிளைஞராதி தோழர்கள்மீதும், அவர்களின்மீது நன்னம்பிக்கை வைத்தவர்களின்மீதும் கிருபையும், அளவிறந்த ஈடேற்றமும் சாந்தியும், எந்நாளும் அருள்புரிவானாக.

மானிடர்காள்! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப்பயந்து நடக்கும்படி நற்போதனை செய்கின்றேன். அவனைப்பயந்து நடப்பது அவனின் அன்பைப் பெருக்கி அவனது திருவடியில் மகிழ்ச்சியுறச் சேர்ப்பிவிக்கும். மேலும் தீபகன்மங்களைவிட்டும் விலகிக்கொள்ளும்படி உங்களுக்கு ஏவுகின்றேன். அப்படி விலகி நடப்பதானது அவனது ஆனந்தத்திற்குள்ளாக்கிவிடும்.

சகோதரர்காள்! நீங்கள் இஸ்லாத்தில் பிறந்து அதன் கடமைகளை நிறைவேற்றிவிட்டதாய்க் கருதுகிறீர்கள். அல்லா(ஹ்)வுக்கு வழிப்பட்டதுபோல் பர்வனை காட்டுகிறீர்கள். இஸ்லாத்தின் உண்மையான அர்த்தங்களை விளங்கிக்கொண்டதுபோல் அபிநயிக்கிறீர்கள். ஆனால் அதன் கடமைகளில் பெரும்பாலானவைகளை நீங்கள் நினைத்திருப்பதுபோல் நிறைவேற்றவில்லை. அல்லா(ஹ்)வுக்கு தலைசாய்த்ததைப் போல் பாவிப்பதல்லாமல் மெய்யாகத் தலைகுனியவில்லை. அங்ஙனமே இஸ்லாத்தின் உண்மையான அர்த்தங்களை இன்னும் நீங்கள் சரியாய் உணர்ந்துகொள்ளவில்லை. அவ்விதம் நீங்கள் சரியாய் உணர்ந்திருப்பீர்களாகில், மனிதர்களிலும் ஷைத்தான்களிலும் உண்டாயிருக்கிற, உண்டாகப் போகிற, பகைவர்களுக்குத் தகுந்த பரிகாரம் செய்திருப்பீர்கள். உங்களுக்கெதிரியாயுள்ள அவர்களை தலைதூக்கவிடாமல் அடக்கக்கூடிய பலவழிகளைச் செய்திருப்பீர்கள். உயர்ந்த மதத்தவர்களென வாதிப்பதல்லாமல் அம்மதத்தின் உயரிய நோக்கங்களையும், அவைகளின் கருத்துகளையும், அறிந்தீர்களில்லை. என்னே! உங்களின் கவனக்குறைவு. என்னே! உங்களின் அறியாமை.

உங்கள் எதிரிகளின் நோக்கங்களை காதினால் கேட்டிருந்தும், கண்களால் பார்த்திருந்தும், அவர்களின் தந்திரங்களைவிட்டும் தப்பிப்பதற்கான ஏற்பாடுகளை ஏன் இதுவரை செய்து கொள்ளவில்லை? உங்களின் ஜன்மப் பகையனான இப்லீஸும், அவனது சகாக்களாகிய ஈமானைக் கெடுக்கக்கூடியவர்களும், உங்களின் ஈமானைப்பிடுங்குவதற்காக எத்தனையோ தவறான வழிகளைக்காட்டி உங்களை இழுக்கிறார்கள். மார்க்க சட்டங்களை அனுசரிக்காமலிப்பதும், அவைகளை மீறி மனதிற்கிசைந்த விதமாய் நடப்பதும், அந்தப் பகைவர்களின் தூண்டுதலென்றே நினைக்கவேண்டும். மேலும் மார்க்க சம்பந்தமான ஒவ்வொரு காரியத்திலும் ஹிந்துக்களை அனுசரித்து நடப்பதும், ஒவ்வொரு சடங்குகளிலும் அவர்களின் நடையுடைகளைப் பின்பற்றுவதுமே உங்களை மார்க்கத்தைவிட்டுத்தூரப்படுத்தும் சாதனங்களாய்க்காணப்படுகின்றன. இஸ்லாமிய மதம் உற்பத்தியாகி பதினான்கு நூற்றாண்டுகள் சென்றும், மார்க்க சட்டங்களையும், அதன் நுட்பங்களையும் உணராமலிருப்பதும் மகா ஆச்சரியத்தை உண்டுபண்ணுகின்றது. ஒவ்வொரு பட்டணங்களிலும், ஒவ்வொரு ஊர்களிலும், ஒவ்வொரு கிராமங்களிலும், இஸ்லாத்தைக் காப்பாற்றும்பொருட்டு தகுந்த மத்ரசாக்களும், சங்கங்களும் ஏற்படாமலிருப்பது, நாம் இன்னும் க்ஷீணதிசையடைவதற்கு அறிகுறியாக இருக்கிறதென்றே கூறவேண்டும். எதிரிகள் உங்களைத்தாக்க விழித்து வேலை செய்யும் இக்காலத்தில் அதற்குப்போதிய வேலைகளை நாம் செய்யாமலிருப்பது நாம் நித்திரையினின்று இன்னும் எழும்பவில்லையென்பதையே காட்டுகிறது.

இஸ்லாத்தின் உண்மைத்தத்துவங்களையும் தற்கால முஸ்லிம்கள் செய்யவேண்டிய கடமைகளையும் கூறும் சிறிய கிதாபுகள் இயற்றி ஆண், பெண், சிறுவர், பெரியார், முதலிய ஒவ்வொருவருக்கும் வாசிக்கக் கொடுக்க வேண்டும். சகோதரர்காள்! உங்களின் மூதாதைகளையும், அன்னவர்களின் செய்கைகளையும் மறந்துவிட்டீர்கள்போலும்! இஸ்லாத்திற்காக அவர்கள் எவ்வளவு பிரயாசை எடுத்துக் கொண்டிருந்தார்களென்பதை நீங்கள் மறந்திருப்பதானது பெரும்விந்தையே. உங்களின் வீரமெங்கே? உங்களின் தியாகமெங்கே? உங்களின் பொருத்தமெங்கே? தின்பதும் பருகுவதுமே மார்க்கமென நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள் போலும். அப்படியல்ல அப்படியல்ல. விழித்தெழுங்கள். சீக்கிரமாய் வேலையை ஆரம்பியுங்கள். இல்லையேல் எதிரிகள் கையில் சீக்கிரம் அகப்பட்டுத்தீருவீர்கள்:

நபியே! நீர் சொல்வீராக. என்னுடைய ரப்பிடத்திலிருந்து, திருஷ்டாந்தரங்கள் வந்துவிட்டபொழுது, ஆண்டவனல்லாமல் நீங்கள் வணங்கும்படியானவைகளை நான் வணங்குவதை விட்டும் மெய்யாகவே விலக்கப்பட்டிருக்கிறேன்: மேலும் இவ்வுலகத்தை ரக்ஷிக்கும்படியான அல்லா(ஹ்)வுக்கே தலைகுனியும்படிக்கும் ஏவப்பட்டிருக்கிறேன். (அல்—குர் ஆன், 40 : 66.)

---

## துல்கஅதா மாதம்,

# ஐந்தாம் குத்பா.

எக்காலத்திலும் புகழப்படுபவனும், நியமமாக வணங்கப்படுபவனும், அவனுக்கு வழிப்பட்டவர்களுக்கு கொடையையும் உபகாரத்தையும் மிகுதமாக்குபவனும், பாவங்களைப் பொறுத்து, பின்னங்களை மறைத்து, கஷ்டங்களை நிவர்த்தி செய்பவனும், மூமினானவர்களுக்கு ஒதுங்குமிடமாயுள்ளவனுமாகிய அல்லாஹ்)வுக்கே புகழனைத்தும் உரியனவாகும். நிச்சயமாய் அல்லா(ஹ்)வைத்தவிர வேறு ஆண்டவனில்லை, அவன் தனித்தவன், இணைதுணையற்றவன், மானிடர்களை சிருஷ்டித்து அவர்களின் உணவுகளை திட்டப்படுத்தியவனெனவும்; நிச்சயமாய் நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதரெனவும், மானிட கோடிகளுக்கு ஆண்டகையின் தூதராய் அனுப்பப்பட்டு, தீமையினின்றும் அச்சம்பூட்டி நன்மையைக்கொண்டு நன்மாராயம் சொன்னவர்களெனவும் சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அவர்களின்மீதும், அன்னவர்களின்கிளைஞராதி தோழர்களின்மீதும், அவர்களின்மீது நன்னம்பிக்கைவைத்தவர்களின்மீதும், கிருபையும், அளவிறந்த ஈடேற்றமும், சாந்தியும், எந்நாளும் அருள்புரிவானாக.

மானிடர்காள்! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நற்போதனை செய்கின்றேன். அவனைப்பயந்து நடப்பது அவனின் அன்பைப் பெருக்கி அவனது திருவடியில் மகிழ்ச்சியுறச் சேர்ப்பிக்கும். மேலும் தீயகன்மங்களை விட்டும் விலகிக்கொள்ளும்படி உங்களுக்கு ஏவுகின்றேன். அப்படி விலகி நடப்பதானது அவனது ஆனந்தத்திற்குள்ளாக்கிவிடும்.

மானிடர்காள்! எத்தனை காலம் சென்றாலும் எவ்வளவு நாள் ஜீவித்திருந்தாலும் மரணிப்பது இன்றியமையாதது. எவ்வாறு இவ்வுலகில் உடைகோவணமின்றிப் பிறந்தீர்களோ அவ்வாறே நீங்கள் நியாயத்தீர்ப்பு நாளன்று எழுப்பப்படுவது நிச்சயம். அந்நாளில் கொடூரமான அமளிகள் நடைபெறும். மெய்யாகவே, அந்நாளில் நாம் இவ்வுலகில் அந்தரங்கமாகவும், பகிரங்கமாகவும், செய்த செய்கைகள்யாவும் வெளிப்படும் அன்றையதினத்தில் தனது குற்றங்களை மறைத்துவிடுவதற்காக எவனிடமிருந்தும் இலஞ்சம் அங்கீகரிக்கப்படமாட்டாது. இவ்விதமான கஷ்டங்களினின்றும் உங்களைக் காப்பாற்றத்தக்க நல்ல கருமங்களைச் செய்திருக்கிறீர்களா என்று நீங்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டாமா? மறைவாகவும், வெளிப்படையாகவும் செய்யும்காரியங்களில் அல்லா(ஹ்)வின் அச்சம் உங்களுக்கு உண்டாவென்று நீங்கள் கவனிக்கவேண்டாமா? அல்லா(ஹ்)உங்களைப் பார்த்துக் கொண்டிருத்தலை மறந்தவர்களாக நீங்கள் அவனது கட்டளையை மீறி நடக்கும் வெட்கக்கேட்டைக் குறித்து யாது சொல்வேன்! அல்லா(ஹ்)வின்உதவியைபெற்றுக்கொண்டே அவனுக்குப் புறங்காட்டுபவனது மானக்கேட்டை என்

னென்றுரைப்பேன்! இறுதிநாளின் கடூரமான சம்பவங்களை நீங்கள் பலமுறை கேள்வியுற்றிருக்கிறீர்கள். அவைகளினின்றும் தப்பித்துக்கொள்ளும்பொருட்டு இவ்வுலகில் நாம் செய்யவேண்டிய நற்கிரியைகள் அனந்தமிருக்கின்றன அவற்றுள் முக்கியமானதும், இஸ்லாத்திற்கு அடிப்படையானதுமான ஈமான் என்னும் விஷயத்தைக்குறித்து இன்று உங்களுக்கு ஒரு சிறிது சொல்லவிரும்புகிறேன். உங்களில் அநேகர் அல்லா(ஹ்)வின்மீது ஈமான் கொண்டிருப்பதாகக் கருதுகிறார்கள். ஈமான் கொண்டிருப்பதாகச் சொல்வது மெய்யே. எனினும் "ஈமான் எவ்வாறு கொள்ளவேண்டும்? என்ன வேலை செய்வது அல்லா(ஹ்)விடத்தில் ஈமானென்று சொல்லப்படும்? எவ்வெவைச்செய்கைகளால் அந்த ஈமான் வெறும் வாய்ப்பேச்சாகவன்றி உறுதியான ஈமானாகும்? அந்த ஈமானுக்குக் கெடுதியை உண்டாக்கும் கருமங்கள் யாவை? ஒரு முறை ஈமான் கொண்டுவிட்டு அப்பால் அதற்கு மாறான செயல்களைச்செய்துகொண்டிருத்தல் ஆகுமா?'' என்னும் விஷயங்களை அவர்கள் உணராமலே இருக்கிறார்கள். ஆதலின் அவ்விஷயத்தைச் சிறிது எடுத்துக்காட்டவேண்டியது அவசியமாக இருக்கிறது. அல்லா(ஹ்) ஒருவன் உண்டென்பதையும், அவன் மாத்திரமே சர்வ வல்லமையுடையவன் என்பதையும், அவனது சிருஷ்டிப் பொருள்களுள் எதுவும் அவனுக்குச் சமமானதல்ல என்பதையும், அறியாதாரில்லை. அங்ஙனமே மனத்தால் நம்புவதும் வாயால் மொழிவதும் ஈமானின் இரண்டு முக்கியமான பர்லென்னும் நிபந்தனைகளாம். மேலும், அவனுக்குச் சொந்தமான சிபாத்தென்னும் பண்புகளை அறியவேண்டியதும் நமது கடமையாம். அவனது சொந்தப் பண்புகளில் அவனுக்குச் சம

மாகவோ, கூட்டாகவோ, வேறு எவரும், இருப்பதாகவோ, இருக்கக்கூடுமென்றோ, நினைத்தல் கூடாது. சர்வ வல்லமை யுடைமையும், சர்வ ஜீவர்களின் தேவையைப் பூர்த்திசெய் யும் சக்தியுடைமையும், அல்லா(ஹ்)வுக்கு மாத்திரமே சொந் தமான பண்புகளாம். இவ்வாறு நம்புவதாகக் கூறிக்கொ ண்டு அல்லா(ஹ்)வின் சிருஷ்டிப்பொருள்களிடம் நேரே நாம் உதவிதேடுவது அல்லா(ஹ்)வின்பேரில் ஈமான் கொண் டதாகக் கூறுவதைப் பொய்யாக்குகிறது. ஆதலின் நாம் யாவரும் நமது பிரார்த்தனையில் அல்லா(ஹ்)வுடன் வேறு எவரையும் கூட்டாக்காத உண்மையான (மூமின்) விசுவாசி களாக விளங்குவோமாக.

நபியே! சொல்வீராக. அல்லா(ஹ்)வுக்கே தீனைச்சொந் தமாக்கிவைத்து, நிச்சயமாய் அவனையே ஓர்மைப்படுத்தி வணங்கும்படியாக என்னை ஏவப்பட்டுள்ளேன், மேலும்முஸ் லிம்களுள் முந்தினவனாக ஆயிருக்கும்படிக்கும் ஏவப்பட் டுள்ளேன். என்னுடைய ரப்புக்கு மாறுசெய்வேனாகில், நிச் சயமாய் இறுதிநாளின் வேதனையைப் பயப்படுகிறேன், என சொல்வீராக. (அல்—குர்ஆன், 39 : 10-13.)

---

# துல்ஹஜ் மாதம்,

# முதலாம் குத்பா.

எக்காலத்திலும் புகழப்படுபவனும், நியமமாக வணங்கப்படுபவனும், அவனுக்கு வழிப்பட்டவர்களுக்கு கொடையையும் உபகாரத்தையும் மிகுதமாக்குபவனும், பாவங்களைப் பொறுத்து, பின்னங்களை மறைத்து, கஷ்டங்களை நிவர்த்தி செய்து, மூமினானவர்களுக்கு ஒதுங்குமிடமாயுள்ளவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே புகழனைத்தும் உரியன. அவன் எப்படிப்பட்டவனெனின், அவனை வர்ணிக்கத் துணிந்தோரது நாவுகள் செயலற்றுப்போய்விட்டன; அவனது உண்மை நிலையை அறியத்துணிந்த ஞானிகளுடைய ஆராய்ச்சித் திறன் மழுங்கிவிட்டது. அவன், தனது பரிசுத்த ஆலயமாகும் கஃபாவை, அதைப் பிரதக்ஷணம் செய்பவருக்காகவும் அதன்கண் சரண்புகுந்திருப்போருக்காகவும், சுத்திகரித்து வைக்குமாறு தனது தோழராகிய நபி இப்ராஹீம் (அலை) அவர்களுக்குக் கட்டளையிட்டான். அவ்வாலயத்தின் உட்பிரகாரத்தை அச்சத்தாற் பீடிக்கப்பட்டு நுழைவோருக்கு அடைக்கல ஸ்தானமாகச் செய்தருளியவன். நிச்சயமாகத் தானே தானாகத்தனித்தவனும் ஒப்புவமை அற்றவனுமாகிய அல்லாஹுதஆலாவே வணங்கற்குரியவனென்றும், மெய்யாகவே முஹம்மது(ஸல்) அவர்கள் அவனுடைய மெய்யடி

யாரும் திருத்தூதரும் ஆவரென்றும் நான் சாக்ஷியம் பகரு கின்றேன்; அத்திருத்தூதர்மீதும் அன்னார் கிளைஞர் தோழ ராதியோர்மீதும் இறைவன் தனது சலவாத்தென்னும் கருணைமாரியைச் சொரிந்தருள்வானாக.

மனிதர்களே! முதலாவதாக மஹா வல்லமைதங்கிய ஆண்டவன் அல்லாஹுதஆலாவுக்குப்பயந்து அவனுடைய உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும்படி எனக்கும் பின்னர் உங்களுக்கும் நற்போதனை செய்கிறேன். ஆதமுடைய மகனே! நல்லோர்கள் நன்மையைச்செய்து தங்களைக் காத் துக்கொண்டார்கள்; நீயோ உனது வாழ்நாளை வீணாக்கிவிட் டாய். அவர்கள் உலகத்தாரின் இரக்ஷகனான அல்லா(ஹ்) வுக்கு அடிபணிந்தார்கள், நீ அடிபணிபவில்லை அவர்கள் புண்ணியம் செய்து திரும்பிவிட்டார்கள்; நீ இதுவரை திரும்பினாயில்லை. அல்லா(ஹ்)வை வணங்குவதில் அவர் கள் வெகுதூரம் முன்சென்றுவிட்டார்கள்; நீ பின்தங்கிவிட் டாய். தனது வீடாகிய கஃபத்துல்லா(ஹ்)வைத் தரிசிக்கும் படி அல்லா(ஹ்) கட்டளையிட்டான். அக்கட்டளைக்குத் தலைசாய்த்து அந்தப்பெரியோர் பலர் இவ்வருடம் ஹஜ் ஜுக்குப் போயிருக்கிறார்கள். அவர்கள் இப்பொழுது இஹ்ராம் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். அதாவது மார்க் கச்சட்டப்படி சாதாரண காலத்தில் அநுபவிப்பது குற்ற மல்லாத அநேக சுகாநுபவங்களைக் கைவிட்டவர்களாய் இருக்கிறார்கள். சகோதரர்களே! நீங்கள் அவர்களைப்போல் இன்பங்களைக் கைவிடாவிட்டாலும் ஆண்டவன் விலக்கி யிருக்கிற பாவங்களையாவது கைவிடலாகாதா? அப் பெரியோர்கள் ஹிஜாஸ் தேசத்திற்குள் பிரவேசித்து விட்டார்கள்; இன்றைபத்தினம் அவர்கள் மகத்வம்

வாய்ந்த கஃபத்துல்லா(ஹ்) என்னும் தேவாலயத்தைக் கண்ணுற்று ஆநந்திக்கும் அதிர்ஷ்டசாலிகளாய் இருக்கிறார்கள். மகிமை பொருந்திய அந்த தெய்வீக க்ஷேத்திரத்தைத் தரிசிப்பதனால் உண்டாகும் ஆனந்தத்தினால் பிரயாணத்தின் இடையே பட்ட கஷ்டங்களை முற்றிலும் மறந்துவிட்டார்கள். அத்துன்பங்களிலிருந்து அவர்கள் சௌக்கியம் அடைந்தார்கள். ஆண்டவனுடைய உத்திரவுக்கு இணங்கி இந்த உத்தமமான காரியத்தைச் செய்துமுடித்த பெரியோர் அடைந்த பாக்கியமே பாக்கியம்! அவர்களல்லவோ இவ்வுலக இச்சையுடன் போராடி வெற்றிபெற்ற வீரர்களாவர்?

சகோதரர்களே! உங்களில் சிலர் சரீர சௌக்கியமும், போதுமான பொருளுதவியும் உடையவராக இருந்தும் இஸ்லாத்தின் ஐந்தாம் கடமையாகிய ஹஜ்ஜு செய்ய வேண்டியதைக் கனவிலும் நினையாதவராகக் காலங்கடத்துகிறீர்கள். இவ்வரிய பெரிய கடனைக்குறித்துப் பராமுகமாக இருக்கும் நீங்கள் நியாயத்தீர்ப்பு நாளன்று ஆண்டவனது கேள்விக்கு என்ன சாக்குச்சொல்லித் தப்புவீர்கள்? இவ் விஷயத்தைப்பற்றி நான் உங்களுக்கு மிகவும் அழுத்தமாக அச்சமூட்டுகிறேன். இதுவரை அசட்டையாயிருந்த குற்றத்தை மன்னித்தருளும்படி கருணாகரனாகிய ஹக்கு சுப்ஹானஹூவதஆலாவை நோக்கிக் கையேந்திக் கண்ணீர் உகுத்து மன்றாடுவதுடன், அடுத்த வருடம் ஜீவித்திருந்தால் இக்கடமையை நிறைவேற்றுவதாகப் பிரதிக்கினை செய்து கொள்ளுங்கள். ஹஜ்ஜு செய்பவர் அடையும் பலாபலன்களை எண்ணமுடியாது நானாதேசத்தைச்சேர்ந்த,வெவ்வேறு பாஷைபேசும், பல்வேறு ஜாதியினரான இலட்சக்கணக்

கான முஸ்லிம்கள், இஸ்லாம் என்னும் பலமான கயிற்றினால் ஒன்றுசேரப் பிணைக்கப்பட்டவர்களாக, ஒரேவிதமான-ஊதைய லில்லாத-தூய்மையான-வெண்ணிற ஆடையுடுத்து, அரசன்-பிரஜை, எஜமானன்-ஊழியன், பணக்காரன்-ஏழை என்னும் வித்தியாசம் ஒரு சிறிதுமின்றி, சர்வலோகசரண்யனை பரம்பொருளாகும் அல்லா(ஹ்)வை ஏற்றித்துதிக்கும் இணை யற்ற காட்சி இப்படிப்பட்டதென்று எவர்தாம் வர்ணித் துரைக்க முடியும்? உலகத்தில் மானிடர் யாவரும் சமமான வரே என்னும் உன்னதமான தத்துவத்தைப் பிரத்தியட்சமாக நடத்தையில் காட்டுவதை, அரேபியாவின் பரந்தவெளியி லன்றி, வேறு எந்தகம்தேசத்தில் எந்தச்சமயத்தினருக் கிடையே காணமுடியும்? இக்காட்சியின் இன்பத்தை, நேரில் கண்டு களித்தோரல்லாது வேறு எவரே அறியவல்லார்? மேலும் இவ்விதச் சந்திப்பாகிறது உலகின் நானாபாகங்களி லும் பரந்து வசிக்கிற முஸ்லிம்கள், ஒருவர் மற்றவரது நிலைமைகளையும் பழக்க வழக்கங்களையும் தேவைகளையும் செவ்வையாக உணர்ந்து, பரஸ்பர அபிமானமும் சகோதரத் துவமும் விருத்தியாவதற்குக் காரணமாக நிற்கிறது. அல்லா மலும் பிரயாணத்தினிடையே எதிர்ப்படும் சம்பவங்கள், அநுபவங்கள், காட்சிகள் முதலியவற்றிலிருந்து, ஹஜ்ஜுக் குச்சென்று திரும்புவோருக்கு, ஏழைக்கிரங்குதல், அல்லா(ஹ்)வுக்காகவும் இஸ்லாத்திக்காகவும் எப்பொருளையும் தத்தஞ்செய்தல், கஷ்டநஷ்டங்களைப்பொறுமையுடன் சகித் தல், சாத்வீகத்தன்மைஅடைதல், நற்றவங்கள் செய்ய சித்த மாகுதல், முதலிய பெறுதற்கரிய பெரும்பேறுகள் சித்தி யாகின்றன. ஹஜ்ஜுக்குச்சென்று மீண்டு ஹாஜீ என்னும் பட்டம் தாங்கியும் கயமை ஒரு சிறிதும் நீங்காதாராகக்

காலங்கடத்துவோர் பொதுவிதிக்கு விலக்கானவராவார். ஆகையால் சகோதரர்களே! நீங்கள் அடுத்த வருடமாவது உங்கள் கடமையை நிறைவேற்றவீர்களாக! எல்லாம் வல்ல இறைவன் நமக்கு அருள்புரிவானாக.

சர்வ உலகத்திற்கும் வழிகாட்டியாகவும் தியாகமூர்த்தியாகவும், கருணையங்கடலாகவும் அவதரித்தருளிய எம்பெருமானார் நபிகள்நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் அடியில் வருமாறு அருளிச்செய்திருக்கின்றார்கள். "கொல்லன் உலையானது இரும்பின் துருவை நீக்குவதுபோல ஹஜ்ஜும் உம்ராவும் வறுமையையும் பாவங்களையும் நீக்கிவிடும். மேலும் ஹஜ்ஜுயாத்திரை செய்பவன் செல்லும்பொழுதும் மீளும்பொழுதும் அல்லா(ஹ்)வின் காவலில் இருக்கின்றான்." (ஹதீஸ்)

நிச்சயமாக உலகத்திலுள்ள கிரந்தங்கள் அனைத்திற்கும் சிரோபூஷணமானதும், ஸர்வ அலங்காரங்களிலும் தலைசிறந்து விளங்குவதும், மனிதகோடிகளின் இம்மை மறுமையின் வாழ்க்கைக்கு இன்றியமையாத பரிபூரணமான சட்டதிட்டங்களை அளிப்பதில் நிகரற்றதுமாகிய தனது சுத்த சத்திய வேதத்தின்கண்ணே இறைவன் பின்வருமாறு திருவுளம்பற்றியருளுகின்றான்.

"பிரயாணத்திற்கு சக்திவாய்ந்த மனிதன்மீதும் (கஃபா என்னும்) ஆலயத்திற்கு யாத்திரைசெய்வது கடமையாகும். எவனாவது (இக்கட்டளையை) நிராகரிப்பானாயின் அல்லா(ஹ்)வுக்கு நஷ்டமொன்றுமில்லை. நிச்சயமாக அல்லா(ஹ்) உலகத்தினின்றும் எவ்விதத்தும் தேவையற்றவனாக இருக்கிறான்" (குர்ஆன் 3—96.)

# ஈதுல் அல்ஹா என்னும் ஹஜ்ஜுப் பெருநாள் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது; அவன் ஆதியந்தமில்லாதவன்; பொதுவான கொடையும் அருளு முள்ளவன்; வானங்களைச்சிருஷ்டித்துப் பரிபாலிப்பவன்; வஸ்துக்களை பலவகைப்பட்டவைகளாக வெளிப்படுத்திய வன். நிச்சயமாய் வணக்கத்திற்குரியவன், தனித்தவனும் இணைதுணை அற்றவனுமான அல்லா(ஹ்)வைத் தவிர வேறுயாருமில்லை எனவும், நிச்சயமாய் நபிகள்பிரான் முஹம்மது (ஸல்) அவர்கள் அவனது அடிமையும், திருத் தூதரும் ஆவரென்றும் சாக்ஷியம் பகருகிறேன். எங்கள் இறைவனே! எங்கள் தலைவராகிய முஹம்மது (ஸல்) அவர் கள்மீதும், அவர்கள் கிளையார் தோழர்கள்மீதும் எந்நாளும் உனது கருணையையும் சாந்தியையும் அருள்புரிவானாக.

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக் கும் அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நல்லுபதேசம் செய்கிறேன். அவனைப் பயந்தவர்கட்கே நற்கதியுண்டா வதாக.

மனிதர்களே! நீங்கள் விஜயஞ்செய்திருக்கும் இத்தின மானது விசேஷச்சிறப்புடையதும், தொடர்ந்த பாக்கிய

முடைய ஹஜ்ஜையுடையதுமான தினமாயிருக்கிறது. மேலும் இது நமது மார்க்கத்தின் அடையாளங்கள் பிரகாசிக்கும் தினமாகவுமிருக்கிறது. இன்று குர்பானி மூலமாக நீங்கள் உங்கள் பிதாவாகிய இப்ருஹீம் (அலை) அவர்கள் செய்து காட்டிய தியாகத்தை புதுப்பிக்கிறீர்கள். இன்று தங்கள் ஈரல் கொழுந்தைப்போன்ற செல்வப்புத்திரர் இஸ்மாயீல் (அலை) அவர்களை பலியிடும்படி கனவில் உத்தரவு செய்து, நபி இப்ருஹீம் (அலை) அவர்களை அல்லாஹுத்தஆலா சோதித்த நாள்.

அப்படி அவர்கள் கண்ட கனவு பொய்யானதல்ல. அவ்வுத்தரவு வஹியாகவே இருந்தது. நபியவர்கள் தங்கள் இரக்ஷகனது ஏவலுக்கு கீழ்ப்பட்டிருந்தார்கள். தங்கள் புத்திரரைக்கூட்டிக்கொண்டு புறப்பட்டார்கள். அச்சமயம் ஷைத்தான் அவர்களை இடைமறித்து "ஏ! அருளாளனின் அன்பரே! ஒரு வீண் கனவை நம்பியா உமது ஈரலின் துண்டை அறுக்கச்செல்லுகின்றீர்?" என்றான். அப்பொழுது அல்லா(ஹ்)வின் அன்பர் இப்ருஹீம் (அலை) அவர்கள், "ஏ மனிதரின் பகைஞனே! என்னைவிட்டு அப்புறப்படு; யான் அல்லா(ஹ்)வின் கட்டளையை மீற வேண்டுமென்று கருதுகிறாயா?" என்று விடையளித்தார்கள். அப்பால் அவன் இஸ்மாயீல் (அலை) அவர்களது தாயார் ஹாஜரா பீவி அவர்களிடம் சென்று, "உமது குமாரர் இஸ்மாயீலை உமது கணவர் பலி கொடுக்கப் போகின்றார்" என்றான். "அவ்வாறுசெய்வது ஆண்டவனது கட்டளையாயின், அக்கட்டளையை நிறைவேற்றுவது அவரது கடமையாகும்" என்ற விடை கிடைத்தது. அப்பால் இஸ்

மாயீல் (அலை) அவர்களிடம் சென்று, "உமது பிதா உம்மை அறுக்கப்போகின்றார்; நான் உமக்கு எச்சரிக்கை செய்கிறேன்" என்றான் "அங்ஙனம் செய்வது ஆண்டவனது உத்தரவாயின், அவ்வுத்தரவை மீற எனக்கு சக்தியுண்டா?" என இஸ்மாயீல் (அலை) அவர்கள் கூறி, பொடிக்கற்களை அவன்மீது எறிந்தார்கள். (இச்சம்பவத்தின் ஞாபகார்த்தமாகவே ஹஜ்ஜுக்குச்செல்லும் முஸ்லிம்கள் கல்லெறிவது வாஜ்பாக்கப்பட்டிருக்கிறது.) பின்னர் இப்றாஹீம் (அலை) அவர்கள் தங்கள் புத்திரரை மினு என்னும் மலையுச்சியில் ஒரு சரிவான இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள், தங்கள் இரு கைச்சட்டைகளையும் உயர்த்தினவர்களாக, குழந்தையின் கரங்களைக்கட்டுவதற்கு கயிற்றை எடுத்துக் கொண்டு, கத்தியைத் தீட்டிப் பதப்படுத்திக்கொண்டார்கள். அவர்கள் அங்குசெய்த வேலைகள் அவர்களை வனனெஞ்சரென்றே காட்டின. குழந்தை தமது தந்தையின் செய்கைகளை கவனித்துக்கொண்டிருந்தார். அங்கு நடக்கப்போவதின் உண்மையை அறிந்ததும், தமது பிதாவை நோக்கி, "எனது அருமைத்தந்தையே! என்னை யாது செய்யப் போகின்றீர்கள்?" என வினவினார். அப்பொழுது "எனது ஆருயிர்க் குழந்தாய்! அல்லா(ஹ்)வுக்காக உன்னைப் பலி கொடுக்கப்போகிறேன்; நிச்சயமாக நான் கனவில் உன்னை அறுக்கக்கண்டேன். காணுததைக்கூறுபவன் துர்ப்பாக்கியமுள்ளவனுவான். உனது அபிப்பிராயம் யாது?" என்றார்கள். உடனே நபி இஸ்மாயீல் (அலை) அவர்கள் "எனது அருமைத் தந்தையரே' ஏவப்பட்டதைச் செய்யுங்கள். பொறுமையுடையவனுக என்னைக்காண்பீர்கள். ஆயினும்

என் தந்தையே! என்னைவிட்டு உங்கள் முகத்தைத் திருப்பிக்கொண்டு உங்கள் கண்களை மூடிக்கொள்ளுங்கள். மேலும் கடுமையான இச்சோதனையின்மீது பொறுமை கொள்ளுங்கள். அல்லா(ஹ்)வுக்கு நன்றியறிதலுள்ளவர்களாக இருந்து கொள்ளுங்கள். என் து மாதாவிடம் சென்றால் என்னுடைய சலாமை எடுத்தோதுங்கள். அவர்களுக்கு பொறுமையை அனுஷ்டித்து ஆண்டவனது கட்டளைக்கு முற்றிலும் கட்டுப்படுமாறு போதனைசெய்யுங்கள்'' என்று கூறியருளினார்கள். அப்பால் நபி இப்ருஹீம் (அலை) அவர்கள் தங்கள் புத்திரரின் இரண்டு கைகளையும் கட்டிப் படுக்கவைத்து, வலது கரத்தால் கத்தியைப்பிடித்தவர்களாக, உலகாரக்ஷகனின் ஏவலுக்குக்கீழ்ப்படிந்து அறுக்கமுற்பட்டார்கள். அத்தருணத்தில் நெஞ்சங்கள் திடுக்கிட்டன! இருதயங்கள் பிளந்து விட்டன! வானவரனைவரும் ஆண்டவனை நோக்கி “எங்களின் இரக்ஷகா! இந்த விருத்தாப்பியரின் மீது இரக்கங்காட்டு. இச்சிறு குழந்தைக்கு பதிலாக வேறு வஸ்துவை அங்கீகரித்தருள்'' என்று கூறிக்குறையிரந்தார்கள். அப்பொழுது சந்தோஷம் வந்தடுத்தது. இப்ருஹீம் (அலை) அவர்களின்மீது அல்லா(ஹ்)வுக்குக் கருணை பிறந்தது. ஜிப்ரயீல் (அலை) காணிக்கைக்காக வேறொரு வஸ்துவைக் கொண்டிறங்கினார்கள். நற்செய்திகள் வர ஆரம்பித்தன. “விசுவாசிகளின் நெஞ்சங்களைக் களிப்பிக்கத்தக்க இப்ருஹீமே! நீர் கனவை மெய்பாக்கினீர். நன்மைசெய்தவர்களுக்கு அதற்குத்தக்க வெகுமதி அளிப்போம்.'' என்ற அசரீர வாக்கு உண்டாயிற்று. பின்னர் ஜிப்ரயீல் (அலை) கட்டுண்டிருந்த புத்திரரின் கைகளை அவிழ்க்கச்சொன்னார். பிதாவுக்கு “ஆப்தநண்பர்'' என்ற பட்டத்தையும், புத்திர

ருக்கு நபித்துவத்தையும் அளித்தார். அவர் தம்முடன் கொண்டுவந்திருந்த ஒரு ஆட்டை குழந்தைக்குப்பதிலாய் பலிகொடுத்தார்கள். இவ்வரிய சம்பவத்தை நினைவுகூர்ந்து இதன் தத்துவத்தை அறிந்து ஒழுகுவதற்காகவே குர்பானியின் அனுஷ்டானம் நம்மில் இருந்து வருகிறது.

சகோதரர்களே! மேற்கூறிய சம்பவத்தைப் பின்பற்றி நம்மில் அநேகர் வருடந்தோறும் சில பிராணிகளை குர்பானி கொடுத்தலை, ஒரு சாதாரணச் சடங்காக எண்ணி நடத்தி வருகிறார்களே அன்றி, இதன் தத்துவத்தை உணர்ந்தோர் வெகு சிலரே காணப்படுகின்றனர். இறைவனது கட்டளைக்கிசைந்து, தங்கள் உயிரனைய புதல்வரைப் பலி கொடுக்கத்துணிந்த திருநபி அவர்களின் மார்க்கத்தைப் பின்பற்றுவதாகச் சொல்லிக்கொள்ளும் நீங்கள், ஆண்டவனுக்காக அலக்ஷியமாய் ஒரு ஆட்டுக்குட்டியை அறுத்து விடுவதுடன், உங்கள் கடமை பூர்த்தியாகிவிட்டதென்ற அபிப்பிராயமுடையவராகக் காணப்படுகிறீர்கள்.

குர்பானியின் தத்துவம், நீங்கள் ஆட்டையோ மாட்டையோ பலியிடவேண்டுமென்பதல்ல. இஸ்லாம் என்பதற்கு ஆண்டவனது சட்டத்திற்கு எல்லா விஷயங்களிலும் கட்டுப்பட்டு நடத்தல் என்பதே உண்மைப்பொருளாகும். குர்பானியாகிறது அவ்வாறு கட்டுப்பட்டு நடப்பதற்கு அறிகுறி யாகச்செய்யும் பிரதிக்கினையாகும். அந்தோ! வருடத்தில் ஒருநாள் ஆண்டவனது சந்நிதானத்தில் மேற்கூறியவாறு பிரதிக்கினை செய்துகொள்ளும் நீங்கள், அவ்வருட முழுமையும் உங்களுடைய இவ்வுலக வாழ்க்கையில் நீங்கள் ஈடுபட்டிருக்கும் இதர விஷயங்களில், அல்லா(ஹ்)வின்

உத்தரவிற்கு முற்றிலும் கீழ்படிந்து நடந்துவருகின்றீர்களா? என்று நான்கேட்கிறேன். மற்றவிஷயங்களில் ஆண்டவனது கட்டளையை எடுத்தெறிந்துவிட்டு, உங்களுடைய உடலாலும் பொருளாலும் இஸ்லாத்திற்காக செய்யவேண்டிய தியாகத்தைக்குறித்து ஒரு சிறிதும் கவனமில்லாதவர்களாக, நாடகமேடைகளில் வேஷம் போட்டுக்கொண்டு நடிக்கும் நடிகர்களைப்போல, குர்பானியை ஒரு போலிச்சடங்காக நடத்தி முடிக்கிறீர்கள்! சகோதரர்களே! இஸ்லாத்தின் சட்ட திட்டங்களை செவ்வையாக உணர்ந்து, ஆண்டவனுடைய பாதையில் உடல், பொருள், ஆவி, மூன்றையும் தத்தம் செய்ய முன்வந்தாலொழிய, நாம் குர்பானியின் தத்துவத்தை உணர்ந்து பின்பற்றிய மெய்யான முஸ்லிம்களாக முடியாதென்பதை உங்களுக்கு மிகவும் அழுத்தமாகக் கூறுகிறேன்.

ஹனபி மத்ஹபின்படி உள்ளூர்வாசியாகவும், ஜகாத்து விதியானவனாகவும் இருப்பவன் குர்பானிகொடுப்பது வாஜிபு; மற்ற மூன்றுமத்ஹபின்படி சுன்னத்து. நபி இப்ராஹிம் (அலை) அவர்கள் தங்கள் புத்திரரைப் பலியிட முன்வந்ததைப்போன்ற சம்பவம், நபிகள் நாயகம்(ஸல்) அவர்களது பிதாவின் விஷயத்திலும் நேர்ந்திருக்கிறது. இதன் காரணமாகவே ஒரு காட்டறபி ஒருபோது நபிகள்பெருமான் (ஸல்) அவர்களை நோக்கி, "அறுக்கப்பட்ட இருவரின் புத்திரரே"! என்று அழைத்தார். இதைக்கேட்ட நாயகமவர்கள் புன்னகை புரிந்தார்கள் என்ற ஆகமம் ஒன்று காணப்படுகிறது. ஒருவருடம் பூர்த்தியான ஆடாவது இரண்டுவருடங்கள் நிறைந்த மாடாவது, ஐந்து வயது

சென்ற ஒட்டகையாவது குர்பானி கொடுத்தல் வேண்டும். ஒட்டகமும் மாடும் ஏழுபேருக்கொன்று கொடுத்தாலும் போதும். ஆடு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்று கொடுத்தல் வேண்டும். சீக்குப்பிடித்து மெலிந்தோ, நொண்டி, குருடு, முதலிய அங்கஹீனம் உடையவைகளாவோ இருக்கும் பிராணிகளை உபயோகிக்கக்கூடாது. இவ்விஷயம் சம்மந்தப் பட்ட மார்க்கச் சட்டதிட்டங்களை அறிஞர்பால் கேட்டு உணர்வீர்களாக.

நேரான நடத்தையுடைய இப்ராஹீமின் (அலை) மார்க்கத்தைப்பின்பற்றி அல்லா(ஹ்)வுக்கு முற்றிலும் வழிபட்டு நற்காரியங்களைச்செய்யும் ஒருவனைப் பார்க்கிலும் சிரேஷ்டமான சன்மார்க்கன் யார்? (ஒருவருமில்லை) (அல்—குர் ஆன், 4-125.)

---

# துல்ஹஜ் மாதம்,

# இரண்டாம் குத்பா.

எல்லாப்புகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது; அவன் தன்பால் வருவோருக்கு தனது கிருபையின் வாசல்களைத் திறப்பவன்; இருதயங்களுக்கு நற்பாக்கியத்தின் வழியைத் தெளிவாய்க்காட்டுகிறவன்; நாம் செய்யும் ஸ்தோத்திரங்களுக்கு முற்றிலும் தகுதியானவன்; பாக்கியத்தை அளிப்பது அவனேயாயினும், அப்பாக்கியத்தை சத்காரியங்களில் உபயோகிப்பவர்களுக்கு சன்மானம் அளிப்பவன். நிச்சயமாய் வணக்கத்திற்குரியவன். தனித்தவனும் இணைதுணையற்றவனுமான அல்லா(ஹ்)வைத்தவிர வேறு யாருமில்லை எனவும், நிச்சயமாய் நபிகள்பெருமான் முஹம்மது(ஸல்) அவர்கள் அவனது அடிமையும் திருத்தூதரும் ஆவரென்றும் சாக்ஷியம் பகருகிறேன். எங்கள் இறைவனே! எங்கள் தலைவராகிய முஹம்மது (ஸல்) அவர்கள்மீதும், அவர்கள் கிளையார் தோழர்கள் மீதும் எந்நாளும் உனது கருணையையும் சாந்தியையும் அருள் புரிவாயாக.

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும் எனக்கும் அல்லா(ஹ்)வைப் பயந்துகொள்ளும்படி நல்லுபதேசம் செய்கின்றேன். அவனைப்பயந்தவர்கட்கே நற்கதியுண்டாவதாக.

சகோதரர்களே! இவ்வுலகத்தில் மனிதர்கள் நடந்து கொள்ளும் விதம் ஆச்சரியத்தையே உண்டாக்குகிறது. சுவர்க்கம் அவர்களுக்கு ஆனந்தமளிப்பதற்காகவே சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது; ஆனால் அவர்களோ நன்மைகளைச் செய்து அச்சுவர்க்கத்தின் பால் விரைந்து செல்லாது, சோம்பேறிகளாக வீழ்ந்துகிடக்கிறார்கள். நரகம் ஒருவரை பரிந்து அழைப்பதில்லையாயினும், மதியீனர்களான மானிடரில் பலர் பாவமென்னும் வாகனங்களில் ஏறி அதனிடத்தில் விரைந்து செல்லுகின்றார்கள். கருணாகரனாகிய அல்லா(ஹ்)வின் தயை நிறைந்த அழைப்புக்கு இவர்கள் செவிடராயிருக்கிறார்கள். கெட்ட இச்சைகளை இவர்களுடைய நெஞ்சத்தில் தோற்றுவித்தல் என்னும், இப்லீஸின் அழைப்புக்குச் செவி சாய்த்து அதிவேகமாகப் போய்க்கொண்டிருக்கிறார்கள். அந்தோ! பரிதாபம்! இப்படிப்பட்ட அறிவிலிகளுடைய செய்கையை என்னென்று எடுத்துரைப்பது!

சகோதரர்களே! சங்கை வாய்ந்த இம்மாதமாகிறது (தவ்பா) கழிவிரக்கத்தின் மாதமாக இருக்கிறது. நிலையற்ற, மிகக்குறுகிய காலத்தையுடைய இவ்வுலக வாழ்க்கையில், உங்களுக்கு நேரும் அற்பக் கஷ்டநஷ்டங்களை நினைத்து கவலைப்பட்டுக்கலங்குகிறீர்கள். நித்தியமாகிய உங்களுடைய மறு உலக வாழ்க்கையைக் குறித்து ஒரு கணப்பொழுதாயினும் நீங்கள் சிந்திப்பது உண்டா? அவ்வுலக வாழ்க்கையில் ஈடு செய்யமுடியாத, நஷ்டத்தைக் கொடுக்கத்தக்க பல அக்ரமச்செய்கைகள், இவ்வுலகில் செய்யப்பட்டிருப்பதைக் குறித்து, நீங்கள் நினைவு கூர்வது உண்டா? தாம் செய்த

பாவத்தை நினைத்து அழுதிரங்குவோருக்கு கருணைபங்கட லாகிய ரஹ்மான், அருள்பாலிப்பவனாக இருக்கிறான். ஆனால் "தொழுகிறேன் தொழுகிறேன் அல்லா(ஹ்)வுக் காக, எப்படியோ தொழிலைச்செய்கிறேன் வயிற்றுக் காக" என்றாற்போல, ஐந்து நேரமும் தொழுதபின்னர் அஸ்தஃபிருல்லாஹி தவ்பா தவ்பா என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டு, தங்களுடைய இழிவான தொழிலைக் கொஞ் சமும் கைவிடாது செய்துவருவோரது தவ்பாவும் தவ்பா வென்னப்படுமோ? சகோதரர்களே! நீங்கள் ஒவ்வொரு வரும் கடந்த காலத்தில் நிகழ்ந்த தீயகருமங்களைக்குறித்து அழுதிரங்கி தவ்பாச் செய்வதோடு நின்றுவிடாது, இனி அத்தீட காரியங்களை அடியோடு செய்வதில்லையென்று தீர் மானித்துக்கொண்டு, அவ்வாறு நடந்தாலொழிய, உங்க ளுடைய தவ்பா பிரயோஜனம் கொடாது. இம்மாதத்தில் தவ்பா அங்கீகரிக்கப்படும் ஸ்தலங்களிலெல்லாம் சிரேஷ்ட மான ஸ்தலமாகிய திருமக்கமா நகரத்திலே, உலகத்தின் நாலுபக்கங்களிலிருந்தும், உங்களுடைய சகோதரர்களில் பலர் சென்று கூடியிருக்கிறார்கள். நீங்களோ, அம்மகத் தான பாக்கியத்தைப் பெற்றீர்களில்லை. "மாட்சிமைதங்கிய ஆண்டவா, உனது அழைப்புக்கிணங்கி இதோ ஆஜராகி அடிபணிந்தோம், அடிபணிந்தோம்" என்று கூறி நிற்கும் அவர்கள் அடையும் ஆனந்தத்தை நினைத்துப் பாருங்கள்! முஸ்லிம்களில் பலர், ஹஜ்ஜுக்குப்போவது பெரும் பணக் காரர்கள்மீதே கடமையாக்கப்பட்டதென்று, தவறான அபிப் பிராயமுடையவர்களாகக் காணப்படுகிறார்கள். இது முற் றிலும் தவறு. தனது சொத்துக்கு அதிகமான கடனில் லாது, அன்னவஸ்திரம் கொடுக்கக் கடமைப்பட்ட தனது

மனைவி மக்கள் முதலானோருக்கு, தான் மீண்டுவரும்வரை செல்லும் செலவுக்கும், தனது பிரயாணச்செலவுக்கும், போதுமான பொருளுடைய ஒவ்வொருவர்மீதும் ஹஜ்ஜு யாத்திரை செய்வது கடமையாகும். ஆதலின் சகோதரர்களே! நீங்கள் ஒவ்வொருவரும் மேலே கூறியவாறு வேஷதாரிகளாகத் தவ்பாச்செய்யாது, உண்மையான தவ்பாச் செய்து நல்வழியைப் பின்பற்றுவதுடன், உங்களுடைய இதர கடமைகளையும் பூர்த்திசெய்து, செய்கையளவில் முஸ்லிம்களாக விளங்குவீர்களாக.

"பாலைவனத்தினடுவே வாகனத்தையும் உணவையும் இழந்து மரணத்தறுவாயிலிருக்கும் ஒருவனுக்கு, அவை திரும்பக்கிடைத்தால் உண்டாகும் சந்தோஷத்தைப்போல, பாவத்தை நினைத்து அழுதிரங்கும் அடிமையின்மீது அல்லா(ஹ்) அளவிறந்த சந்தோஷமடைகிறான்" (ஹதீஸ்.)

மரணமளவும் தீமையைச் செய்துகொண்டேயிருந்து மரணத்தறுவாயில் செய்யும் தவ்பா பிரயோஜனங்கொடாது. (குர்ஆன் வியாக்கியானம்)

# துல்ஹஜ் மாதம்,

# மூன்றும் குத்பா.

ஸர்வபுகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது. அவன் நன்மையானவை இன்னவை தீமையானவை இன்னவை எனப் பிரித்தறியக்கூடிய பகுத்தறிவை நமக்களித்தவன். மற்றெல்லா வஸ்துக்களைப்பார்க்கிலும் மானிடர்களை மேன்மைப்படுத்தி அவர்களுக்கு தன்னையறியும் தத்துவத்தை அருளியவன். நிச்சயமாய் தனித்தவனும் ஒப்புவமையற்றவனுமாகிய அல்லாஹுத்தஆலாவே வணக்கத்திற்குரியவனென்றும், மெய்யாகவே நமது பிரான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் மெய்ப்படியாரும் திருத்தூதருமாவரென்றும் சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அத்திருத்தூதர்மீதும், அன்னாரின் கிளைஞர் தோழர்களின் மீதும், தனது கிருபாகடாக்ஷமாரியைச் சொரிந்தருள்வானாக.

அல்லா(ஹ்)வின் அடிமைகாள்! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக ஆண்டவனைப் பயந்துகொள்ளும்படி நல்லுபதேசம் செய்கின்றேன். மெய்யாகவே அவனையஞ்சி நடப்பது உன்னத பதவியை அடைவதற்கு பேருதவியாகும்.

சகோதரர்களே! நற்காரியங்களைச்செய்து அல்லா ஹுத்தஆலா இடத்தில் வெகுமானங்களைப்பெறும் பாக்கியம் உங்களுக்கிருக்கின்றது. அக்காரியங்களை எந்தெந்தக் காலங்களில் எவ்விதமாகச் செய்வதனால் நற்பயன் கிட்டுமென்பதை அறியக்கூடிய சக்தியும் அறிவும் உங்களுக்கிருக்கிறது. நல்ல காரியங்களை விட்டுவிட்டு தீய காரியங்களைச் செய்வதினால் ஏற்படும் லாபநஷ்டங்களையும் நீங்கள் நன்கறிவீர்கள். அங்ஙனமிருக்க உங்களில் அநேகர் கெட்டகாரியங்களையும், துர்நடத்தைகளையும், பாவமுண்டாகக்கூடிய பழக்கவழக்கங்களையும் செய்வதையே தங்கள் சேவையாகக்கொண்டு திரிவதேனோ? அவைகளைச் செய்வதிலேயே கண்ணுங்கருத்துமாய் இருப்பதன் காரணம் யாதோ? அல்லா(ஹ்) இடத்தில் பதிலுரைக்க வழிகளைத் தேடிக்கொண்டீர்களோ? அல்லது "எங்கள் பாட்டன் பூட்டன் தலைமுறையாக நாங்கள் இவ்விதமாகவே செய்து வருகிறோம், அதை எவ்விதம்விடுவது" என்ற எண்ணமோ? அல்லது நாம் செய்வதெல்லாம் மார்க்கத்தில் உள்ளது தானே என்ற கருத்தோ? சற்று சிந்தித்துப்பாருங்கள். கேவலம் உலக வாழ்க்கைக்காக ஒரு சிறிய தொழிலைச் செய்வதாயிருந்தால் எத்தனையோபேரிடம்கேட்டுத்தெரிந்து கொள்ளுகிறீர்கள். அதிலுண்டாகும் நஷ்டம் எவ்வளவோ பெரிதாக தோற்றுகிறது. அந்தோ! பரிதாபம்! உங்கள் மதியீனத்திற்கு யாது சொல்வேன்! உங்கள் அறியாமையை என்னென்றுரைப்பேன்!

இவ்வுலகத்தின் அற்பசம்பாத்தியத்திற்காக ஹலால் ஹராமை உணராது உங்களிஷ்டம்போல் நடக்கிறீர்கள்.

அல்லா(ஹ்)வின் ஆக்ஞையை முற்றிலும் மறந்து விடுகிறீர்கள். நிகாஹு, சுன்னத்து கலியாணம் முதலிய மார்க்கத்துக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டிய காரியங்களில்கூட அநேக கெட்டவழக்கங்களையும், வீண்செலவுகளையும், பாவச்செயல்களையும் நுழைத்துக்கொண்டீர்கள். பெருமைக்காகவும் பேருக்காகவும் பொருளைச்செலவுசெய்வது உங்கள் ஆன்மாவுக்கு திருப்திபரியிருக்கின்றது. கூத்துகளிலும் வாத்தியங்களிலும் பொருளைப் பொருட்படுத்தாது செலவிடுவது உங்களுக்குச்சந்தோஷமாயிருக்கிறது மெய்பாகவே இவைகளில் ஒன்றேனும் உங்களின் ஆன்மாவுக்குபிரயோஜனம் தரத்தக்கதல்ல. பொருள் நஷ்டமாவதல்லாமல் ஆன்மாவுக்கும்நஷ்டம் ஏற்படும். இவையெல்லாம் ஒருபுறமிருக்க மறுமையில் நீங்கள் படும் துன்பத்திற்கும், பரிதாபத்திற்கும் அளவே கிடையாதென்பதையும் உணர்ந்துகொள்வீர்களாக.

சகோதரர்களே! மார்க்க வரம்பிற்கு உட்பட்டு தீயகாரியங்களையும், துர்ப்பழக்கங்களையும் விட்டொழியுங்கள். ஆடம்பரமான செலவுகளை நீக்கித்தள்ளுங்கள். கியாதிக்காக செலவு செய்வதை ஒரு பக்கம் ஒதுக்கிவிடுங்கள். இவைகளுக்குப்பதிலாய் நற்காரியங்களைச் செய்யத்துணியுங்கள். ஒவ்வொரு சந்தோஷ காரியத்திலும் வீண் செலவைத் தள்ளிமீதப்படுத்தும் பொருளைக்கொண்டு, உங்கள் சந்ததிகள் சீர்திருத்தம் அடையும்பொருட்டு, மத்ரஸாக்கள் ஸ்தாபியுங்கள். தொழிலில் ஈடுபட்டவர்களுக்காக இராப்பள்ளிக்கூடம் மத்ரஸா முதலியவைகளை ஏற்படுத்துங்கள். சிறிய் சிறியமார்க்க புத்தகங்களை இயற்றி சொற்பதொகையில் சிறுவர் முதல்யாவரும் வாசித்துணரும்படி வினியோகியுங்கள்.

இப்படிச்செய்வதே மார்க்கத்தொண்டாகும். நம்முடைய பொருளும் நேர்வழியில் செலவாகும். நாமும் நம்முடைய சந்ததிகளும் சீர்திருத்தமடைந்து பழைய நிலைமையை அடையமுடியும். சகோதரர்களே! முஸ்லிம்களென வாயால் சொல்லிக்கொள்வது போதாது. இஸ்லாமென்பது நடந்து காட்டுவதற்கே பெயராகும். செயலளவில் காட்டாமல் வாய்ச்சொல்லைக்கொண்டு இஸ்லாம் உண்டாகிவிடாது. எல்லாம் வல்ல இறைவன் நம்மனைவோருக்கும் இஸ்லாத்தின் நல்லொழுக்கத்தை அருளுவானாக.

ஹலாலான சம்பாத்தியத்தினின்றும் ஒரு பேரீத்தம் பழத்தளவு ஒருவன் அல்லா(ஹ்)வின் வழியில் செலவு செய்வானுகில், (நிச்சயமாய் அல்லா(ஹ்) துய்மையானதன்றி மற்றவைகளை ஒப்புக்கொள்ளுவதில்லை.) நிச்சயமாய் அதை அல்லா(ஹ்) பிரியத்துடன் ஏற்றுக்கொள்கிறுன். பின்பு உங்களில் ஒருவன் தன் குதிரைக்குட்டியை வளர்ப்பது போல், அம்முதல் (தரும் நன்மை) மலைபோல் பெருகுமளவும் அல்லா(ஹ்) அவனுக்காக வளர்க்கிறுன. (புகாரீ, முஸ்லிம்)

ஒருவன் ஆகிரத்தின் வெள்ளாண்மையை நாடுவானு கில், அவனது வெள்ளாண்மையை நாம் அதிகப்படுத்து வோம், ஒருவன் இவ்வுலகத்தின் வேளாண்மையை நாடு வானுகில், அதினின்றும் அவனுக்கு நாம் கொடுப்போம். (எனினும்) ஆகிரத்தில் அவனுக்கு எவ்விதக்கதியும் கிடைக் காது (அல்—குர் ஆன், 25—42.)

---

# துல்ஹஜ் மாதம்,

# நான்காம் குத்பா.

சர்வபுகழும் அல்லா(ஹ்)வுக்கே உரியது அவன் தகரித்தவன், இணை துணையற்றவன், சிருஷ்டிப்பவன், உணவளிப்பவன், மானிடர்களின் சிருஷ்டிப்பை அதிக ஆச்சரியமாக உண்டுபண்ணியவன், ஒவ்வொரு வஸ்துவிலும் தன் வேலையைப் பூரணமாக்கியவன், தன் அடிமைகளுக்கு லாப நஷ்டத்தை உண்டுபண்ணுகிறவன். நிச்சயமாகத் தனித்தவனும் ஒப்புவமையற்றவனுமாகிய அல்லாஹுத்தஆலாவே வணக்கத்திற்குரியவனென்றும், மெய்யாகவே நமது பிரான் முகம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் மெய்யடியாரும் திருத்தூதரும் ஆவரென்றும் சாக்ஷியம் பகருகிறேன். அல்லா(ஹ்) அத்திருத்தூதர்மீதும் அன்னாரின் கிளைஞர் தோழர்களின்மீதும் தனது கிருபாகடாக்ஷமாரியைச் சொரிந்தருள்வானாக.

அல்லா(ஹ்)வின் அடிமைகாள்! உங்களுக்கும் எனக்கும் முதலாவதாக ஆண்டவனைப் பயந்துகொள்ளும்படி நல்லுபதேசம் செய்கின்றேன். மெய்யாகவே அவனையஞ்சி நடப்பது உன்னத பதவியை அடைவதற்கு பேருதவியாகும்.

மானிடர்களே! தான் செய்த குற்றங்களை சிந்தித்து பரிதாபிப்பவனை ஜயமடைவானாதலால், நீங்களும் உங்கள் குறைகளுக்காக பரிதாபப்படுங்கள், அப்பொழுது ஜயமடைவீர்கள். தன் பாவச்சுமைகளை இலேசுபடுத்திக் கொள்பவனை கஷ்டங்களைக் கடந்து சொல்லமுடியுமாதலால், நீங்கள் உங்களின் பாவச்சுமைகளை இலேசுபடுத்திக்கொள்ளுங்கள், அப்பொழுதுங்களின் கஷ்டங்களைகடந்துசெல்லமுடியும். இம்மாதத்தில்தான் நமது தலைவரும், மகத்துவம்வாய்ந்த சஹாபாக்களில் ஒருவருமான உமருப்னுல் கத்தாப் (ரலி) அவர்கள் வதை செய்யப்பட்டார்கள். பள்ளியில் ஸுபுஹு தொழுதுகொண்டிருக்குங்கால் அன்னரை அபூ லூலூ என்ற துஷ்டன் கொன்றான். அன்னாரின் அகால மரணத்தினல் மதீன நகரம் முழுவதுமே நடுங்க ஆரம்பித்தது. அவர்கள் தவறியதனல் அக்காலத்தின் முஸ்லிம் உலகமுழுவதும் இருளடைந்துவிட்டது. எவ்விதம் இருளடையாமலிருக்க முடியும்? அல்லா(ஹ்) அன்னரைக்கொண்டு உலகைச் சிறப்பித்தான். ஆண்டவனது அநேக உத்தரவுகள் அவர்களின் யோசனைக்கு ஒத்திருந்தன. அவர்களின் கரத்தால் மிஸர் ஷாம் போன்ற அநேக மாகாணங்கள் முஸ்லிம்களது கைவசமாயின. நபி பெருமான் (ஸல்) அவர்கள் மிஅருஜுக்குச் சென்ற இரவில் இவர்களை சுவன உலகத்தில் நடந்தவர்களாகக் கண்டார்கள். மேலும் உமர்கத்தாப் (ரலி) அவர்களின் யோசனைக்கிணங்க அல்லா(ஹ்) பேசுகிறானெனவும், அவர்கள் ஹதீஸுகளை பயான் செய்கிறவர்களுள் ஒருவரெனவும், நபி பெருமான் (ஸல்) திருவுளமானர்கள். நிச்சயமாக உமர் கத்தாப் (ரலி) அவர்கள் ஷைதானுக்கு ஒருபொழுதும் இணங்கியதேயில்லை. இப்

படியெல்லாம் இருப்பதுடன் அன்னார் அல்லா(ஹ்)வை அளவுகடந்து பயப்படுகிறவர்களாகவும், அவனையே அதிகம் தேடுகிறவர்களாகவும் இருந்தார்கள். பூரணமனதுடனும், நம்பிக்கையுடனும் அல்லா(ஹ்)வைத் தேடுபவன் பெற்றுக்கொள்வான் என்பதை தக்கருதியே, தங்களின் தாடிமயிர் நனையுமளவும் அல்லா(ஹ்)வையஞ்சி பயந்து கண்ணீர் சொரிந்து அழுகிறவர்களாய் இருந்தார்கள். அப்படி அழுததின் காரணத்தினால் அவர்களது இரு கண்களின்மீதும் கண்ணீரானது இரண்டு கறுத்த அடையாளத்தை உண்டுபண்ணிவிட்டது. அவர்கள், "உமருடைய தாய் அவனைப் பெருமலிருக்க வேண்டிற்றே! அவன் இவ்வுலகத்தைக் காணாமலும் மானிடர்களுள் ஒருவனாகப் பிறக்காமலும் இருக்கவேண்டிற்றே" என்று சொல்லுவார்கள். உமர்கத்தாப்(ரலி)போன்ற ஒரு மகான் அல்லா(ஹ்)வை இவ்விதமாக அஞ்சிப்பயந்து தங்கள் குறைகளைச் சொல்லிச்சொல்லி அழுதார்களென்றால், சகோதரர்களே! உங்களின் குறைகளுக்காக நீங்கள் எவ்வளவு அழுதிறைஞ்ச வேண்டுமென்பதை சற்று சிந்தித்துப்பாருங்கள். எம்மட்டும் உங்களுடைய குறைகளை நினைத்து துயரப்படுகின்றீர்களென்பதை சற்று கவனியுங்கள். இம்மாதமாகிய துல்ஹஜ்ஜாகிறது வருஷத்தின் முடிவான மாதமாகையால் இதிலேனும் உங்கள் குறைகளை நிவர்த்தி செய்துகொள்ளுங்கள். மேலும் சிறந்த மாதங்களுள் இது ஒன்றாகும். நபிகள் நாயகமும் இவ்வாறே அருளிச்செய்துள்ளார்கள். அபூபக்கர், உமர், உதுமான் (ரலி) இவர்களது பரக்கத்தைக்கொண்டு அல்லா(ஹ்) இடத்தில் உதவி தேடிக்கொள்ளுங்கள். நிச்சயமாய் உமர், உதுமான் (ரலி) இவர்களிருவரும் அக்கிரமமாய்க் கொல்லப்பட்டார்கள்.

இவ்விதமாகக் கொல்லப்படுவதை நாயகம் (ஸல்) அவர்கள் ஏற்கனவே அறிவித்திருந்தார்கள். உஹது மலையில் அபூ பக்கர், உமர், உதுமான் (ரலி) ஆகியவர்கள் நபிநாயகத்துடன் இருந்தபொழுது அம்மலை அசைய ஆரம்பித்தது. அப்பொழுது தங்கள் காலால் அம்மலையை மிதித்து "ஓ உஹதே! அசையாதிரு, உன்மீது ஒரு நபியும் ஒரு சித்தீக்கும் இரண்டு ஷஹீதுகளுமேயன்றி வேறு எவருமில்லை" என நபிபெருமான் (ஸல்) அவர்கள் திருவுளமானார்கள்.

இப்னு அப்பாஸ் (ரலி) உமருப்னுல்கத்தாப் (ரலி) (அவர்கள் மரணித்த பிறகு) என் கனவில் காட்டும்படி ஆண்டவனிடம் துவாச்செய்தேன். (அப்படியே அல்லா(ஹ்) எனக்குக் காட்டினன்) நான் அன்னரைப்பார்த்து "மரணமடைந்தபின் எதைச்சந்தித்தீர்கள் என வினவினேன். அதற்கு பதிலிறுக்கையில் அல்லா(ஹ்)வை அன்புடையவனாகவும், தயாளமுள்ளவனாகவும் சந்தித்தேன். அவனது கருணை என்மீது உண்டாயிருக்கவில்லையேல் என் கதி மிக்க கஷ்டத்திலாய்விடும் என்றார்கள். (ஹதீஸ்)

ஏ நன்னம்பிக்கையுடையவர்களே! நீங்கள் (கஷ்டங்களைச்) சகித்துக்கொள்ளுங்கள், மேலும் சகித்துக்காட்டுங்கள் பிறகு (உங்களைத்) தற்காப்புச் செய்துகொள்ளுங்கள். மேலும் நீங்கள் ஜயம் பெறுவதற்காக(ச்சகல காரியங்களிலும்) ஆண்டவனை அஞ்சிக்கொள்ளுங்கள். (அல்—குர்ஆன், 3—199.)

---

# ஒவ்வொரு வெள்ளிக்கிழமையிலும் ஓதப்படும் இரண்டாம் குத்பா.

மஹா பெரியவனும், மேன்மையானவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே சர்வ புகழும் உரியதாகும். அவன் ஒப்புவமையற்றவன், தூயவன் "அவனைப்போல் யாதொன்று மில்லை. அவன் கேள்வியுடையவன் பார்வையுடையவன்." தனித்தவனும் ஆற்றலுடையவனும் இணையில்லா அரசனுமாகிய அல்லா(ஹ்)வைத்தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை எனவும், நபிகள் பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லா(ஹ்)வின் அடிமையும் அச்சுறுத்துபவரும் மாராயம் கூறுபவருமான திருத்தூதராவர் எனவும் சாக்ஷியம் பகருகின்றேன். அல்லா(ஹ்) இவர்கள்மீதும், இவர்களது தோழர்கள் கிளைஞர்கள்மீதும் சதா தன் கருணை மாரியை சொரிந்தருள்புரிவானாக!

அல்லா(ஹ்)வின் அடிமைகளே! உங்களுக்கும், முதலாவதாக எனக்கும் அல்லா(ஹ்)வை பயந்துகொள்ளுமாறு உபதேசிக்கின்றேன்.

சகோதரர்களே! அல்லா(ஹ்)வை அஞ்சவேண்டிய பிரகாரம் அஞ்சுங்கள். மேலும், அவனது அன்பைக் கொள்ள முயலுங்கள். மார்க்கத்தை தீர்க்கஆராய்ந்து

வேதத்தை உய்த்துணருங்கள். நீங்கள் அறிவிழந்தவர் களாயின் அறிவுபடைத்தோர்களிடம் கேட்டறிந்துகொள் ளுங்கள். தொழுகையை கடைப்பிடித்தொழுகுவதுடன் ஏழைவரி செலுத்துவதையும் பற்றிப்பிடித்துக்கொள்ளுங் கள். ஒற்றுமையையும் பரஸ்பர அன்பையும் கைக்கொண்டு உங்களுள் பகைமையையும், பிளவையும் ஷைத்தான் உண்டு பண்ணிவிடுவனது பயந்துகொள்ளுங்கள். நற்கருமங்களை எடுத்தேவி தீய கருமங்களை விலக்குங்கள். நிற்க, சிறப்புற்ற இந்நாளில் இறுதி நபியான நபிகள்பிரான் (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்தைமிகுதிப்படுத்திக்கொள்ளுங்கள். இறைவா! நாயகம் இப்ராஹீம் (அலை) அவர்கள்மீதும், அவர்களுடைய கிளைஞர்கள்மீதும், உன் கிருபாமாரியை சொரிந்ததேபோல் நம்முடைய நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள்மீதும், அவர்களுடைய கிளைஞர்கள்மீதும் உன் கிருபா மாரியை சொரிந்தருள்வாயாக!

குறிப்பாக தோழர்களுள் தன்மையானவர்களும் மேன்மைவாய்ந்தவர்களுமான நமது நாயகம் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள்மீதும், உண்மை பேசுபவர்களும் வஹியையொத்த யோசனையுடையவர்களுமான உமர் (ரலி) அவர்கள்மீதும், வெட்கத்திற்கும் அறிவிற்கும் உறைவிட மான உஸ்மான் (ரலி) அவர்கள்மீதும், கீர்த்திவாய்ந்த வர்களும் "அல்லா(ஹ்)வின் ரலி" என பேரோங்கியவர் களுமான அலி (ரலி) அவர்கள்மீதும், நாயகமவர்களது திருப்பேரர்களான இமாம் ஹஸன் இமாம் ஹுஸைன் (ரலி) ஆகியவர்கள்மீதும், இவர்களின் அன்னை பெண்கள் நாயகமா கிய பாதிமா (ரலி) அவர்கள்மீதும், நாயகத்தினது தந்தை

யின் சகோதரர்களாகிய ஹம்ஸா, அப்பாஸ் (ரலி) ஆகியவர்கள்மீதும், சுவர்க்கவாசிகளென நன்மாராயம் கூறப்பெற்ற பத்துப்பேர்களுள் எஞ்சியவர்கள்மீதும், அன்ஸார் முஹாஜிரீன்கள் மற்றும் தோழர்கள்மீதும், (ஸலவாத்தை சொல்வீர்களாக!) இறைவனே! எனக்கும் இங்கு குழுமி இருக்கும் ஸர்வ முஸ்லிம்களுக்கும் பிழை பொறுத்தருள்வாயாக! குர்ஆன்வழியில் சீராய் நடத்தக்கூடிய ஒரு முஸ்லிம் இமாமையும் எங்களுக்கருள்புரிவாயாக! இறைவனே! உன் நபியவர்களது மார்க்கத்திற்கு உதவி செய்பவர்களுக்கு நீயும் உதவி புரிவாயாக! நபியவர்களது மார்க்கத்திற்கிடற் செய்பவர்களுக்கு நீயும் இடற்செய்வாயாக! சகோதரர்களே! நிச்சயமாய் அல்லா(ஹ்) நீதம் செய்வதையும் உதவி புரிவதையும் பந்துக்களுக்கு உதவுவதையும்ஏவுகின்றான். கெட்டதையும் வெறுக்கத்தக்கவைகளையும் அக்கிரமத்தையும் விலக்குகின்றான். நீங்கள் உபதேசம் பெறும்பொருட்டு அவன் உங்களுக்கு உபதேசிக்கின்றான். நிச்சயமாக அல்லா(ஹ்)வின் உபதேசம் மிக மேன்மையானதும், சிறப்புவாய்ந்ததுமாயிருக்கின்றது.

# விஞ்ஞாபனம்.

தற்கால நிலைமையை அனுசரித்து பொதுமக்களுக்குப் பிரயோஜனந் தரத்தக்க நூல்களைத் தமிழில் பிரசுரிக்கும்நோக்கத்தைக்கொண்டு வேலைசெய்துவரும் இஸ்லாமிய நூற்பிரசுரச்சங்கத்தால் ஓர் அச்சியந்திர சாலையும் சொந்தத்தில் ஸ்தாபிக்கப்பெற்றுள்ளது.

ஆதலால், தங்கள் கல்வியைக்கொண்டு பொதுமக்களுக்குப் பிரயோஜனமளிக்க விரும்பும் நூலாசிரியர், மொழிபெயர்ப்போர் முதலிய உலமாக்கள் கல்விமான்கள் தங்களால் இயற்றப்பெற்ற அல்லது மொழிபெயர்க்கப்பெற்ற நூல்களை நமது அச்சியந்திரசாலையில் பதிப்பிக்க விரும்பின், அவர்களுக்கு வேண்டிய சகல சௌகரியங்களையும் செய்து கொடுப்போம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

தவிர, எங்களுடைய சங்கத்தின் ஆதரவில் நூல்கள் எழுதவோ, மொழிபெயர்க்கவோ விரும்புவோர் விபரத்திற்கு எழுதவும்.

ஆ. கா. அப்துல் ஹமீது (பாகவி),
இஸ்லாமிய நூற்பிரசுரச்சங்கம்,
பாலக்கரை, திருச்சி.